

கும்பகோணம் மகாமகா விழாவில் தீர்த்தவாரிக்கு எழுந்தருளும்
ஆதிகும்பேசுவரர்க்குத் தீபாராதனை நிகழும் காட்சி.



முகப்பு:

அருள்மிகு நடராசப் பெருமான் திருவுருவம், (உதவியவர்) திரு. கே. சீதாராமன், கோவை.

# திருக்கோயில்

ஆசிரியர்: ந. ரா. முருகவேள், M.A., M.O.L.

மாலை: 22 | சித்தார்த்தி ஆண்டு-மாசித் திங்கள்-பிப்ரவரி-1980 | மணி: 5

## சந்தாதாரர்களுக்கு வேண்டுகோள்!

திருக்கோயில் திங்கள் இதழின் சந்தாதாரர்களாகச் சேர விருப்பமுள்ளவர்கள்,

ஆணையர் அவர்கள்,
அறநிலைய ஆட்சித்துறை,
சென்னை — 600 034

என்ற முகவரிக்கு மணியார்டர் மூலம் பணம் அனுப்பிச் சந்தாதாரராகச் சேர்ந்து கொள்ளலாம்.

ஜனவரி முதல் டிசம்பர் வரை உள்ள காலம், சந்தா ஆண்டு எனக் கணக்கிடப்படும். இடைப்பட்ட காலத்தில் சந்தாதாரராக விரும்புவோர், முழு ஆண்டிற்குரிய சந்தாத் தொகை ரூ. 15—00 உடன், இடைப்பட்ட காலத்தில் உள்ள மாதங்களுக்கு, ஒரு இதழ் ரூ. 1—25 வீதம் சேர்த்துப் பணம் அனுப்பிச் ''சந்தாதாரர்'' ஆகலாம்.

தனிப்பட்ட 'சந்தாதாரர்கள்' ஒவ்வொருவரும் நேரடியாக, ஆணையர் அலுவலகத்திற்கே மணியார்டர் மூலம் பணம் அனுப்புமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறது.

பழைய சந்தாதாரர்கள், கடிதம் எழுதும் பொழுதும், பணம் அனுப்பும் பொழுதும், தங்கள் சந்தா எண்ணையும் தவறாமல் தெரிவித்து உதவினால்தான், உடனுக்குடன் ஆவன செய்ய வசதியாக இருக்கும். புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பும்பொழுது, மணியார்டர் கூப்பனில், புதிய சந்தா என்பதைக் குறிப்பிடுமாறும், சரியான முழு முகவரியைப் பின்கோட் [PINCODE] எண்ணுடன் தெரிவிக்குமாறும், கேட்டுக்கொள்ளப்படுகிறது.

வெளிநாட்டுச் சந்தாதாரர்களின் முகவரிகள் அனைத்தும செவ்வனே பதிவு செய்து வரிசைப் படுத்தப் பெற்று அவர்கள் எல்லோருக்கும் முறையாக இதழ்கள் அனுப்பப்படுகின்றன. தற்பொழுது வெளிநாட்டுச் சந்தாதாரர் ஒவ்வொருவருக்கும் ஆண்டு ஒன்றுக்கு அஞ்சல் செலவு மட்டுமே ரூ. 9—60 ஆகின்றது. ஆதலால் வெளிநாட்டுச் சந்தா, ரூ. 20—00-ல் இருந்து ரூ. 25—00 ஆக ஜனவரி 1978 முதல் மாற்றி அமைக்கப்பட்டது. வெளிநாட்டுச் சந்தாதாரர்கள் அவ்வப்போது தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளக் கேட்டுக் கொள்ளப்படுகின்றனர்.

## பொருளடக்கம்

# திருவருட்பாவில் ஒரு சொற்றொடர்

"முத்தமிழ்க் காவலர்"
திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள், திருச்சி.

## 1. அருட்பாவின் சிறப்பு :

தமிழகத்தில் நான்கு நூல்களுக்குச் சிறப்புகள் உள்ளன. முதல் சிறப்பு பகவத் கீதைக்கு; அது மனிதன் கேட்கக் கடவுள் சொன்னது என்பதால். இரண்டாவது சிறப்பு, திருவாசகத்திற்கு, இது கடவுள் கேட்க மனிதன் சொன்னது என்பதனால். மூன்றாவது சிறப்பு திருக்குறளுக்கு; அது மனிதன் கேட்க மனிதன் சொன்னது என்பதனால். நான்காவது சிறப்பு, திருவருட்பாவிற்கு; இது மனிதரிலும் அருளாளர்கள் கேட்க, அருளாளர் கூறியது என்பதனால். இச்சிறப்பே அருட்பாவிற்கு ஒப்புயர்வற்ற பெருமையையும், சிறப்பையும் தருவதாகும்.

## 2. பெயர்ச் சிறப்பு ;

தமிழ் நூல்களில் ஐந்து நூல்கள், தம் பெயரையே தமக்குச் சிறப்பாகப் பெற்றுத் திகழ்கின்றன;

1. மந்திரங்கள் பல. திரு சேர்ந்த மந்திரம், ஒன்றே ஒன்று. அது. திருமந்திரம்.
2. வாசகங்கள் பல. நானும் நீங்களும் பேசுவதெல்லாம் வாசகம் தான். ஆனால் திரு சேர்ந்த வாசகம் ஒன்றே ஒன்று, அது திருவாசகம்.
3. கோவை பல. தஞ்சை வாணன் கோவை, திருவெங்கைக்கோவை, திருவாரூர்க்கோவை என்பன. ஆனால், திரு சேர்ந்த கோவை ஒன்றே ஒன்று மணிவாசகர் அருளிய திருக்கோவை.
4. குறள்களும் பல. அவை ஔவைகுறள் முதலியன. ஆனால் திரு சேர்ந்த குறள் ஒன்றே ஒன்று. அது திருக்குறள்.
5. அருட் பாக்களும் பல. அருளாளர்கள் பாடிய பாக்கள் அனைத்தும் அருட்பாக்களே. ஆனால் திரு சேர்ந்த அருட்பா ஒன்றே ஒன்று. அது திருவருட்பா.

## 3. திருவருட்பா :

ஆறு திருமுறைகள், அதாவது ஆறு பகுதிகள், 399 பதிகங்கள். 5818 பாடல்கள். இதில் அருட்சோதி அகவல் ஒரு மலைபோன்றது. அதன் ஒவ்வொரு அடியும் அதன் படிகளைப் போன்றது. இவையே அருட்பாவின் அமைப்பு. இறைவனை முன்னிறுத்தி 5818 பாடல்களைப் பாடிய ஒரே புலவன், ஒரே அறிஞன், ஒரே ஞானி வள்ளலார்.

## 4. இறைவனைக் கண்டது :

உலகில் உள்ள அறிஞர்களும், ஞானிகளும் இறைவனைத் தேடித் தேடி அலைகிறார்கள். ஆனால் வள்ளலார் உள்ளம் ஒன்றுதான், இறைவனது இருப்பிடத்தைத் தேடி, அது மனிதரது உள்ளம் என்று கண்டு ஆனந்தக் கூத்தாடியது. இக் கருத்தை அருட்பாவில் உள்ள ஒரு பாடல் மிக அருமையாக முழக்கிக் கொண்டிருக்கிறது. அது:

''எத்துணையும் பேதமுறாது எவ்வுயிரும் தம்முயிர்போல் எண்ணி,
ஒத்துரிமை உடையவராய் உவக்கின்றார் யாவர்
அவருளந்தான் எம்பெருமான் சுத்த சத்துருவாய்
நடம்புரிகின்ற இடம் எனத் தேர்ந்தேன்....''

என்ற அருட்பா. இப்பாடலின் எத்துணையும் என்ற சொல்லுக்கு இரு பொருள்கள். ஒன்று எந்த அளவும் என்பது. மற்றொன்று எள்அளவும் என்பது.

அப்படி எள் அளவும் பேதமுறாமல் வேற்றுமையுணராமல் எல்லா உயிர்களையும் தம் உயிரைப்போலக் கருதுகின்ற மக்கள் உள்ளந்தான் இறைவன் குடிகொள்ளும் இடம் என்று இந்த அருட்பா முடிவுகட்டிக் கூறுகிறது. இக்கருத்தைத் தெளிவாக அனுபவ மாலையில் உள்ள நூறு பாடல்கள் விளக்கிக் கொண்டிருக்கின்றன. அதில், தானும் இறைவனும் கலந்த நிலையை ஒரு பாடல் கூறுகிறது. அது:

''அறியாத பருவத்தே எனை வலிந்து அழைத்தே
ஆடல் செய்யும் திருவடிக்கே பாடல் செயப் பணித்தார்
செறியாத மனச்சிறியேன் செய்த பிழையெலாம்
திருவிளையாட் டெனக் கொண்டே திருமாலையணித்தார்
பிரியாம லென்னுயிரில் கலந்து கலந்து இனிக்கும்
பெருந்தலைவர் நடராசர்''

## 5. ஆட்சி :

நாடுகளை ஆட்சிபுரிகிறவர்கள் இறைப் பற்று உள்ள நன்மக்களாக இருக்க வேண்டும் என்று வள்ளலார் பெரிதும் விரும்பி வாழ்த்து கிறார். அதுமட்டுமல்ல, அது இல்லாத ஆட்சி கள் அனைத்தும் ஒழியவேண்டும் என்றும் கருது கிறார். இக் கருத்தினை அருட்பாவின் 5618-வது பாடல், அடியிற் கண்டவாறு கூறுகிறது.

கருணையிலா ஆட்சி கடுகி ஒழிக
அருள்நயந்த நன்மார்க்கர் ஆள்க—தெருள்நயந்த
நல்லோர் நினைத்த நலம்பெறுக நன்றுநினைந்து
எல்லோரும் வாழ்க இசைந்து

## 6. வணங்குதல் :

பிறரைக் கண்டால் உடனே வணங்க வேண்டும் என்றும், அதுவும் அவர்கள் வணங் கும் முன்னே நாம் வணங்கவேண்டும் என்றும் வள்ளலார் கருதுகிறார். இக் கருத்தையே நபி கள்நாயகம் அவர்களும் சலாம் செய்வதில் முந் திக்கொள் என்று கூறியிருக்கிறார். மற்றவர்கள் கைகூப்பிய பின்னருங்கூட மரியாதைக்காகக் கூப்பாத கைகளை வள்ளலார் கொடுங்கைகள் என்று சாடுகிறார். இக்கருத்தை ''அடுத்த வர் கரங்கள் கூப்பினும் கூப்பாக் கொடுங்கை'' என 3344-வது பாடல் கூறுகிறது.

## 7. வட்டி :

3351-வது பாடல் சமுதாயத்திலுள்ள மக் களின் போக்கைச் சாடுகிறது. வட்டியைப் பெருக்கி ஏழைகளின் மனைகளைக் கவர்வதும், ஓட்டைச் சட்டியைப் பிறர் வைத்திருந்தாலும் அதைக் கண்டு பொறாமை கொள்வதும், சூது கள் நிறைந்த மனதைப் பெறுவதும், நல்லவர் கள் பெரியவர்கள் மனம் வெறுக்கும்படி நடப்ப தும் தவறு என்று கண்டிக்கிறார். அதைப்பிறர் செய்வதாக இல்லாமல் தன்மேல் ஏற்றி, அப் படிப்பட்ட என்னை இறைவா நீ காத்தருள் என்று இறைவனை வேண்டுகிறார். அப்பாடல்:

''வட்டியே பெருக்கிக் கொட்டியே ஏழை
மனைகவர் கருத்தினேன் ஓட்டை
சட்டியே எனினும் பிறர்கொளத் தரியேன்
தயவிலேன் சூதெலாம் அடைந்த
பெட்டியே நிகர்த்த மனத்தினேன் உலகில்
பெரியவர் மனம்வெறுக்கச் செய்
எட்டியே மண்ணாங் கட்டியே யனையேன்
என்னினும் காத்தருள் எனையே''

## 8. திறந்த உள்ளம் :

அடுத்து ஒருபாடல். ''இறக்கவும் ஆசை யில்லை. இப்படி நான் இருக்கவும் ஆசையில்லை. இனிநான் பிறக்கவும் ஆசையில்லை. பெரியவர் பெரியவர் என்று சிறக்கவும் ஆசையில்லை. விசித்திரங்கள் செய்யவும் ஆசையில்லை. துறக்க வும் ஆசையில்லை. துயரடைந்து தூங்கவும் ஆசை ஒன்றில்லை'' என்று பிள்ளைச் சிறு விண் ணப்பத்தில், வள்ளலார் தன் உள்ளத்தைத் திறந்து காட்டுவது நம் உள்ளத்தையெல்லாம் சுடுகிறது.

## 9. மரணமிலாப் பெருவாழ்வு :

அருட்பாவில் மிக உயர்ந்து நிற்கின்ற பாடல் ஒன்று, அது:

''நினைந்து நினைந்து உணர்ந்து உணர்ந்து
நெகிழ்ந்து நெகிழ்ந்து அன்பே நிறைந்துநிறைந்து
ஊற்றெழுங் கண்ணீரதனால் உடம்பு
நனைந்து நனைந்து அருளமுதே நன்னிதியே ஞான
நடத்தரசே என்னுரிமை நாயகனே என்று
வனைந்து வனைந்து ஏத்துதும் நாம் வம்மின்
உலகியலீர்! மரணமிலாப் பெருவாழ்வில்
வாழ்ந்திடலாம் கண்டீர், புனைந்துரையேன்
பொய்புகலேன், சத்தியம் சொல்கிறேன்''

இப்பாடல் மூலம் வள்ளலார் தாம்பெற்ற பெரும் பேற்றைப் பெற உலக மக்களையெல் லாம் அழைக்கின்ற அந்தப் பேரன்பு. நம்மை யும் நினைக்கச் செய்து, உணரச் செய்து நம் உள்ளத்தையும் நெகிழச் செய்கிறது.

## 10. பட்டபாடு :

திருவருள் முறையீடு என்ற பகுதியில், ''நான் படும்பாடு சிவனே உலகர் நவிலும் பஞ்சுதான் படுமோ சொல்லத்தான் படுமோ எண்ணத்தான் படுமோ'' என்ற பாடலும், 'பட முடியாதினித் துயரம், பட்டதெல்லாம்போதும்' என்று இறைவனிடம் முறையிடும் பாடலும், அவர் இவ்வுலகில் பட்ட பாடுகளையெல்லாம் நமக்குக் காட்டிக் கொண்டிருக்கின்றன.

## 11. உடலை எரித்தல்:

உயிர் பிரிந்த பிறகு உடலை எரிப்பதை மனம் வருந்திக் கண்டிக்கிறார். அதைப் பின் வரும் பாடலால் அறிய முடிகிறது.

''அணங்கெழுபேர் ஓசையொடும் பறையோசை
பொங்கக் கோரணி கொண்டந்தோ
பிணங்கழுவி எடுத்துப் போய் சுடுகின்றீர்
இனிச் சாகும் பிணங்களே நீர்,
கணங் கழுகுண்டாலும் ஒரு பயனுண்டே,
என்ன பயன் கண்டீர் சுட்டே!
எணங் கெழு சாம்பலைக் கண்டீர்—அது
புன்செய் எருவுக்கும் இயலாதன்றே!''

## 12. மூன்று தேவைகள்:

வள்ளலார் இறைவனிடத்தில் மூன்று தேவைகளைக் கேட்கிறார். அவை புண்படா உடம்பும், புரைபடா மனமும், பொய்படா ஒழுக்கமும் என்று வேண்டுகிறார். அந்த வேண்டுதலும், இவைகளைப் பெற்று இரவும் பகலும் கண்படாது நின் தனையே கருத்தில் வைத்து ஏத்துதற்கு என்று வேண்டுகிறார். இது அவருக்கல்ல, நமக்கு. உடம்பு புண்படாது, மனம் புரைபடாது, ஒழுக்கம் பொய்படாது இருக்க வேண்டும் என்பது கருத்து. இப்பேற்றை நாமும் பெறவேண்டும் என்று அருட்பா வற் புறுத்துகிறது.

இம்மரபைப் பின்பற்றி மாணிக்கவாசகர் இறைவனைப் பல பெயரிட்டு அழைக்கிறார். அவை ''சோதியன், துன்னிருள், தோன்றாப் பெருமையன், ஆதியன், அந்தம் நடுவு இம் மூன்றும் இல்லான் ,நோக்கரிய நோக்கு, நுணுக் கரிய நுண்ணுணர்வு போக்கும் வரவும் புணர் வுமிலாப் புண்ணியன், காக்கும் எம் காவலன், காண்பரிய பேரொளி என்பன.

தாயுமான அடிகளும் இதே மரபைப் பின் பற்றி அரும்பொன், மணி, என்அன்பு, என் அன்பான அறிவு, அறிவில்ஊறும் ஆனந்த வெள்ளம், வேதம், வேதாந்தம், மேதக்க கேள்வி, பூமிக்குள் வித்து, வித்தின் விளைவு, கண்கருத்து, எண்எழுத்து, கதிக்கான மோன வடிவு என்று, இறைவனுக்குப் பலவாறு பெய ரிட்டிருக்கிறார்.

இம்மரபைப் பின்பற்றியே நம் வள்ளலா ரும் இறைவனுக்கு ஆயிரம் திருநாமங்களைச் சூட்டியிருக்கிறார். ஏன் அதற்கு மேற்பட்ட பெயர்களையும் அருட்பா ஒன்றில்தான் காண முடியும். எடுத்துக்காட்டாகச் சிலவற்றை மட் டும் கூறுகிறேன்.

## இறைவனது திருப்பெயர்கள்:

1. அடைமொழிகளுடன் சில: ''அம்பலத் தரசு, ஆனந்தத்தேன், புலவரெலாம் புகழ்க் கண்ணியன், மலைதரு மயில், மடமயில், மதி முகஅமுது, கண்ணுரமுது, சித்தசிகாமணி, குணப்பெருங்குன்று, ஞானதேசிக மாமணி, கண்ணளிக்கும் கண், களிப்பருளும் களிப்பு, மாற்றறியாத செழும்பசும்பொன் என்பன.

2. உறவின் முறையில் சில: அவை, ஐயன், அப்பன், அண்ணன், அத்தன், தந்தை, தாய் காதலன் என்பன.

3. சுவைக்கும் பொருள்களாகச் சில: கற் பகக்கனி, கற்கண்டு, அமுது, தேன், பால், சர்க்கரை, கரும்பு, பாகு, பழம் கனிரசம் முதலி யன.

4. காணக் கூடியவையாகச் சில: அவை, அரசு, அமைச்சு, இளம்பிறை, மான், மயில், குயில், குன்று, மலை, கடல், மலர், சுடர், கண், சோலை, தரு, விளக்கு, சோதி, குரு, அழகு, அக்கரை, இக்கரை முதலியன.

5. கண் காணாப் பொருள்களாகச் சில: சிவம், தவம், அருள், அன்பு, கருணை, நாதம், ஒளி, ஒலி, வெளி, மதி, கதி, நலம், பரம், உயிர் முதலியன.

6. செல்வப் பொருள்களாகச் சில:பொன், மணி, முத்து, மாணிக்கம், ரத்தினம், நிதி, செல்வம், நன்மணி, நவமணி, பொன்மணி முதலியன. இவ்வாறு இறைவனுக்கு ஆயிரத்திற் கும் மேற்பட்ட பெயர்களை அருட்பாவில் மட் டுமே காணமுடிகிறது.

## திருமறை :

இது அருட்பெருஞ்சோதி, தனிப்பெருங் கருணை என்பது. இதை மகா மந்திரம் என்பர் வடமொழியினர். இதன் பொருள் இறைவன் ஒளி மயமானவன். அதுவும் பேரொளியினன், அதுவும் அருள்நிறைந்த பேரொளியினன் என் பதும், இறைவி கருணை வடிவினள், அதுவும் பெருங் கருணை வடிவினள், அதுவும் ஒப்பற்ற பெருங்கருணை வடிவினள் என்பதுமாகும். இது மணிவாசகப் பெருமான் இறைவனை '' அம் மையே அப்பா'' என்றழைத்த வழிமுறையைப் பின்பற்றியது போலும்.

## ஒளி வணக்கம்:

தொல்காப்பியர் தன் நூலில் கொடிநிலை, கந்தழி, வள்ளி எனக் குறிப்பிட்டுள்ளார். இம் மூன்றும் திரி, எண்ணெய், அகல் என்பவற்றைக் குறிப்பன என்று பசுமலை டாக்டர் நாவலர் சோமசுந்தர பாரதியார் கூறியிருக்கிறார். இவை பழந்தமிழ் மக்களின் ஒளிவணக்கத்தைக் காட்டு வனவாகும்.

தமிழகத்தில் மிகப் பழமையான கோவில் கள் மூன்று. அவை, சிதம்பரம், திருவொற்றி யூர், திருவாரூர். இம்மூன்றுள் கடைசியாகத் தோன்றியது திருவாரூர்க் கோவில். இது தோன் றிய காலத்தை நமது சமயாசாரியர்களில் ஒருவர் ''திசை எட்டும் திரிவதற்கு முன்னோ பின்னோ திருவாரூர் கோயிலாக் கொண்ட நாளே'' என ஐயத்தோடு கூறியிருக்கிறார். இதுவும் இன்று நேற்று கூறியதல்ல. 1300 ஆண்டுகளுக்கு முன்பு கூறியது. கடைசிக் கோயில் தோன்றியதே தெற்கு, வடக்கு, கிழக்கு, மேற்கு என்ற திசை கள் அமைவதற்கு முன்னோ பின்னோ என்று ஐயப்பாடுகொள்ளும் பொழுது, அதற்கு முன் தோன்றிய இரு கோவில்களின் காலத்தை எவ் வாறு அறிவது? இந்த மூன்று தொன்மையான கோயில்களிலும் கருவறையில், அதாவது மூலத் தானத்தில், உருவங்கள் ஒன்றுமே இல்லை. இம் மூன்றிலும் அக்காலந்தொட்டு இன்றும் ஒளி வணக்கமே நடைபெற்று வருகிறது. இன்றுங்கூட கோவில்களில் மக்கள் வழிபடும்பொழுது உருவ வணக்கத்தின் முன் கற்பூர வழிபாடும், அடுக்கு விளக்கு வழி பாடும் நடைபெறும் பொழுதுதான் இறை வழிபாடு உச்சநிலையை அடைகிறது.

**தைப்பூச விழா:** தமிழ் மக்களின் விழாக் காலமெல்லாம் நிலாக்காலத்திலேயே நடை பெற்று வருகிறது. சித்திரைமாதம் சித்திரை நட்சத்திரம் முழுநிலா, வைகாசி விசாகம் முழு நிலா, ஆனிமூலம் முழுநிலா, ஆடி உத்திராடம் முழுநிலா, ஆவணி அவிட்டம் முழுநிலா, புரட் டாசி கலைவிழா பத்துநாட்களும் வளர்நிலா, கார்த்திகை மாதக் கார்த்திகை முழுநிலா, மார் கழி திருவாதிரை முழுநிலா, தைப் பூசம் முழு நிலா, மாசிமகம் முழுநிலா, பங்குனிஉத்தரம் முழுநிலா. ஆக தமிழ் மக்களின் விழாக் கால மெல்லாம் நிலாக் காலத்திலேயே நடைபெற்று வருகின்றன.

வடலூரில் தைப்பூசத்தன்று, முழுநிலாக் காலத்தில், சோதி வழிபாடு நடைபெறுகிறது. அங்கு சத்திய ஞானசபை தெற்கு நோக்கி இருப்பதால், மக்கள் வடக்குநோக்கி நின்று, சோதி வழிபாடு செய்கின்றனர். அப்போது மாலைநேரத்தில் அவர்களுக்கு வலதுபுறம் நிலவு ஒளியும், இடதுபுறம் சூரியஒளியும், எதிர்ப் புறம் சோதி ஒளியும் தோன்றும். அன்றுகாலை நேரத்தில் ஒளிவணக்கம் செய்கிறவர்களுக்கு வலதுபுறம் சூரிய ஒளியும், இடதுபுறம் நில வொளியும், எதிர்ப்புறம் சோதிஒளியும் கிடைக் கும். இது இறைவனை முக்கண்ணனாக வழி படும் முறையாகவும் அமையும். இக்காட்சி, தைப்பூசத்தன்று வடலூரில் கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும். இதை வடலூரில் அன் றிப் பிற இடங்களில் காண இயலாது. ஆக இந்த அருட்பெருஞ்சோதி ஒளிவணக்க வழி பாடுங்கூட, பண்டைய பழந்தமிழ் மக்களின் ஒளி வணக்க மரபைச் சேர்ந்ததேயாகும்.

**சுகத்திலுறும் பயன் :**

திருநாவுக்கரசரைச் சுண்ணாம்புக் காள வாயில் போட்டுப் பூட்டியபின்னர், அவர் எத் தகைய சிறு துன்பமும் எய்தாமல் வெளிவந்த போது, அவர் பாடிய பாடல்

''மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நிழலே''

என்பது. இளவேனில், பொய்கை, மாலைமதி யம், தென்றல், மாசில்வீணை என்பவைகளைப் போலவே, இறைவனது திருவடியும் எனக்குக் குளிர்ச்சியாக இருந்தது. அதனால் எனக்கு எந்த இடையூறும் ஏற்படவில்லை என்பது இதன்பொருள். இதன் உள்ளே மற்றொரு புதைபொருளும் உண்டு. சிந்தித்தால் அதுவும் விளங்கும். அது ஐம்புலன்களுக்குக் குளிர்ச்சி யைத் தருகின்ற ஐந்து பொருள்களை அடக்கி யிருப்பது. மாசில் வீணை காதுக்குக் குளிர்ச்சி, மாலை மதியம் கண்ணுக்குக் குளிர்ச்சி, வீசு தென்றல் மூக்குக்குக் குளிர்ச்சி. இளவேனில் உடலுக்குக் குளிர்ச்சி மூசுவண்டறை பொய்கையின்நீர் நாவுக்குக் குளிர்ச்சி என்பது. திருநாவுக்கரசர் ஐம்பொறி களுக்கும் குளிர்ச்சியைத் தருகின்ற இவ் ஐந்து பொருள்களையும் தேடிக் குறிப்பிட்டிருப்பது எவ்வளவு பொருத்தமாக உள்ளது பார்த்தீர் களா !

திருநாவுக்கரசர் பெற்ற திருவடி இன் பத்தை, வள்ளற் பெருமானும் பெற்று அநு பவித்து மகிழ்ந்தார் என்பது நாம் கருதி மகிழ் தற்குரியது. வள்ளலார் தம் அருட்பாவில் ஆறாம் திருமுறையில், ''அருள்விளக்க மாலை'' யில் ஒரு பாடலைப் பாடியிருக்கின்றார். அப் பாடல்:

கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும்வகை கிடைத்த
குளிர்தருவே தருநிழலே நிழல்கனிந்த கனியே
ஓடையிலே ஊறுகின்ற தீஞ்சுவைத்தண் ணீரே
உகந்ததண்ணீர் இடைமலர்ந்த சுகந்தமண மலரே
மேடையிலே வீசுகின்ற மெல்லியபூங் காற்றே
மென்காற்றில் விளைசுகமே சுகத்தில்உறும் பயனே
ஆடையிலே எனைமணந்த மணவாளா பொதுவில்
ஆடுகின்ற அரசேஎன் அலங்கல்அணிந் தருளே

என்பது. இப்பாடலிலும் திருநாவுக்கரசர் பாட லில் உள்ளதுபோல, ஒரு புதைபொருளைக் கண்டு மகிழலாம். அது, கோடையிலே இளைப் பாறிக் கொள்ளும்வகை கிடைத்த குளிர், காதுக்குக் குளிர்ச்சி ; நிழல் கனிந்த கனி கண் ணுக்குக் குளிர்ச்சி; ஓடையிலே ஊறுகின்ற தீஞ் சுவைத் தண்ணீர் நாவுக்குக் குளிர்ச்சி; உகந்த தண்ணீரிடை மலர்ந்த சுகந்த மண மலர் மூக் குக்குக் குளிர்ச்சி; மேடையிலே வீசுகின்ற மெல் லிய பூங்காற்று உடம்புக்குக் குளிர்ச்சி என வள்ளலாரும் தமது அருட்பாவில் இறைவனை நம் ஐம்புலன்களுக்கும் குளிர்ச்சியைத் தரு கின்ற ஐந்து பொருள்களாகக் காட்டி மகிழ் கிறார்.

இந்த அளவுக்கு மட்டுமல்ல, வள்ளலார் இன்னும் ஒருபடி தாண்டி இறைவனை, இவ் வைந்து பொருள்களால் விளைகின்ற சுகமாக அதற்குமேல் அடைகின்றமுத்திப் பேற்றைச் சுகத்திலுறும் பயனாகவும் கூறி மகிழ்கிறார். இதுவும் அந்தப் பாரம்பரிய மரபின்வழி வந்த தாகவே தெரிகிறது.

இதுகாறும் கூறிய ஏழு செய்திகளாலும், வள்ளலார் மாறுபட்ட பாதையில் சென்றவ ரல்லர் என்பதும், திருமூலர் காலந்தொட்டு வாழையடி வாழையாக வந்த ஒன்றுபட்ட பார பரியத்தைச் சார்ந்தவர் என்பதும், அவரது கொள்கைகளும் நெறிகளும் திருமூலர் காலந் தொட்டுச் சான்றோர்களால் கையாளப்பெற்று வருவன என்பதும் நன்கு புலப்படும்.

**வள்ளலார் பெற்ற பெரும்பேறு :**

வள்ளலார் அருட்பாவின் ஆறாந் திரு முறையில் ''சன்மார்க்க உலகின் ஒருநிலை'' என்ற, தலைப்பில் அதன் இறுதிப் பாடலாக (5624-ஆம் பாடல்)

நோவாது நோன்பெனைப் போல் நோற்றவரும் எஞ்ஞான்றும்
சாவா வரம் எனைப்போல் சார்ந்தவரும்— தேவாநின்
பேரருளை என்போலப் பெற்றவரும் இவ்வுலகில்
யார்உளர்நீ சற்றே அறை''

என்ற பாடல் காணப்படுகிறது. ''நோவாது நோன்பு என்னைப் போல நோற்றவர் யார்? சாகாத வரம் என்னைப்போலப் பெற்றவர் யார்? நின்பேரருளை என்போலப் பெற்றவர் யார்? எந்த உலகிலாவது, யாராவது உண்டா? நீயே கூறு?'' என்று இறைவனையே கேட்ப தாக அமைந்திருக்கிறது இப்பாடல். இது அவர் பெரும் பேறுபெற்ற பெருமிதத்தையே காட்டுகிறது.

## 13. இறைவனை இப்போழுதே அடையலாம் :

இறைவனை உடனே அடையலாம் என்று அருட்பா கூறுகிறது. இதை ''இது தருணம், அப்பன் வரு தருணம், அத்தன் வரு தருணம். கணவர் வருதருணம், கைகலந்த தருணம், தழுவி நின்ற தருணம், மணவாளர் வருகின்ற தருணம், அருள்புரிந்த தருணம், அருளாளர் வருகின்ற தருணம், பதிவரும் ஓர் தருணமிது தோழி, சன்மார்க்கம் தலையெடுக்கப் பிரிகுவது இத்தருணம், களக்கமறப் பொது நடம் நான் கண்டு கொண்ட தருணம், பொற்சபையில் சிற் சபையில் புகுகின்ற தருணம் என்று பல இடங் களில் அருட்பா இறைவனை விரைவில் அடை யும் தருணத்தை வற்புறுத்திக் கொண்டிருக் கிறது. அதுமட்டுமல்ல. 3757-வது பாடல் ஒன்று. ''தருணநிதியே! என்றும், தருணத்திற்கு ஏற்றவா'' என்றும் அழைத்து, நினையடையும் இஞ்ஞான்றே என்றும் வற்புறுத்துகிறது.

### அருட்பாவில் ஓர் அடி :

எழுபது ஆண்டுகளுக்கு முன்பு. எனது ஆசிரியர் நாவலர் பண்டித ந.மு. வேங்கடசாமி நாட்டார் ஐயா அவர்கள் ''வள்ளலாரும் அருட் பாவும்'' என்னும் தலைப்பில் சிறந்த தொரு சொற்பொழிவு ஆற்றக் கேட்டேன். அதற்குச் சில ஆண்டுகளுக்குப் பின்னர் அறிஞர்கள்''வள் ளலார்'' என்றும், ''அருட்பா'' என்றும் தனித் தனியே பிரித்துப் பேசி வந்தனர். அதற்கும் பின்னர், திருவருட்பாவில் முதல் திருமுறை, இரண்டாம் திருமுறை, மூன்றாம் திருமுறை, நான்காம் திருமுறை என்று தலைப்புக் கொடுத் துப் பேசிவந்தனர். அண்மைக் காலத்தில் அருட் பாவில் ஓர் அடி, அருட்பாவில் ஒரு சொற் றொடர் என்பது போன்ற தலைப்புக்களில் சொற்பொழிவுகள் நிகழ்த்தப்படுதலைக்கண்டும் கேட்டும் வருகின்றேன். அம்முறையினைப் பின் பற்றி ''அருட்பாவில் ஓர் அடி'' என்னும் தலைப்பில் சில கருத்துக்களை உங்களுடன் சேர்ந்து சிந்திக்க விரும்புகின்றேன்.

### வாழையடி வாழை :

இக்காலத்தில் சிலர் வள்ளலார் மீது தவ றான கருத்துக்களைப் பரப்பி வருகின்றனர். அது வள்ளலார் புராணங்களை வெறுப்பவர் எனவும், சமயங்களை மறுப்பவர் எனவும், நாத்திகர் எனவும் தூற்றுவதாகும். இது வேண் டுமென்றே சிலர் செய்யும் தவறுகள். வள்ள லார் சாதிபேதங்களைப் போக்க விரும்புவத னாலும், மூடப் பழக்கவழக்கங்களைவெறுப்பத னாலும், சிலர் மனம்பொறாது இத்தகைய தவ றான கருத்துக்களைப் பரப்பி வருகின்றனர். இக்கூற்றுக்கள் அனைத்தும் உண்மையல்ல. இராமலிங்கவள்ளலார் ஒரு சிறந்த ஆத்திகர்; ஒரு நல்ல பாரம்பரிய மரபைத் தழுவியவர் என்பதை மெய்ப்பிக்க அடியிற் கண்டவைகளை உங்கள் முன் வைக்கின்றேன்.

1. அகச்சான்று: இது அருட்பாவின் ஒரு பாவில் உள்ள, ஓர் அடியில் உள்ள ஒரு சொற் றொடர். அது ''வாழையடி வாழை'' என்பது.

''வாழையடி வாழையென வந்ததிருக்கூட்ட
மரபினில் யான் ஒருவன் அன்றோ''

இறைவனையே நோக்கி ''இறைவா நான் உன் அடியார் பரம்பரையில் தோன்றிய வன் அல்லவா?'' என்று உரிமைக்குரல் எழுப்பு கின்ற அவரது வாக்கு இது.

2. வாழையடி வாழை மரபு: இச்சொற் றொடரில் மரபு என்ற ஒரு சொல் இருக்கிறது. அந்த மரபு எது என்று ஆராய வேண்டும். இறுதிக் காலத்தில் தோன்றிய ஞானிகள் மூவர். அவர்கள் பட்டினத்தார், தாயுமானவர், இராம லிங்க அடிகள். இம்மூவரும் துறவி, ஞானி, புலவர் என்றாவர். இம்முறையில் பார்த்தால் இராமலிங்க அடிகளுக்கு முந்திய மரபு தாயு மானவர் என்று தெரிகிறது. அடிகள் முற்பிறப் பில் தாயுமானவரே எனத் தண்டபாணி சுவாமி கள் கூறுகிறார். தாயுமானவருக்கு முந்திய மரபு ஏது? தாயுமானவர் வாக்கிலிருந்தேஇதைக் கண்டுபிடிக்கவேண்டும் அல்லவா? அவருடைய குரு மௌனகுரு. திருச்சிராப்பள்ளி மலைக் கோட்டையிலுள்ள மௌன மடத்தில் வாழ்ந்த வர். தாயுமானவர் அவருக்கு வணக்கம் செலுத் தும்போது, ''மந்திர குருவே, யோக தந்திர குருவே, மூலர் மரபில் வரு மௌன குருவே'' என்று வணக்கம் செலுத்தியிருக்கிறார். இதி லிருந்து இந்த மரபிற்கு மூலம் மூலர். அவர் திருமூலர் என்று தெரிகிறது. ஆக, இப்பொழுது நமக்கு ஒரு மரபு கிடைத்து விட்டது. முதலில் திருமூலர், பிறகு சித்தர்கள், அடுத்துத் தொல் காப்பியர், திருவள்ளுவர்; பிறகு சமயாசாரி யர்கள், சந்தான ஆசிரியர்கள், நாயன்மார்கள், பட்டினத்தார், தாயுமானவர், இராமலிங்க அடிகள் எனக் கொள்ளவேண்டியிருக்கிறது.

### திருமூலர் :

இத்தனைபேரும் திருமூலர் மரபையே சார்ந்திருக்கிறார்கள். அந்த மரபை விட்டுமாற வில்லை என்பதற்குச் சில எடுத்துக்காட்டுகள்: திருமூலர் திருமந்திரத்தில் முதல் தந்திரம் 137-வது பாடலில் ''திருவடியே சிவமாகும். திரு வடியே சிவலோகம் சித்திக்கும், திருவடியே செல்லும் கதி. திருவடியே தஞ்சம்'' எனக்கூறி யுள்ளார். இறைவனை வணங்க அவனது திரு வடியைப் பற்றுக் கோடாகக் கொள்ளவேண் டும். இது திருமூலர் கருத்து.

### திருவள்ளுவர் :

இதனையே திருவள்ளுவரும் பின்பற்றித் திருக்குறளில் முதல் அத்தியாயத்தில் இறை வணக்கத்தில் உள்ள பத்துக் குறள்களில் திரு வடியையே கூறியிருக்கிறார். நான்கு குறள் களில் தாள்கள். அவை ''வாலறிவன் நற் றாள், தனக்குவமை இல்லாதான் தாள், அற வாழி அந்தணன்தாள், எண்குணத்தான்தாள் என நான்கு. மூன்று குறள்களில் அடி. அவை ''மலர்மிசை ஏகினான் மாணடி, வேண்டுதல் வேண்டாமை இலான்அடி, இறைவன் அடிஆகிய மூன்று. ஆக திருவடி ஏழு.

**மணிவாசகர் :**

பின்னர் இம்மரபில் தோன்றிய மணிவாசகர் விடுவாரா? திருவடியை. திருவாசகத்தில் முதல் பகுதியில் சிவபுராணத்தில் இறைவணக்கம் செலுத்தும்பொழுது ''நமச்சிவாய வாழ்க நாதன்தாள் வாழ்க, இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க, கோகழி யாண்ட குருமணிதன் தாள் வாழ்க, ஆகமமாகி நின்றண்ணிப்பான் தாள் வாழ்க'' என்றே அவன் தாள்களைக் குறிப்பிட்டு வாழ்த்துகிறார். இதிலும் நான்கு தாள்கள். இத்தோடு விட்டாரா? வள்ளுவர் தாள்களோடு அடியையும் சேர்த்துக் கூறியிருக்கிறாரல்லவா ! அதனையும் பின்பற்றி மணிவாசகர் அடுத்துக் கூறுகிறார். ''ஈசன் அடிபோற்றி, எந்தை அடி போற்றி, தேசன் அடி போற்றி, சிவன் சேவடி போற்றி'' என்று இறைவனது திருவடிகளையும் குறிப்பிட்டுப் போற்றியிருக்கிறார்.

**சம்பந்தர் :**

அடுத்து, திருஞானசம்பந்தர் திருவாவடுதுறைப் பதிப்பத்தில் ''இடரினும் தளரினும் எனதுறுநோய் தொடரினும், உனகழல்தொழுது எழுவேன்'' என்றும் ''வாழினும் சாவினும் வருந்தினும் போய் வீழினும் உனகழல் விடுவேன் அல்லேன்'' என்றும், ''உண்ணினும் பசிப்பினும் உறங்கினும், நின் ஒண்மலர் அடியலால் உரையாது என் நா'' என்றும், இறைவனின் திருவடியையே தாம் உறுதியாகப் பற்றியிருப்பதைக் கூறுகின்றார்.

**திருநாவுக்கரசர் :**

இந்த மரபில் வந்த திருநாவுக்கரசரை நீற்றறையில் வைத்துப்பூட்டி, ''இந்நேரம் அவர் எலும்பும் சாம்பலுமாகியிருப்பார்'' என்று எண்ணிக் கதவைத் திறந்து பார்த்தபோது அவர் உயிரோடு வெளியில் வந்தார். அங்கிருந்தோர் ''எப்படி உயிர்பிழைத்தீர்கள்?'' என்று கேட்டதற்கு ''என்னை இறைவனது திருவடி நிழலில் வைத்திருந்தேன், அந்த இணையடி நிழல் என்னைத் தகிக்கவில்லை, குளிரச் செய்தது'' என்றார்.

**சுந்தரர் :**

அடுத்து சுந்தரமூர்த்தி சுவாமிகளும் திருப்பாண்டிக் கொடுமுடியில் பாடிய தேவாரப் பாவில், ''மற்றுப்பற்று எனக்கு இன்றி நின் திருப்பாதமே மனம் பாவித்தேன்'' என்று தாம் இறைவனின் திருப்பாதங்களையே இடையறாது தம் மனத்தில் பாவித்துத் தியானம் புரிந்து வருதலைக் குறிப்பிடுகின்றார்.

இந்த மரபினைப் பின்பற்றியே வள்ளலார் அவர்களும் மூன்றாம் திருமுறையில் ''பரசிவம் சின்மயம் பூரணம் சிவபோகபாக்கியம் பரம நிதியம்'' எனத் தொடங்கும் ஒரு பெரும் பாடலைத் திருவடிப்புகழ்ச்சி என்னும் தலைப்பில் அத்திருமுறையின் முதற்பாடலாகப் பாடித் தொடங்கியிருக்கின்றார். அதுமட்டுமல்ல. 'திருவடிப் பெருமை'' என ஆறாம் திருமுறையில் 45 பாடல்களைப் பாடியிருக்கின்றார். இது வள்ளலார் பண்டைப் பெரியோர்களின் பாரம்பரிய மரபை விட்டுச் சிறிதும் விலகவில்லை என்பதற்கு ஒரு சிறந்த நல்ல சான்றாகும்.

இனி நமது சிந்தனைக்கு ஒரு கேள்வி. வாழையடி வாழையாக வந்த இத்தனைபேரும் ஏன் திருவடியையே நினைந்து அதனையே பற்றிப் போற்றியிருக்கிறார்கள்?ஏன் தலையை, முகத்தை, முடியை, மார்பை, கைகளைச் சொல்லவில்லை. சிந்தித்தால் ஒரு உண்மை புலப்படுகிறது. தலையை முகத்தைப் பார்த்தால் சிவன் ,விஷ்ணு, பிரம்மா, முருகன்,விநாயகன், ஏசு, புத்தர் எனத் தெய்வங்களின் வேற்றுமைகள் புலப்பட்டுவிடுமாம். திருவடி ஒன்றையே பார்த்து வணங்குவதால் எவ்வித வேற்றுமையும் தோன்றாது. யாருடைய திருவடி என்றும் தெரியாது. ஏன்? இன்னும் ஒரு படி தாண்டிச் சிந்திக்கலாம். திருவடிகளை மட்டும் பார்த்து வணங்கும் பொழுது அது ஆண் திருவடியா? பெண் திருவடியா? என்றும் தோன்றுவதில்லை. எப்படி இந்த வேற்றுமையற்ற வணக்கம்? வள்ளலார் கண்ட சமரச சன்மார்க்கம் இதுவே என்றாகிறது. இதுவும் திருமூலர் மரபிலிருந்து மாறவில்லை என்பதையே நமக்குக் காட்டுகிறது.

**சாதி சமய பேதமில்லாமை :**

ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்பது ஏறத்தாழ 3000 ஆண்டுகட்கு முன்பு வாழ்ந்த தமிழ்ப்பெருமகன் திருமூலரின் வாக்கு.இதையே பின்பற்றி, இதற்கு ஒரு விளக்கம் கூறுவது போல வள்ளலார் தன் அருட்பாவில்''ஒன்றே சிவமென்று உணர்ந்து இவ்வுலகமெலாம் நன்றே நடுமையுற்று நண்ணியே'' எனப் பாடியிருக்கிறார். இது உலகமக்களின் ஒருமைப் பாடு. வள்ளலார் இதற்கு ''ஆன்ம நேய ஒருமைப்பாடு'' எனப் பெயரிட்டிருக்கின்றார். ''சாதி, மதம்,சமயம் எனும் சங்கடம்''என்றும் ''சாதியிலே, மதங்களிலே, சாத்திரக் குப்பைகளிலே'' என்றும், சாதி, குலம், சமய வேற்றுமைகளைக் கண்டித்த பாடல்கள் பலவற்றை அருட்பாவில் காணலாம். இதுவும் மூலர் மரபையே காட்டுவதாகும்.

**ஆயிரம் திருநாமம் :**

''ஒருநாமம் ஓருருவம் ஒன்றுமிலார்க்கு ஆயிரம் திருநமம் பாடித் தெள்ளேணம் கொட்டாமோ'' என்பது நமது முன்னோர் கருத்து. இவ்வழியில் நமது திருநாவுக்கரசர் இறைவனது திருநாமத்தைப் பற்றி,

''மைப் படிந்த கண்ணாளும் தானும் கச்சி
மயானத்தான்
வார்சடையன் எண்ணின் அல்லன்
ஒப்புடையன் அல்லன், ஓர் ஊரன் அல்லன்
ஓர் உவமன் இல்லி
அப்படியும் அந்நிறமும் அவ்வண்ணமும் அவனருளே
கண்ணாகக் காணின் அல்லால்
இப்படியன், இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவன்
இறைவன் என்றெழுதிக் காட்டொணாதே''

எனக் கூறியிருக்கின்றார்.

மற்றொரு பாடல் இன்னும் அதிகமான பேறு பெற்றதைக் காட்டுகிறது. அது:

''அகத்தே கறுத்து புறத்துவெளுத்
திருந்த உலகர் அனைவரையும்
சகத்தே திருத்திச் சன்மார்க்க
சங்கத் தடை வித்திட, அவரும்
இகத்தே பரத்தைப் பெற்றுமகிழ்ந்
திடுதற் கென்றே எனை, இந்த
உகத்தே இறைவன் வருவிக்க
உற்றேன் அருளைப் பெற்றேனே''

என்பது. இப்பாடலின்மூலம் வள்ளலார் தான் எதற்காகப் பிறப்பிக்கப் பெற்றேன்? எதற்காக வருவிக்கப்பெற்றேன்? எதற்காக இந்த அருளைப் பெற்றேன்? என்பனவற்றை அவரே கூறுவதாக உள்ளது. இப் பா, அவரது தெளிவையும் உறுதியையும், பெற்ற பெரும்பேற்றையும் நமக்குத் தெளிவாகக் காட்டுகிறது.

இறுதியாக அவருடைய கொள்கைகளையும், அவர் வகுத்த நெறிமுறைகளையும், அவர் எதிர்பார்த்த அளவுக்கு மக்கள் ஏற்றுக்கொள்ளவில்லை என உணர்ந்து, அவர் 'கடை விரித்தேன் கொள்வாரில்லை'' என்று கூறி, தைப்பூச நன்னாளில் சித்திவிளாகத்தில் ஒரு அறைக்குள் சென்று கதவைமூடி அருட்பெருஞ்சோதி ஆண்டவராகிய இறைவனோடு இரண்டறக் கலந்துவிட்டார். இவ்வாறு அவர் சித்தியடைந்த நாள் 30.1.1874. இது இவ்வுடம்போடு இறைவனை அடையும் சித்தர் பெருமக்களின் முத்திப் பேற்றையே நமக்கு விளக்கிக் காட்டுவதாக இருக்கிறது. அவர் அன்று''கடை விரித்தேன். கொள்வார் இல்லை'' என்று கூறியது, அவர் எதிர்பார்த்த அளவு இல்லை என்பதாம். என்றாலும், இன்று அவரது கொள்கைகள் தமிழ்நாட்டிலும் இந்தியாவிலும், ஆசியா கண்டத்திலும், ஆஸ்திரேலியா, ஐரோப்பா, அமெரிக்காக் கண்டத்திலும் வெகு வேகமாகப் பரவி வருகிறது.

ஆண்டுதோறும் வடலூரில் தைப்பூசத்தன்று பல லட்சக்கணக்கான மக்கள் கூடிசோதி வழிபாடு நடத்துகின்றனர். உலகில் இனிகடும் நாத்திகத்திற்கோ, கடும் ஆத்திகத்திற்கோ இடம் இராது. எதிர்காலம் இனி சன்மார்க்கத்திற்குத்தான். காரணம் சன்மார்க்கம் எல்லா மார்க்கங்களையும் தன்னுள் அடக்கிக்கொண்டு ஒளிவீசுவதேயாகும்.

**முடிவுரை :**

வள்ளலார் மக்களின் போக்கைக் கண்டு வாடினார். சமுதாயத்தின் குறைகளைக் கண்டு சாடினார். அவற்றைப்போக்க இறைவனது திருவருளைத் தேடினார், அதற்காக 5818 பாடல்களைப் பாடினார். தமது நெறிமுறைகளை மக்கள் ஏற்காதது கண்டு சித்திவிளாகத் தனி அறைக்குச் சென்று கதவை மூடினார். இறைவனோடு இறைவனாக இரண்டறக் கலந்து கூடினார் என்ற சொற்களோடு இந்த எனது கட்டுரையை முடிக்கிறேன்.

## பிள்ளையார் சுழி

பிள்ளையார் சுழி என்பது, அகரம் உகரம் மகரம் ஆகிய மூன்றையும் அடக்கியுள்ள நாதப் பிரமம் ஆகிய ஓம் என்னும் பிரணவத்தின் ஆரம்ப வடிவம், இதில் உள்ள வட்டவடிவம் சிவசத்திபீடம் எனும் ஆவிடை என்றும், நீண்டு நிற்கும் கோடு மூலத்தம்பம் எனும் சிவலிங்கம் என்றும், சொல்லப்படும். இவற்றை முறையே விந்து என்றும், நாதம் என்றும் வழங்குவர். மேலும் பிள்ளையார் சுழியின் வட்ட வடிவு மூலாதாரபீடம் எனவும், நீளவடிவு அதன்கண் எழும் பிரமநாடி எனவும், அது மூலக் கணபதி நிலையம் எனவும், அக்கணபதி சொரூபம் ஆகிய பிரணவாதாரம் எனவும், எழுத்துக்களின் வித்து எனவும், வேதத்தலைதரு பொருளாய் விளங்கும் மௌனக்குறி அல்லது ஊமை எழுத்து எனவும் நூல்களில் வழங்கப்படும். யாதேனும் ஒரு பொருள் பற்றியோ, செய்தி குறித்தோ எழுதுவதற்குத் தொடங்கும் முன்னர்ப் பிள்ளையார் சுழியினைத் தீட்டிக் கொள்வதானது, ஒருவன்தான் செய்ய மேற்கொள்ளும் செயலை இடையூறு இன்றி நிறைவேற்றி அருளுமாறு, பிள்ளையார் திருவுருவினைப் பிடித்து வழிபடுவதனைப் போன்றதாகும். பிரமப் பொருளால் படைக்கப்பெற்ற பிண்டத்தின்கண் தாரக ஓங்காரம் எவ்விதம் அமைந்துள்ளதோ, அவ்விதமே 'ஓ' எனும் வடிவம் தமிழிலும், கிரந்தத்திலும் செவ்விதின் அமைக்கப்பட்டுள்ளது. அவ் ஓகாரத்தின் சுருங்கிய வடிவமே பிள்ளையார்சுழி என்பதாம். ஓகாரத்தின் ஓர் அடையாள வடிவமே, விநாயகர் ஆகிய பிள்ளையாரின் யானைமுக வடிவம் என்பது யாவரும் அறிந்ததொன்று.

—ஆசிரியர்.

# சிவஞான சுவாமிகளின் உவமைக் கவித்திறன்

ந. ரா. முருகவேள், M.A., M.O.L.

(முற்றொடர்ச்சி)

(3) அற்றேல், சூரியனும் சந்திரனும் வேறு வேறாகப் பிரித்தறியப்படுமாறு போலச் சிவனும் சீவனும் வேறு வேறு என்று பிரித்து அறியப்படுமோ எனின், நெய்யைவிட்டு வேறு பிரித்தறிய முடியாத எள்ளைப் போல, சிவனை விட்டுச் சீவனை வேறு பிரித்தறிய முடியாது, என்பது உணர்த்துதற்கு 'எள்ளும் நெய்யும்' (திலதைலம்) எடுத்துக் காட்டப் பெற்றன. எள்ளினின்று நெய் வேறு பிரிக்கவும் படுகின் றதே எனின், நெய் உள்ள வரையில்தான் எள் ளெனப்படுமேயன்றி, நெய் பிரிந்த பின்னர் 'சக்கை' எனப்படுமாதலின் இங்குப் பிரித் தறியப்படமாட்டாமைக்குத் 'திலதைலம்' என உவமை கூறியிருப்பது பொருத்தமேயாகும்.

**வேறாதல்:**

(4) நெய்யைவிட்டு எள் தனித்து நில் லாது எனின், சிவனைவிட்டுச் சீவனும்தனித்து நிற்றல் இல்லை என முடியும். சீவன் சிவனை விட்டுத் தனித்து நில்லாதாயின், சிவன் சீவ னுக்குப் பொருள்களை அறிவிப்பது எங்ஙனம்? எனின்—, தீயேயாயினும், தீயின் வேறாய் இரும்பு பிரிந்தும் நிற்றலைக் காண்கின்றோம். அதுபோலச் சிவன் சீவனின் வேறாகப் பிரிந் தும் நிற்பனாதலின், சிவன் சீவனுக்குப் பொருள் களை அறிவித்தல் இயலும். இவ்வுண்மையை உணர்த்துதற்கே தீயும் இரும்பும் உவமையாக வந்தன.

(5) தீயின் வேறாக இரும்பு தனித்து நிற்பினும், இரும்போடு இயைந்த தீயானது தனித்துக் காணப்படாதவாறுபோல, இறைவன் உயிர்களின் வேறாயினும் அவற்றோடு இயைந்து நிற்றலால் தனித்துக் காணப்பட மாட்டானோ? எனின்—, நீரோடு கூடிய உப் பானது நீரேயாயினும் நீரினின்று பிரிந்து உப்பு தனித்து நிற்கவும் பெறுமாறுபோல, உயிர்களோடு கலந்து நிற்கும் இறைவனும் உயிர்களைப் பிரிந்து தனித்தும் நிற்பன். இதனை உணர்த்துதற்கு 'நீரும் உப்பும்' உவமைகள் ஆயின.

(6) நீரும் உப்பும் ஒரு காலத்திற் சேர்ந்து பிறிதொரு காலத்துப் பிரிந்து நிற்பது போல, உயிரும் இறைவனும் ஒரு காலத்துச் சேர்ந்து மற்றொரு காலத்தில் பிரிந்திருக்கு மோ? எனின்—, காற்று வானத்தை விட்டு எக் காலத்தும் பிரிந்திராதவாறுபோல, உயிர்களும் எக்காலத்தும் இறைவனைவிட்டுப் பிரிந்திருக்க மாட்டா. இதனை உணர்த்துவதற்கே 'வான மும் காற்றும்' (விண், அநிலம்) உவமையாகக் கூறப்பட்டன.

**உடனாதல்:**

(7) காற்றுக்கு வானம் இடங்கொடுத்த லேயன்றி, காற்றை அசையும்படி செய்வ தில்லையே! அதுபோல இறைவன் உயிர்களுக்கு ஆதாரமாய் நிற்றலேயன்றி, அவற்றை இயக் கிச் செலுத்துதல் இல்லையோ? எனின்—, உடல் அழிவின்றி நிலைபெறுதற்கு ஆதார மாகிய உயிர், அவ்வுடலை அதனோடு உடன் நின்று இயைந்து செலுத்துவதுபோல, இறைவ னும் உயிரோடு இயைந்து நின்று இயக்கிச் செலுத்துவன் என்பதனை வலியுறுத்த, உட லும் உயிரும் உவமைகளாகப் போந்தன.

(8) உடலை உயிர் இயக்குதலை, சிவன் சீவர்களை இயக்குதற்கு உவமை கூறின், அதிற் பல பொருந்தாமைகள் தோன்றுகின்றன. உயி ரானது நனவின்கண் பரு உடலையும், கனவின் கண் நுண்உடலையும், உறக்கத்தின்கண் காரண உடலையும், அவ்வப்போது பிரிந்தும் கூடியும் இயக்குவதுபோல, இறைவனும் உயிர்களை இயக்குங்கால் கூடியும் பிரிந்தும் நிற்பான் போலும்! எனின்-, நீரினிடத்து நிழல் எக்கா லத்தும் பிரிப்பின்றிச் சேர்ந்து விரவி நிற்றல் போல, இறைவனும் உயிர்களிடத்துப் பிரிப் பின்றிச் சேர்ந்து விரவியே நிற்பான். இதனைத் தெளிவிக்கும் உவமையே 'நீர் நிழல்' என்பது.

(9) நிழலின் உதவியின்றியே, நீர் எக் காலத்தும் உவர்ப்பு கைப்பு இனிப்பு முதலிய சுவைகளைப் பற்றி அதுவதுவாய் நிற்கக் காண் கின்றோம். அதுபோல, இறைவனின் உதவி யில்லாமலேயே உயிர்களும் எக்காலத்தும் நுகர் பொருள்களைப் பற்றிக்கொண்டு, அதுவதுவாய் நிற்கவல்லனவோ? எனின்-, சூரியனின் ஒளி பக்கத்தில் இருக்கும்பொழுது அவ்வொளியைக்

கொண்டே பளிங்கின் ஒளியானது பலவகை நிறங்களைப் பற்றுதலும், சூரியனின் ஒளி உச்சிக்கு வருங்கால் பளிங்கின் ஒளி அச்சூரியனின் ஒளியோடு கலந்து ஒரு நிறத்தையும் பற்றாமல் இருத்தலும் போல, மலப்பிணிப்புஉள்ள காலத்தில் இறைவன் மறைந்து நிற்க, அவ்விறைவனின் துணையைக் கொண்டே உயிர்கள் நுகர்பொருள்களைப் பற்றுகின்றன. மலப்பிணிப்பு நீங்கி வீடுபேறு எய்தும் நிலையில் உயிர்கள் இறைவனோடு கலந்து நுகர்பொருள் ஒன்றையும் பற்றாது நிற்கின்றன. இதனைத் தெளிவுறுத்தவே ''உச்சிப்பளிங்கு' உவமையாயிற்று.

(10) உச்சி வேளையில் எதிர்ப்பட்ட பளிங்கு, தன் ஒளி மழுங்காது நிற்கும். அது போல முக்திக் காலத்து உயிர்க்குத் தற்போதம் கெடுதலில்லையோ, எனின்—, பகற்காலத்து விளக்கின் ஒளி சூரியனின் ஒளியில் அடங்கி நிற்றல்போல, முக்திக் காலத்தில் சீவன் தற்போதம் கெட்டு, சிவபோதம் உற்று நிற்கும். இவ்வியல்பை விளக்குதற்கே 'பகல் விளக்கு' உவமையாக அமைந்தது.

(11) பகற்காலத்து விளக்கு ஒளிமழுங்கிச் செயலற்றிருத்தல்போல, முத்திக் காலத்து உயிர்களுக்கு இன்பநுகர்ச்சி நிகழ்தல் இல்லையோ? எனின்-, பாலானது தன்சுவை முழுவதையும் தன்னோடு கலந்த நீருக்காக்கி, அந்நீரைத் தன்னுள் அடங்கி நிற்கச் செய்யுமாறு போல, இறைவனும் முக்திக் காலத்தில் தன் இன்பம் முழுதையும் உயிர்களுக்கே ஆக்கித் தன்னுள் அடங்கி நிற்கச் செய்வன். இதனை உணர்த்துதற்கே 'பாலும் நீரும்' உவமைகள் ஆயின.

(12) நீர் பாலோடு கூடியவழி, பாலின் சுவையாயும், பாலோடு கூடாதவழி தன்சுவையாயும் நிற்குமாறுபோல, உயிர் இறைவனோடு கூடியவழி இறைவனுக்குரிய இன்பமயமாயும், இறைவனோடு கூடாதவழி தனக்குரிய துன்பமயமாயும் நிற்குமோ? எனின்-, கண்ணானது ஒளியுடைய பொருளாயினும், அக்கண்ணொளி சூரியன் முதலிய பிற ஒளியின் துணையை இன்றி, ஒரு காலத்தும் எதனையும் அறியமாட்டாமைபோல, உயிரானது அறிவுடைப் பொருளேயாயினும், இறைவனையின்றி எக்காலத்தும் எப்பொருளையும் அறியவல்லது அன்று. இதனை வற்புறுத்துதற்குக் 'கண்ணும் இரவியும்' உவமை கூறப்பட்டன.

(13) கண்ணொளியும் சூரியனின் ஒளியும் கலந்து நிற்பினும், கண்ணும் சூரியனும் வேறு வேறு இடத்தில் இருத்தல்போல, உயிரறிவும் இறையறிவும் கலந்து நிற்பினும், உயிரும் இறைவனும் வேறுவேறு இடத்தில் இருத்தல் கூடுமோ எனின்,- கண்ணொளியின் உள்ளீடாய் விரவி நிற்கும் உயிரையின்றிக் கண்ணொளி நுகர்பொருளை அறியாதவாறுபோல, உயிரின் உள்ளீடாய் உயிர்க்குயிராய் நிற்கும் இறைவனை இன்றி உயிர் ஒன்றனையும் உணராது. ஆதலின் உயிரும் இறைவனும் வேறு வேறு இடத்தில் இராமல், ஓரிடத்திலேயே கலந்து நிற்கும். இதனை உணர்த்தும் உவமையே 'உணர்வுஒளி' என்பது.

பண்இசை, வெம் பரிதிமதி, திலதயிலம்,
தீஇரும்பு, பாணி உப்பு,
விண்அநிலம், உடல்உயிர், நீர் நிழல், உச்சிப்
பளிங்கு, பகல் விளக்கு, பால்நீர்,
கண்இரவி, உணர்வொளிபோல், பிரிவரிய
அத்துவிதக் கலவி காட்டித்
தண்ணளிவைத் தெனையாண்ட துறைசை
நமச்சிவாய குரு சரணம் போற்றி!

## முடிவுரை:

இங்ஙனம் இறைவனுக்கும் உயிர்களுக்கும் இடையேயுள்ள 'அத்துவிதம்' என்னும் பிரிப்பரியகலப்பின் பெற்றியினைத் தெளிவித்தினிது உணர்த்துதற்கு, மிகவும் பொருத்தமான 13 உவமைகளை முறையே தெரிந்தெடுத்து, நிரந்தினிது தொடுத்து நுணுக்கமாகப் பாடிச் சுருங்கக் கூறி, விளங்க வைத்தருளிய சிவஞான சுவாமிகளின் சிறப்பினை, யாம் என்னென்போம்! அவர்தம் அரிய இனிய நூல்களை நாம் அனைவரும் நன்கினிது ஆராய்ந்து கற்றுப்பயன் அடைய முற்படுவோமாக!

# திருவொற்றியூர் முருகன் திருவருள்

இமையம் பூத்த பனிகெழு சுனையில்
அமையா தாடிய உமைதரு புதல்வோய்!
எரிவிழித் திமைக்குந் திருநுதற் றந்தைக்கு
ஒருமொழி விரித்த தெருளுறும் உணர்வோய்!
வானோர் உறுகண் தீர்ப்ப மேலோர்
ஐவடி வேலைக் கையினில் எடுத்தோய்!
வேந்தன் தந்த ஏந்தெழிற் செல்விக்கு
வரைபுரை மார்பம் வரையாது அளித்தோய்!
குன்றவர் வளர்த்த பொன்றிகழ் வள்ளிக்குக்
கொழுகொம் பாகிய விழுமிய தோளோய்!
அருந்தமிழ்க் கீரனைப் பொருந்திக் காத்தோய்!
எம்மனோர்க் கெளிவந்த செம்மை யாள!
ஒருவ! சிறுவ! கருமயில் முருக!
மறைமுடி தன்னில் நிறைதிரு வுருவினை!
கண்ணும் உணர்வுங் கதுவாப் பெற்றியை!
ஐம்பெரும் பூதமும் ஆகி நின்றனை!
உலகுநின் னுருவே, ஒளிகள்நின் விழியே,
அலகிலாச் சமயத் தவ்வவர் தமக்குப்
பூலனே உருவின் நிலவுநை நீயே!
ஆறுநின் முகமே, ஐந்துநின் வடிவே,
நான்குநின் மொழியே, மூன்றுநின் கண்ணே,
இரண்டுநின் துணையே, ஒன்று நின் வேலே,
மருண்ட உணர்வொடு மாட்சிமை எய்தா
முருட னேற்கும் திருவருள் தருநையென்று,
யானறி யளவையின் ஏத்தத் தான்உவந்து
குறிப்பரும் இன்பத்துப் பிறக்கினன் எனையே!

—அருட்டிரு. மறைமலை அடிகள்,

திருவொற்றி முருகர் மும்மணிக் கோவை.

# காழிச் சீராம விண்ணகரின் செங்கண்மால்

டாக்டர் திரு ந. சுப்புரெட்டியார், M.A., Ph.D.

இவ்வுலகில் நாம் வாழும் நாட்களில் பகவதனுபவம் பெறுதலில் பலவகை உண்டு. அவற்றுள் ஒன்று ஈசுவரன் உகந்து கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கும் திவ்விய தேசங்களில் பேரவாக் கொண்டு ஆங்காங்கு எழுந்தருளியுள்ள எம்பெருமான்களின் அனந்த கல்யாண குணங்களை அனுபவித்துக் கொண்டு, எண்ணம்சொல் செயல்களினால் கைங்கரியம் செய்தலையே பொழுதுபோக்காகக் கொள்ளுதல் ஆகும். ஆழ்வார்பெருமக்களில் திருத்தலப்பயணத்தை மேற்கொண்டு அதிகமான திவ்விய தேசங்களைச் சேவித்தவர் திருமங்கையாழ்வார். இவர் அந்தந்த எம்பெருமான்களைச் சேவிக்கும் முறை மிகமிக நேர்த்தியானது. எம்பெருமான்களைச் சேவிக்கும் பாசுரங்கள் கம்பீரமான தமிழ் நடையில் அமைந்திருப்பதைக் கண்டு மகிழலாம்; பாடியும் அனுபவிக்கலாம்.

''தான்உகந்த ஊரெல்லாம்
தன்தாள் பாடிப்
.....................................
பூங்கோலை ஊர்தொழுதும்
போது நெஞ்சே!'' 1

என்பது அவர் வாக்கு. நெஞ்சை ஆற்றுப்படுத்தும் பாசுரம் இது. ''என் நெஞ்சமே, எம்பெருமான் திருவுள்ளம் உவந்து எழுந்தருளியிருக்கும் திருப்பதிகளுக்கெல்லாம் போந்து, அவனுடைய திருவடிகளைப் பாடி, வளப்பம் பொருந்திய திருக்கோவலூரைச் சேவிப்போம் வருவாயாக!'' என்கின்றார் இதில். இதே பாணியில் இன்னொரு பாசுரத்தில்,

''உலகம் ஏத்தும்
கண்டியூர் அரங்கம் மெய்யம்
கச்சிபேர் மல்லை என்று
மண்டினார் உய்யல் அல்லால்
மற்றையார்க் குய்ய லாமே?'' 2

என்று குறிப்பிடுவதும் சிந்திக்கத் தக்கது. இவற்றுள் கண்டியூர், திருவரங்கம், திருப்பேர்நகர் சோழநாட்டுத் திருப்பதிகள்; காஞ்சிபுரம், மாமல்லபுரம், தொண்டைநாட்டுத் திருப்பதிகள்; திருமெய்யம் என்னும் திருப்பதி பாண்டி நாட்டைச் சேர்ந்தது. இந்தத் திருப்பதிகளைப் பற்றிப் போற்றிக் கொண்டு அவற்றை அடைந்தவர் எவரோ அவர் உய்வை அடைவரே அல்லாமல், அங்ஙனம் செய்யாத மற்றையோர் உய்ய வழி இல்லை என்பது இவ்வாழ்வாரின் திருவுள்ளம். ஏனைய திருப்பதிகளையும் இவற்றுடன் சேர்த்துக் கொள்ளல் வேண்டும்.

திருச்சித்திரகூடத்தைப் பற்றிப் பேசும் போது ''தில்லைத் திருச்சித்திரக்கூடம் சேர்மின்களே''3 என்கின்றார்; காழிச் சீராமவிண்ணகரம் பற்றிப் பேசும்போது ''காழிச்சீராம விண்ணகரே சேர்மின் நீரே'' 4 என்கின்றார்; திருநறையூர் பற்றிப் பாடும்போது ''திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே''5 என்கின்றார். இப்படிப்பலதிருப்பதிகளையும் எடுத்துரைத்துச் 'சென்று சேருங்கள்-சென்று சேருங்கள்' என்றால், ''எந்தத் திருப்பதியில் சென்று சேர்வது'' என்று வைணவ அடியார் ஒருவரை மற்றோர் அடியார் கேட்க, அவர் அதற்கு ''ஆழ்வார் திருவாயில் நுழைந்து புறப்பட்ட திருப்பதிகள் எல்லாம் நாம் நுழைந்துபுறப்பட வேண்டியது பிராப்தம்'' என்று தகுந்த மறுமொழி பகர்ந்தது, வைணவசமூகம் நன்கு அறியும். இந்த ஆழ்வாரே ''பதியே பரவித்தொழும் தொண்டர்''6 என்று குறிப்பிடுவதால், எம்பெருமான் உகந்தருளின நிலங்களெல்லாவற்றிலும் சென்றுசென்று சேவிக்கவேண்டும் என்பது உட்கருத்து.

இந்த எண்ணங்கள் நம் சிந்தையில் குமிழியிட்டவண்ணம் நான் மாயூரம் காளியாகுடி அய்யர் விடுதியிலிருந்து, சீகாழிக்குப் புறப்படுகின்றோம். பேருந்து நிலையத்திலிருந்து சிறிது தொலைவு நடந்தே செல்லலாம். இரயிலில் வருவோர்

1. திருநெடுந்தாண்டகம்—6.
2. திருக்குறுந்தாண்டகம்—19.
3. பெரிய திருமொழி 3.3.
4. ,, 3.4.
5. ,, 6.6.
6. ,, 7.1:7.
7. மாயூரத்தில் நம்போன்ற திருத்தலப் பயணிகள் தங்குவதற்கு நல்ல விடுதி, பழைய முறையிலிருப்பினும் எல்லா வசதிகளும் உள்ளன.

சீகாழி நிலையத்தில் இறங்கிவரலாம். நிலையத்திலிருந்து அரை மைல் தொலைவிலுள்ளது திருக்கோயில். ஆழ்வார் திருத்தலப் பயணமாகப் பரிவாரங்களுடன் இத்திருப்பதிக்கு எழுந்தருளுங்கால் பரிவாரங்களுடன் வந்த சிலர் ''நாலு கவிப் பெருமாள் வந்தார்''8 ''பரகாலன் மத்தகஜம் வந்தார்!'' என்ற குரல் ஒலிகளைஎழுப்பி ஆழ்வாரின்பெருமையைஎடுத்தேத்திக்கொண்டு சென்றதாகவும், இவ்வூரிலிருந்த சில சைவ அடியார்கள் இக்கூட்டத்தின் முன்வந்து ''எங்கள் ஞானசம்பந்த மூர்த்தி நாயனார் இருக்கும் இடத்தில் இங்ஙனம் விருதூதிச் செல்லலாகாது' என்று சொல்லித் தடுத்ததாகவும், அதுகேட்டு, ஆழ்வார் சம்பந்தப்பெருமான் உள்ள விடத்திற்குச் சென்று அவருடன் வாதப்போர் செய்யத் தொடங்கினதாகவும், அப்போது நாயனார் ஆழ்வாரை நோக்கி, ''உம் கவித் திறத்தை யாம் காணுமாறு முந்துற முன்னம் ஒரு பாடல் பாடும்'' என்று சொன்ன தாகவும், உடனே ஆழ்வார் சீராமவிண்ணகர் எம்பெருமான்மீது ''ஒருகுறளாயிரு நிலமூவடி மண்வேண்டி''9 என்று தொடங்கி, ஒரு திருமொழியைப் பாடிய தாகவும் அதனைக்கேட்ட சம்பந்தப்பெருமான் மிகவும் வியந்து'' உமக்கு இவ்விருதுகள் யாவும் தகும், தகும்'' என்று சொல்லித் தமது வேலாயுதத்தை இவருக்குத் திருமுன்காணிக்கையாகச் சமர்ப்பித்து நன்கு பாராட்டி உபசரித்து வழிபட்டு மீண்டதாகவும் பெரியோர் கூறும் இதிகாசம் ஈண்டு நினைவு கூரத்தக்கது.

திருக்கோயிலில் நுழையும்போதே இத்திருப்பதி எம்பெருமானின்மீது ஆழ்வார்மங்களாசாசனம் செய்துள்ள திருமொழிப் பாசுரங்களைச் சிந்திக்கின்றோம். இத்திருப்பாசுரங்களின் பிற்பகுதி இத்திவ்விய தேசத்தைப் பற்றிய வருணனையையும், முற்பகுதி இங்கு எழுந்தருளியிருக்கும் எம்பெருமானைப் பற்றியும் எடுத்துரைக்கின்றன. இனி இத்திவ்விய தேசத்தின் வருணனையில்ஆழங்கால்படுவோம். சுற்றியுள்ள வயல்களில் சூல்கொண்டுள்ள சங்குகள் கருவுயிர்க்கும் நிலையிலுள்ளன; அங்கு உழுகின்ற எருதுகள் அங்கும் இங்கும் ஓடுகின்றன. இந்த அதிர்ச்சியினால் சங்குகள் முத்துக்களை ஈனுகின்றன. வெள்ளை வெளேரென்றிருக்கின்ற இந்த முத்துக்களைக் கொக்குகள் கண்டு கண்டு அவற்றைத் தம்முடைய முட்டைகள் என்று மயங்குகின்றன. அவற்றைச் சுற்றிச் சுற்றிப் பறந்து கொண்டுள்ளன. கழனிகளில் எங்கும் தாமரை மலர்கள் நிறைந்துள்ளன; மீன்கள் குறுக்கும் நெடுக்குமாகத் துள்ளிக் குதிக்கின்றன. கழனிகளில் பயிர்களினிடையே உள்ள நெய்தல், குவளை, குமுதம், தாமரை இவற்றைக் களைபறிக்கும் கடைசிமார்கள் நெய்தல், குவளை, மலர்களைத் தங்கள் கண்களாகவும், சிவந்த ஆம்பல் (குமுதம்) மலர்களைத் தங்கள் வாயாகவும், தாமரை மலர்களைத் தங்கள் முகமாகவும் மயங்கிக் களைபறியாமல் கழனியை விட்டு வெளியேறுகின்றனர். கடலில் உள்ள சங்குகள் அவ்விடத்தை இகழ்ந்து விட்டு நீங்கி, சீகாழியில்வந்து சேர்கின்றன. தாழைகள் நிறைந்த கழிகளில் திரிகின்றன. பின்னர் கழிகளைத் துறந்து கழனிகட்கு வருகின்றன; பின்னர் மழைநீர் வெள்ளமாகப் பெருகி வருகின்ற வாய்க்கால்களின் மூலம் ஊரிலுள்ள வீதிகளில் வந்து சேர்ந்து சங்குகளையும் முத்துகளையும் ஈனுகின்றன. அணில்கள் கிளைகிளையாகத் தாவித் தவழ்வதனால் பாக்குமரங்களின் பழுத்த காய்கள் உதிர்ந்து விழுகின்றன; அவை பலாமரங்களின் காய்களின் கனத்தால் தாழ்ந்து கிளைகளில் நெருங்கியிருக்கும் பருத்த கனியைப் பழுத்த பலாப்பழங்களின்மீதுவீழ்வதால் அவை நசுங்கித் தேனைப் பொழிகின்றன. வண்டுகள் தம்முடைய பேடையோடும் சேர்ந்து நீர்நிலைகளிலுள்ள தாமரைப் பூவில் புகுந்து தேனைப் பருகி, அங்கே உறங்கி அதன் பிறகு தாழை மடல்களில் பொருந்தியுள்ள பூந்தாதுக்களில் புரண்டு களித்து இசை பாடுகின்றன. இங்ஙனம் சீகாழியின் மருத நில வளத்தைக் காண்கின்றோம்.

சீகாழி நகரக் காட்சியில் ஈடுபடுவோம். நகரிலுள்ள பெரிய மாடங்களில் பதிக்கப்பெற்ற நீல மணிகள் அந்திப் பொழுதை ஆதாரமாகவுடைய இருளை அதிகப்படுத்துகின்றன; அவற்றின் நடுவே அழுந்தியுள்ள முத்துகள் குளிர்ந்த திங்களின் நிலவொளியைக் காட்டுகின்றன; இவற்றின் இடையிடையே அழுத்தப் பெற்றுள்ள பவளங்கள் எழுஞாயிற்றின் சிவந்த ஒளியைப் பரப்புகின்றன. நகரிலுள்ள மாளிகைகள் மலைபோல் உயர்ந்துள்ளன. அந்த மாளிகையின் மீதுள்ள தளத்தில் நின்று உடுக்கை இடைமாதர்கள் நட்புறவில் உரையாடி மகிழ்கின்றனர். அவர்களின் தாமரை போன்ற முகத்தின் ஒளியைக் கண்ட திங்கள் வெள்கி வருந்துகின்றன. நான்கு வேதங்கள், ஆறு அங்கங்கள், ஐந்து பெரு வேள்விகள், ஏழுசுரங்கள், வீதி நிறைந்த திருவிழாச் சிறப்புகள் ஆகியவற்றால் புகழ் பெற்றது இத்திருத்தலம்.

இனி திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானைப் பற்றிய ஆழ்வாரின் அனுபவத்தில் ஆழங்கால்படுவோம். எம்பெருமான் உலகளந்த பெருமாளாதலால் 'ஒருகுறளா' என்று தொடங்கி வாமன-திரிவிக்கிரம அவதாரத்தை அனுசந்திக்கின்றார்.

''ஒருகுறளா இருநில மூவடிமண் வேண்டி
உலகனைத்தும் ஈரடியால் ஒடுக்கி ஒன்றும்
தருகவெனா மாவலியைச் சிறையில் வைத்த
தாடாளன் தாளணைவீர்'' 10

[இருநிலம்-விசாலமான நிலம்; ஒடுக்கி-ஆக்கிரமித்து; மூன்றும்-மூன்றாவது அடிநிலத்தையும்; தாடாளன்-பெருமை பொருந்தியவன், முயற்சியுள்ளவன்; தாள்-திருவடி]

இத்திருத்தலம் 'தாடாளன் சந்நிதி' என வழங்குதலும் உண்டு. தனக்கு ஆயுள் மிகுதியுள்ளது என்று அகங்காரம் கொண்டிருந்த நான்முகனின் செருக்கை உரோமசன்மரைக் கொண்டு அடக்

---

8. நாலுகவிப்பெருமாள்-ஆசுகவி, மதுரகவி, சித்திரகதி, விஸ்தாரகவி என்ற நாலுவகையான கவித்திறங்களில் மிக்க வல்லமை பெற்றவர் என்றபடி.

9. பெரியதிருமொழி 3.4.

10. பெரிய திருமொழி 3:4:1.

கியவன்; சிவனின் சாபத்தைத் தீர்த்தவன். உரோமசன்மரின் வரலாறு இதிகாசபுராணங்களில் எங்கும் காணப்பெற்றிலது. பலர் மூலம் பலவாறாகக் கேட்ட கதையைச் சுருக்கிக் கூறுவர் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச்சாரிய சுவாமிகள். உரோமசன்மர் உடல்முழுவதும் கரடிபோல் அடர்ந்த மயிர்களையுடைய ஒரு மாமுனிவர். இவர் நீண்டகாலம் வாழ்ந்து எம்பெருமானைச் சிந்தனைசெய்ய விரும்பினார். ஒரு புண்ணிய நதிக்கரையில் தவம் செய்தார். பரந்தாமன் இவர்முன் சேவை சாதித்து அவர்விருப்பத்தைக் கேட்க, முனிவர் இந்த உடம்புடன் எம்பெருமானைத் தொழவிரும்புவதால், பல்லாயிரம் நான்முகனுக்குரிய ஆயுளைத் தந்தருளவேண்டினார். பரந்தாமனும் திருவுள்ளம் உவந்து ''மாமுனிவரே, நான்முகனுடைய ஆயுளை நீர் அறிவீர். ஒரு நான்முகன் காலம் சென்றால், உம்முடைய உடம்பினின்றும் ஒரு மயிர் இற்று விழக் கடவது; இப்படி ஒவ்வொரு நான்முகன் முடிவிலும் ஒவ்வொரு மயிராக இற்று' 'இனி உம்முடைய உடம்பில் ஒருமயிரும்இல்லை' என்று சொல்லத்தக்க நிலைமை நேரும் அளவும் நீர் வாழ்ந்திருக்கக் கடவீர்' என்று வரம் அருளினர் என்பது வரலாறு.

அடுத்து, கோலவராகாவதாரம் எடுத்துப் பூமிப் பிராட்டியாரை அண்டபித்தியினின்றும் விடுவித்துத் தம் கோட்டு நுனியில் வைத்தருளிய கோமான்; வாணனுடைய ஆயிரம் தோள்களைத்தம் கூராழியினால் அறுத்தெறிந்தவன்; வலிமிக்க ஏழு காளைகளை அடக்கிப் பின்னைப் பிராட்டியை மணந்த பெருமான்; இரணியனின் மார்பைப் பிளந்து அவனை முடித்தருளிய மாவீரன். சத்திரியர்களை இருபத்தொரு தலைமுறை கொன்று அவர்தம் குருதியால் தம் வமிசத்தில் மாண்டவர்கட்குத் தர்ப்பணம் செய்த பரசுராமனாக அவதரித்தவன். குவலயாபீடம் என்ற யானையைக் கொன்றொழித்தவன். வாலி, கவந்தன், விராதன் இவர்களை வானுலகத்திற்கு ஏற்றியவன். இராவணனுடைய பத்துத் தலைகளும் புற்றுச் சரியுமாப்போல கீழே இற்றுவிழச் செய்தவன். அழகெலாம் திரண்டு திகழும் சத்தியபாமாவுக்காக உம்பருலகச் சோலையினின்றும் பாரிசாத மரத்தைப் பிடுங்கி வந்த பெம்மான். சடைமுடியில் பிறையணிந்த சிவனை வலப்புறத்திலும், நான்முகனை நாபிக்கமலத்திலும், பெரிய பிராட்டியைத் திருமார்பிலும் வைத்துக் கொண்டுள்ளவன். இத்தகைய எம்பெருமான்தான் காழிச் சீராமவிண்ணகரில் கோயில் கொண்டுள்ளான். அவனை வணங்கும்பொருட்டு அத் திருத்தலத்திற்கு ஏகுவீர்'' என்று நம்போன்றவர்களை ஆற்றுப்படுத்துகின்றார் ஆழ்வார்.

இங்ஙனம் பாசுரங்களை மானசீகமாக அனுபவித்த நிலையில் தாடாளன் சந்நிதிக்கு வருகின்றோம். எம்பெருமானின் திருநாமம் தாடாளன், திரிவிக்கிரம மூர்த்தி; கிழக்கே திருமுகம் கொண்டு நின்ற திருக்கோலத்தில் பஞ்சாயுதங்களுடன் சேவை சாதிக்கின்றார். இடக்கால் தூக்கிய திருவடியாகவும், வலக்கை அபயம் தரும் பாவனையிலும், இடக்கை திருவடியில் பொருந்தியிருக்குமாறும் காட்சிஅளிக்கின்றார். தாயார் மட்டவிழும் குழலி நாச்சியார். எம்பெருமானையும் எம்பெருமாட்டியையும், திருமொழியின் பத்துப் பாசுரங்களையும் மிடற்றொலி கொண்டு ஓதி உளங் கரைகின்றோம். பயன் கூறும் பாசுரம்:

செங்கமலத் தயனனைய மறையோர் காழிச்
சீராம விண்ணகரின் செங்கண் மாலை
அங்கமலத் தறவயல்சூழ் ஆலி நாடன்
அருள்மாரி அரட்டமுக்கி அடையார் சீயம்
கொங்குமலர்க் குழலியர்வேள் மங்கை வேந்தன்
கொற்றவேற் பரகாலன் கலியன் சொன்ன
சங்கமுகத் தமிழ்மாலை பத்தும் வல்லார்
தடங்கடல்சூழ் உலகுக்குத் தலைவர் தாமே''

[அயன் - நான்முகன்; கமலம் - தாமரை, தடம்-குளம். ஆலிநாடன்-திருமங்கையாழ்வார். அருள்மாரி - அருளைப்பொழியும் மேகம்; அரட்டுஅமுக்கி - தீங்குசெய் வோரைத் தலையெடுக்க ஒட்டாது அமுங்கச் செய்பவர். அடையார் - பகைவர்; வேள் - விரும்பத்தக்கவர்; கொற்றம்-வெற்றி. பரகாலன் - எதிரிகட்கு எமன். சங்கம்முகம் - கூட்டம் கூடிக் கொண்டாடும்.]

இத்திருவாய்மொழியை ஓதவல்லவர்கள், கடல்சூழ்ந்த உலகத்திலுள்ளார்க்கெல்லாம் மேம்பட்டவராவார் என்கின்றார் ஆழ்வார். இப்பாசுரத்தில் திருமங்கையாழ்வாரின் விருதுகளாகிய அருள்மாரி அரட்டமுக்கி, அடையார் சீயம், பரகாலன், கலியன் போன்ற யாவும் ஒரு சேரக் கூறப்பெற்றுள்ளன. இவற்றின் பொருளைச் சிந்தித்து மகிழ்கின்றோம். இந்நிலையில், திவ்விய கவியின் பாசுரம் நினைவிற்கு வருகின்றது.

''செல்லுந் தொறும்உயிர்ப்பின்
செல்லும் உயிர்வினையை
வெல்லும் உபாயம்
விரும்புவீர்—தொல்லரங்கர்
சீராம விண்ணகரம்
சேர்மின்பின் மீளாத
ஊராம விண்ணகரம்
உண்டு.''12

செல்லும்தோறும் - உயிர் உடலைவிட்டு நீங்கும் இடமெல்லாம்; இருவினை -நல்வினை தீவினை. வெல்லும் - கடத்தற்குத்தக்க; உபாயம்-வழி; மீளாத - திரும்பிவருதல் இல்லாத; விண்ணகரம்-பரமபதம்.

சீராம விண்ணகரத்தைச் சேர்ந்தால் இருவினைகளையும் ஒழித்துப் பரமபதத்தில் நிலைத்து வாழலாம் என்கின்றார் அய்யங்கார். சக்கரவர்த்தித் திருமகள் எழுந்தருளியிருக்கும் சிறந்த நகரமாதலின் இது 'சீராம விண்ணகரம்' என்ற திருநாமம் பெற்றது. காளிவாழும்தலம் ஆதல்பற்றி இத்திருத்தலம் காழிச் சீராமவிண்ணகரம் என்ற பெயரயும் கொண்டது. இன்று இத்திருத்தலம் சீகாழி, சீயாழி என்று மக்களால் வழங்கப்படுகின்றது. இங்ஙனம் பல செய்திகளை அறிந்து, இறையனுபவம் பெற்ற நிலையில் நம் இருப்பிடத்திற்குத் திரும்புகின்றோம்.

**

12. நூற்றெட்டுத் திருப்பதிஅந்தாதி—24.

# "மலங்கள் ஐந்தாற் சுழல்வன்"

ந. ரா. முருகவேள், M.A., M.O.L.,

## முன்னுரை:

சைவத் திருமுறைகள் பன்னிரண்டில் எட்டாம் திருமுறையாகத் திகழ்வன, திருவாசகம், திருக்கோவையார் என்பனவாகும். திருவாசகம் 51 திருப்பதிகங்களைக் கொண்டது. அவற்றுள் ஒன்றாகச் சிறந்து விளங்குவது, நீத்தல் விண்ணப்பம். திருப்பெருந்துறையில் தம்மை ஆட்கொண்டருளிய இறைவன் மறைந்தருளிய பின்னர், 'இங்ஙனம் எளியேனை நீத்தல் (விட்டு நீங்குதல்)' தகுமா?' என்று இறைவன்பால் முறையிட்டு, மணிவாசகப்பெருமானால் பாடியருளப்பெற்றது நீத்தல் விண்ணப்பம்.

## நீத்தல் விண்ணப்பம்:

''நீத்தல் விண்ணப்பம்'' என்னும் சொற்றொடர், 'நீத்தலால் செய்யும் விண்ணப்பம்' என மூன்றாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகையாய் விரியும். இனி இவ்வாறின்றி, 'நோய்க்கு மருந்து' என்னும் தொடர், 'நோயைத் தவிர்த்தற்கு மருந்து' எனப் பொருள்படுதலின், 'நீத்தல் விண்ணப்பம்' என்பதனை நான்காம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகையாகக் கொண்டு 'நீத்தலைத் தவிர்த்தற்கு விண்ணப்பம்' என்று பொருள் கொள்ளுதலும் பொருந்தும். நீத்தல்-விடுதல், பிரிதல்.

அந்தாதி முறையில் பாடப்பெற்றுள்ள இதன் ஒவ்வொரு பாடலிலும், 'விட்டிடுதி கண்டாய்' அல்லது 'விடுதி கண்டாய்' என்னும் தொடர் அமைந்து வந்திருத்தல், இவ்வுண்மையைச் செவ்விதின் உணர்த்தும். 'விட்டிடுதி' என்னும் சொல்லில், விடு பகுதியும், இடு துணை வினையும், இகரம் எதிர்கால விகுதியும், தகரம் எழுத்துப் பேறுமாகும். (விடு - இடு - த் - இ). விட்டிடுதி, விடுதி என்னும் சொற்களுக்கு, விடுகின்றாய் அல்லது விடுவாய் என்பது பொருளாகும். அது காகு என வடமொழியிற் கூறப்படும் ஒலி வேற்றுமை முறையால், 'விட்டுவிடுவாயோ?' என வினாவாக நின்று, 'விடுதலாகாது, விடாமற் காத்தருளல் வேண்டும்' என்னும் பொருளை உணர்த்திற்று.

''விடுதிகொல் என்னை என்று
நீத்தல்விண் ணப்பம் என்னும்
தொடைகெழு பாடல் ஓதித்
துதித்தனர்''

எனக் கடவுள்மா முனிவர் பாடிய திருவாதவூரடிகள் புராணத்திலும்;

''மித்தை உலகினை அகற்றி,
விடாமல் எனைஆண் டருள்என்று,
அத்தர் அறிந்திட நீத்தல்
விண்ணப்பம் அறைந்ததுவாம்''

என்று மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் பாடிய திருப்பெருந்துறைப் புராணத்திலும், நீத்தல் விண்ணப்பம் என்பது பற்றி விளக்கப்பெற்றிருக்கும் குறிப்பு அறிந்து மகிழற்பாலது. 'நீத்தல் விண்ணப்பம்' திருவுத்தரகோசமங்கை என்னும் தலத்தில் பாடப்பெற்றது. இதற்குச் சான்றாக ஒவ்வொரு பாடலிலும், ''உத்தரகோசமங்கைக்கு அரசே'' என்னும் தொடர் பயின்று வந்திருத்தல் காணலாம். இதன்கண் வரும் ஒரு பாடலின் பொருளைக் ஈண்டு இயன்ற அளவு சுருங்கக் கண்டு மகிழ்வோம்!

குலம் களைந்தாய், களைந்தாய் என்னைக்
குற்றம்; சொற்றச் சிலையாம்
விலங்கல் எந்தாய், விட்டிடுதி கண்டாய்!
பொன்னின் மின்னு கொன்றை
அலங்கல் அம் தாமரை மேனி
அப்பா! ஒப்பு இலாதவனே!
மலங்கள் ஐந்தாற் சுழல்வன்
தயிரிற் பொரும் மத்துஉறவே!

## பாடலின் பொருள்:

''குலச்செருக்கு முதலிய குற்றத் தொகுதிகளைப் போக்கி அருளினை எனின், என்னைக் காமம் முதலிய குற்றங்களினின்றும் போக்கித் திருத்தியவன் ஆவாய்! மேருமலையாகிய வெற்றிதரும் வில்லையுடைய என் தந்தையே; என்னை நீ கைவிட்டு விடுவாயோ? பொன்னைப் போல் ஒளி விடுகின்ற கொன்றைமலர் மாலையை அணிந்த அழகிய தாமரை மலர்போன்ற திருமேனியை உடைய என் தந்தையே! ஒப்பற்ற முழு முதல்வனே! மத்தினால் வலிமையாகக் கடையப்பட்டுச் சுழலும் தயிரைப்போல, யான்

(ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி என்னும்) ஐந்து மலங்களால் தாக்கப்பட்டுச் சுழல்கின்றேன்'' என்பது, இதன் திரண்ட பொருள்.

**சொற்பொருட் நுட்பங்கள்:**

(1) உலகியல் வாழ்வில், குலம் இளமை கல்வி செல்வம் அதிகாரம் முதலியவற்றால் செருக்கும் மயக்கமும் நிகழ்ந்து கேடு பயத்தலின், இறைவன் அவற்றைத் தம்மிடமிருந்து அகற்றினான் என்பார் ''குலம் களைந்தாய்'' என்றார். குலம் என்பது ஏனையவற்றிற்கும் உபலக்கணம். ''வாழ்வெனும் மையல் விட்டு' என வரும் சிவஞானசித்தியார் செய்யுளில், வாழ்வெனும் மையலாவது குலம் இளமை கல்வி செல்வம் அதிகாரம் என்னும் இவை குறித்த செருக்கு' என மாதவச் சிவஞான சுவாமிகள் வரைந்திருத்தல் காண்க. 'வைத்தநிதி பெண்டிர் மக்கள் குலம் கல்வி என்னும் பித்தஉலகில் சித்த விகாரக் கலக்கம் தெளிவித்த வித்தகத் தேவன்' என்றும்; 'சாதி குலம் பிறப்பென்னும் சுழிப்பட்டுத் தடுமாறும் ஆதமிலி நாயேன்' என்றும், பிறவாம் மணிவாசகர் அருளிச் செய்திருத்தல் காணலாம்.

(2) குற்றங்களாவன, இயல்பால் வருவன என்றும், சார்பால் வருவன என்றும், பொதுவாக இருதிறப்படும். குலம் இளமை கல்வி செல்வம் முதலியவற்றால் வரும் செருக்குகள் சார்பால் வருவன. காமம்வெகுளி மயக்கம் முதலியன, இயல்பால் வருவன. சார்பினால் வரும் குற்றங்களினும், இயல்பால் வரும் குற்றங்கள் மிகவும் கொடியவை. ஆதலின்'களைந்தாய் என்னைக் குற்றம்' என்றார்.

(3) குலம் முதலியவற்றால் வருவன, செருக்கின்றி நல்வழியிற் செல்லுழி ஓரோவழிப் பெருமிதம் பயந்து இன்பமும் விளைவித்தலின், அவற்றைக் 'குற்றம்' என்னாது, பொதுப்படக் 'குலங்களைந்தாய்' என்ற அளவில் அமைந்தார்.

(4) 'என்னை' என்பது இடைநிலைத் தீவகம்; என்னைக் குலம்களைந்தாய் எனவும், என்னைக் குற்றம் களைந்தாய் எனவும் இயையும் அஃது 'என்பால்' என எழன் உருபிற்குரிய பொருள் பயந்தது. இஃது உருபு மயக்கம்எனப் படும்.

(5) மேரு மலையை வில்லாகக் கொண்டு திரிபுர அசுரர்களை எரித்து அழித்து வெற்றி கொண்டவன் ஆதலின், இறைவனைக்'கொற்றச் சிலையாம் விலங்கல்' என்றார்.

(6) ஈண்டு 'எந்தாய்' என்றது, எம்முடை தாய் போன்றவனே எனப் பொருள்படும். என்னை? பின்னர்த் 'தாமரை மேனி அப்பா' என வருதலின். கொற்றம்-வெற்றி. சிலை-வில் விலங்கல்-மலை.

(7) சிவபிரான் பிரணவம் என்னும் ஓங்காரத்துக்கு அறிகுறியாகக் கொன்றை மலர் மாலையை அணிதலானும், அது பொன்னிற முடையதாய் ஒளிவீசி மின்னுதலினாலும், அம்மாலையை அணியும் திருமேனி செம்மை நிறமுடையதாய்ப் பேரழகு வாய்ந்து திகழ்தலாலும், இறைவனை, ''பொன்னின் மின்று கொன்றை அலங்கல்அம் தாமரைமேனிஅப்பா'' என்றார். பொன்னின்-பொன்போல. அலங்கல் மாலை. 'செந்தாமரைக் காடனைய மேனித் தனிச்சுடரே' எனத் திருச்சதகத்தில் (36)வருதல் காண்க.

(8) இறைவனைத் தாயும் தந்தையும் போல்வன் என ஒப்புமைப்படுத்திக் கூறினும், அவன் இவர்களினும் மிக்கான் என்பார், ''ஒப்பில்லாதவனே'' என்றார்.

(9) தாம் இவ்வுலகியல் வாழ்வில் அகப்பட்டுக் கொண்டு துன்புறும் நிலையைச் ''சுழல்வன் தயிரிற் பொரும் மத்து உறவே'' என்றும்; அதற்குக் காரணமாவன இவைஎன்பார், ''மலங்கள் ஐந்தால்'' என்றும் கூறினார். 'மத்துறு தயிரே போல மறுகும் என் உள்ளம் தானே என்பர் திருநாவுக்கரசர் பெருமானும்.

(10) மலங்கள் ஐந்தாவன: ஆணவம் கன்மம் மாயை மாயேயம் திரோதாயி என்பன. உயிரின் அறிவை அணுவைப் போன்று சிறுமைப்படுத்தும் மூல மலம், **ஆணவம்**. உயிர்களுக்கு இன்ப துன்பங்கள் விளைவதற்குக் காரணமாக அமையும் நல்வினை தீவினை ஆகிய செயல்கள், **கன்மம்**. உயிர்களுக்கு அவற்றின் வினைக்கீடாக உடல் கருவி இடம் நுகர்பொருள் ஆகியவற்றைத் தருவது, **மாயை**. உயிர்களை மும்மலங்களும் பற்றி நிற்கும் தன்மை, நெல்லில் உமியும் தவிடும் முளையும் பொருந்தி இருப்பது போலும். மலங்களால் பிணிப்புண்ட உயிர் (பெத்தான்மா) நெல்போலும். ஆணவம் நெல்லின் உள்ள உமிபோலும். உமி அரிசியின் வடிவம் தெரியாமல் அதனை முழுவதும்மறைத்திருக்கும்; அதுபோல ஆணவமலம் உயிரறிவை முழுவதும் மறைந்துநிற்கும். மாயை, தவிடு போலும். தவிடு அரிசியின் இயல்பைச் சிறிது விளக்கும்; அதுபோல மாயாமலம் உயிரின் அறிவைச் சிறிது விளங்கச் செய்யும். கன்மம் நெல்லினின்று தோன்றும் முளையைப் போன்றதாகும். முளை தோன்றுமிடத்து அரிசியின் தன்மை விளங்காத அதுபோல, கன்மமலமாகிய நல்வினை தீவினைகள் செய்யப்படுங்கால், உயிர் அவற்றில் மயங்கிக் கிடத்தலால், உயிரின் இயல்பு விளங்காது நிற்கும். நெல்லினின்று உமியும் தவிடும் முளையும் நீங்கிய நிலையில் உள்ள **அரிசி**, முறையே ஆணவம் மாயை கன்மம் என்னும் மும்மலங்களும் நீங்கி, தூய்மை அடைந்து வீடுபேறு எய்திய நல்லுயிர் (முத்தான்மா)போலும்.

இங்ஙனம் உயிர்களைப் பற்றி நிற்கும் ஆணவம்-மாயை - கன்மம் என்னும் மூன்று மலங்களுடன், மாயேயம் - திரோதாயி என்னும் வேறு இரண்டு மலங்களையும், இறைவன் உயிர்களைப் பற்றச் செய்வர். மாயையிலிருந்து தோன்றி உயிர்களின் அறிவை மயக்குகின்ற தத்துவப்பொருள்களின் தொகுதி, **மாயேயம்** என்னும் மலகமாகும். உயிருடன் ஒன்றி மறைந்துநின்று ஏனைய மலங்கள் தத்

தமக்குரிய தொழில்களைச் செய்யுமாறு தொழிற்படுத்தி உயிர்களுக்குப் பக்குவத்தை வருவிக்கும் மறைப்பு ஆற்றல், திரோதாயி என்னும் மலமாகும். இவ்வாறு உயிர்களைப்பற்றி நிற்கும் ஐந்து மலங்களின் இயல்புகளைச் சரித்திர நூல்களில் விரிவாகக் காணலாம்.

மும்மலம், நெல்லி னுக்கு
முளையொடு தவிடு மிப்போல்
மம்மர்செய்து அணுவின் உண்மை
வடிவினை மறைத்து நின்று
பொய்ம்மைசெய் போக பந்த
போத்திருத் துவங்கள் பண்ணும்;
இம்மலம் மூன்றி னோடும்,
இருமலம் இசைப்பன் இன்னும்!

மாயையின் காரி யத்தை
மாயேய மலம தென்றும்,
ஏயும்முன் மலங்கள் தத்தம்
தொழிலினை இயற்ற ஏவும்
தூயவன் றனதோர் சத்தி
திரோதான கரிய தென்றும்,
ஆய்வர்; இம் மலங்கள் ஐந்தும்
அணுக்களை அணைந்து நிற்கும்!

என வரும் சிவஞானசித்தியார் பாடல்களால், ஐம்மலங்களின் இயல்பினை அறியலாம்.

(11) இவ்வைந்து மலங்களாலும் உயிர்கள் பிறப்பும் இறப்புமுற்று, உலகம் நிரயம் துறக்கம் என்னும் மூன்றிலும், கொள்ளிவட்டமும் கறங்கும்போல மாறி மாறிச் சுழன்று வருகின்றன.

''மலம் மாயை கன்மம்
மாயேயம் திரோதாயி மன்னிச்
சலம்ஆரும் பிறப்பு இறப்பில்
தங்கி, இத் தரைகீழ் மேலும்
நிலையாத கொள்ளி வட்டம்
கறங்குஎன நிமிடத் தின்கண்
அலமாரும்; இறைவன் ஆணையால்
உயிர் நடக்கும் அன்றே''

என்று, இதனைச் சிவஞானசித்தியார் இனிது விளக்குகின்றது.

(12) இங்ஙனம் ஐம்மலங்கலால் பிணிப்புண்டு, பிறப்பும் இறப்பும் மாறிமாறி எய்தி, மேலும் கீழும் நடுவுமாகக் கொள்ளிவட்டமும் கறங்கும்போல, எல்லா உயிர்களையும் போன்று தாமும் சுழன்று உழன்று வருந்தி வருதலின், ''மலங்கள் ஐந்தால் சுழல்வன்'' என்று குறிப்பிட்டருளினார். இதன்கண் ''மலங்கள் ஐந்தால் சுழல்வன்'' என்றது பிரபஞ்ச வைராக்கியம்.

# பாஞ்சராத்திரம்!

'பாஞ்சராத்திரம்' என்பது வைணவர்களுக்குரிய ஆகமம் ஆகும். விகனசர் என்னும் முனிவர் செய்தருளிய வைகானசம் என்னும் ஆகமமும், வைணவப் பெருமக்களுக்கு உரியதாகும். 'பாஞ்சராத்திரம்' என்னும் ஆகமத்தைப் பின்பற்றி ஒழுகும் வைஷ்ணவப் பெருமக்களுக்குப் பாஞ்சராத்திரிகள் என்பது பெயர். வைணவர்களின் ஆகமத்திற்குப் பாஞ்சாரத்திரம் எனப் பெயர் அமைந்தமைக்குப் பின்வருமாறு பலவகை விளக்கங்கள் அறிஞர்களாற் கூறப்படுகின்றன. அவ்விளக்கங்கள் வருமாறு:—

(1) சாங்கியம் யோகம் பௌத்தம் ஆருகதம் காபாலிகம் என்னும் கொள்கைகளைக் கூறும் ஐந்து நூல்களையும், தன் முன்னே ஒளியிழந்து இருள் அடையுமாறு செய்வது.

(2) ஞாயிற்றின் முன்னிலையில், இரவானது (ராத்திரி), வலிமைக் குறைவு (பஞ்சத்வம்) அடைந்து அழிதல்போல், தன் முன்னிலையில் பிற மதக்கொள்கைகளும் நூல்களும் சிறப்பிழந்து அழியச் செய்வது.

(3) ஐந்து வகையான அறிவு (ராத்ரா) நிலைகளை யுணர்த்துவது.

(4) அஞ்ஞானம் (ராத்ரா), அழிவு (பஞ்சத்வம்) அடையும்படி செய்வது.

(5) பரம் விபவம் வியூகம் அவதாரம் அர்ச்சை என்னும் திருமாலின் நிலைகள் ஐந்தையும் உடன்பட்டு உணர்த்துவது.

(6) கடவுளை உணர்தலினால் அங்ஙனம் உணர்ந்த மாத்திரத்திலேயே, நாம் நம்முடைய ஐம்பொறிகளினால் நிகழும் அஞ்ஞானங்கள் (பாஞ்சராத்திரம்) நீங்கி, உய்யப் பெறலாம் என்று [illegible] உரைப்பது.

(7) திருமால் ஐந்து இரவுகளில், அனந்தன் கருடன் விஷ்வக்சேனன் பிரமன் உருத்திரன் என்னும் ஐந்து பேர்களுக்கு உணர்த்தியது.

(8) திருமால் தன்னுடைய பஞ்ச ஆயுதங்களின் அம்சமாகத் திகழும் சாண்டில்யர் ஔபகாயனர் மௌஞ்ச்யாயனர் கௌசிகர் பாரத்துவாஜர் என்னும் ஐந்து பெரு முனிவர்களுக்கு உபதேசித்தது. திருமாலின் பஞ்ச ஆயுதங்களாவன: சுதர்சனம் என்னும் சக்கரம்; பாஞ்சசன்யம் என்னும் சங்கு; சார்ங்கம் என்னும் வில்; நந்தகம் என்னும் வாள்; கௌமோதகி என்னும் கதை ஆகிய ஐந்து படைக்கலன்கள் ஆகும்.

—ஆசிரியர்

# அந்தரங்க பக்தி

''அருள்மொழி அரசு''

திருமுருக. கிருபாநந்த வாரியார் சுவாமிகள்.

ஞானானந்த யதீந்திரர் என்ற ஒருமகான் விநாயக பக்தியில் சிறந்து விளங்கினார். அவர் விநாயகப்பெருமானுடைய திருவுருவத்தை வைத்து, முறைப்படி அபிஷேக ஆராதனைகள் செய்து வழிபடுவார். அந்த மகான் நகரங்களுக்கும் செல்லுவார். வசதியில்லாத கிராமப் புறங்களாகிய பட்டிதொட்டிகளுக்கும் செல்வார். ஆங்காங்குள்ள ஜனங்களை அழைத்து, அவர்களுக்கு விநாயக மந்திரத்தை உபதேசித்து, விநாயகப் பெருமானை உபாசிக்குமாறு செய்து, பக்தி நெறியைப் பரப்பி வந்தார்.

அவருடைய விரிவான பூசையில் பலரும் கலந்து கொண்டு மெய்ம்மறந்து நிற்பார்கள். அம்மகான் தமக்கு வரும் காணிக்கைகளை நல்ல இனிய பிரசாதங்கள் செய்வித்துச் சேவார்த்திகளுக்கு வழங்குவார். அவர் ஒவ்வோர் ஊரிலும் நான்கைந்து நாட்கள் தங்கியிருப்பார்.

மாலை நேரங்களில் சனங்களுக்கு விநாயகருடைய பெருமைகளை எடுத்து விரிவுரை புரிவார். அவருடைய வார்த்தைகள் மதுரம் கனிந்து மிக்க இனிமையாக இருக்கும். அதனால், மக்களுக்குப் பக்திப்பரவசம் உண்டாகும். அன்பால் அணுகிவரும் அடியார்களுக்குச் சிறிய அளவில் செய்த செப்பு விநாயகர், சந்தனமர விநாயகர், எருக்கம் வேர் விநாயகர் ஆகியவற்றைக் கொடுத்து, தீட்சையும் தந்து விநாயகரை உபாசிக்குமாறு அறிவுரை கூறுவார்.

ஒருசமயம் யதீந்திரர் தத்தனூர் என்ற கிராமத்துக்கு எழுந்தருளினார். அந்த ஊரிலுள்ள மக்கள் திரண்டுவந்து மகானை வணங்கினார்கள். அவர் வழக்கம்போல் பலருக்கும் விநாயகர் திருவுருவைத் தந்து உபதேசித்தார். அந்த ஊரின் அக்கிரகாரத்தில் ஓர் ஏழைப் பிராமணர் இருந்தார். கும்பகர்ணன் இறக்கும் போது தனக்கே சொந்தமான தூக்கத்தை அந்த அந்தணர்க்கு உயில் எழுதி வைத்துவிட்டுப் போய்விட்டான். அதனால் தூக்கத்தில் ஊக்கத்துடன் உறங்கிக் கொண்டேயிருப்பார். பகல் ஒருமணிக்குத் தூக்கத்தைவிட்டு எழுந்திருப்பார். சாப்பிட்டுவிட்டு கை ஈரம் உலர்வதற்குள் மறுபடி படுத்துக் கொள்வார், தூக்கமே ஆக்கமென நீக்கமற இருந்தார்.

அவருடைய மனைவியார் அருந்ததிக்குச் சமானமானவள். கணவனைக் கடவுளாகக் கருதி வந்தாள். தனவந்தர்கள் வீட்டுக்குப் போய்க் குற்றேவல் செய்து அதனால் வரும் ஊதியத்தைக் கொண்டு கணவனைக் காப்பாற்றிவந்தாள். அந்த உத்தமிக்கு 'நம் கணவர் இப்படி உறங்கியவண்ணம் இருக்கின்றாரே; ஊரில் உள்ளவர்கள் ஞானானந்த யதீந்திரரிடம் சென்று, உபதேசம் பெற்று விநாயகர்பூசை செய்கிறார்களே. அதுபோல் நம் கணவரும் பிள்ளையாரை வாங்கிவந்து வழிபாடு செய்யவில்லையே! பெண்ணாகப் பிறந்த நான் என்ன செய்ய முடியும்?' என்று எண்ணி ஏங்கினாள்.

ஒரு நாள் கணவனாரை மெதுவாக எழுப்பிக் குளிப்பாட்டி, தோய்த்துஉலர்ந்தஆடையை உடுக்கச் செய்து, பணிந்து நின்று தணிந்த குரலில் கூறினாள். ''அன்புள்ள ஆர்வலீர்! நம் ஊருக்கு ஞானானந்த யதீந்திரர் என்ற ஒரு மகான் எழுந்தருளியிருக்கிறார். அவரிடம் பலரும் சென்று உபதேசம் பெற்று, சிறுசிறு விநாயகர் திருவுருவங்களைப்பெற்று வந்து நேசித்துப் பூசிக்கிறார்கள். தாங்களும் சென்று ஒரு பிள்ளையாரை வாங்கிக் கொண்டு வாரும்'' என்றாள்.

''ஏண்டி! பிள்ளையாரை வாங்கி வந்தால் தினம் குளிக்க வேண்டுமே!''

''நீங்கள் என்று குளிப்பீரோ அன்றுபூசை செய்யுங்கள், மற்ற நாளில் நான் பூசை செய்கிறேன்''

''பிள்ளையாரை வாங்கிவந்தால் அவருக்குத் தேங்காய், பழம், சுண்டல், பொரி கடலை ஆகியவற்றுக்கு நாம் எங்கேபோவது?''

''நாம் உண்ணுகிற பழம் கஞ்சியைப் பிள்ளையாருக்குப் படைத்தால் போதும். பிள்ளையாருக்கு அன்புதான் முக்கியம். ஆகாரம் முக்கியம் அல்ல''

இதனைக் கேட்ட அந்த முரட்டு மனிதர் ராமபாணம் புறப்பட்டதுபோல நேரே யதீந்திரர் தங்கியிருந்த திருமடத்துக்குச் சென்றார். மாணவர்குழாங்களுக்கு இடையே முழுநிலவைப் போல் அமர்ந்திருந்த ஆசிரியரைக் கண்டார். அவரை வணங்கிக் கேட்கவேண்டும் என்ற நியதி அறியாத அவர் ''குருவே! ஒரு பிள்ளையார் கொடு'' என்று உரத்த குரலில் கேட்டார்.

குருநாதர் புன்னகை பூத்து, அந்தமுரட்டு மனிதரை அடிமுதல் முடிவரை பார்த்தார். அருகிலிருந்தவரை ''இவர் யார்? என்று கேட்டார். அவர்கள் சுவாமிஜி! இவர் இந்த ஊர் அக்கிரகாரத்தில் இருக்கிறார். இவர் பெயர் கணேச ஐயர். முரட்டுத் தன்மை உள்ளவர். ஆனால் நல்லவர் என்று கூறினார்கள்.

குருநாதர் ''ஐயா நாளைக்கு வாரும்! பிள்ளையார் தருவேன்'' என்று கூறினார், உடனே அவர் வீட்டுக்குப்போய் ''பெண்ணே. நாளைக்குப் பிள்ளையார் தருகிறேனென்று குருநாதர் கூறினார்'' என்று சொல்லிவிட்டு நித்திரா தேவியை உபாசிக்கத் தொடங்கினார்.

மறுநாள் அந்த அம்மாள் பகீரதப் பிரயத்தனம் செய்து கணவனை எழுப்பிக் குருநாதரிடம் அனுப்பினார். அவர் ''குருவை ஒரு பிள்ளையார் கொடு'' என்றார். குருநாதர் ''நாளைக்கு வாரும்'' என்றார். இப்படிஅந்த மனிதர் முப்பதுநாள் அலைந்தார். முப்பத்தோராவது நாள் அவருக்கு அசாத்தியகோபம் வந்துவிட்டது. 'குருவே! பிள்ளையாரை நீர் கொடுக்கிறீரா அல்லது நான் உங்களுக்குக் கொடுக்கட்டுமா? என்று கோபத்துடன் கேட்டார்.

குருநாதர் சிரித்துக் கொண்டே ''ஐயா! இந்த மடத்துக்குப் பின்னால் அரச மரத்தின் கீழ் நாலடி உயரமுள்ள பிள்ளையார் ஒன்று இருக்கிறது, அதை எடுத்துப்போம்'' என்று கூறினார். அதைக்கேட்ட ஐயர் அளவற்ற மகிழ்ச்சி அடைந்தார்.

''குருவே! எல்லோருக்கும் அரை அங்குலம், ஓரங்குலம் அளவுள்ள பிள்ளையாரைக் கொடுத்தீர்கள். எனக்கு மட்டும் பெரிய பிள்ளையாரைக் கொடுத்தீர்கள். உங்களுக்குக்கோடி வணக்கம்'' என்று கூறிவிட்டு அரசமரத்தின் கீழ்ப் போற்றுவாரின்றிக் கிடந்த பிள்ளையாரிடம் போனார். அவரைத் தழுவிக்கொண்டு அழுதார். கண்ணப்பநாயனார் காளத்தியப்பரைக் கண்டதுபோல் உள்ளம் உருகினார்.

மேல் அங்கவஸ்திரத்தை எடுத்துச் சும்மாட்டுத் தலையில் வைத்துக் கொண்டார். அங்கிருந்த மடத்துச் சாமிகளைப் பார்த்து, 'ஐயா! பிள்ளையாரை எடுத்து என் தலைமீது வையுங்கள்'' என்றார். அந்த மடத்துச் சாமியார் ''இந்த ஐயர் தலை உடைந்து சாகட்டும்'' என்று எண்ணிப் பத்துப்பேராகச் சேர்ந்து பிள்ளையாரைத் தூக்கி அவர் தலைமேல் வைத்தார்கள்.

அன்பு வடிவாகிய ஐயர், ''என்னைக் காக்கவந்த கருணைக்கடலே! கணேசமூர்த்தியே என்று கூறித் தலைமீது பிள்ளையாரை வைத்துக் கொண்டார். விநாயகர் அவர் தலைமீது வைத்தவுடன் சடைபோலப் பாரமில்லாமல் ஆகிவிட்டார். அந்தணர் ''அப்பனே! ஐந்து கரத்து அண்ணலே! நீர் எப்பொழுது சாப்பிட்டீரோ! உமக்கு வயிறு சுரைக்குடுக்கைபோல் காலியாக இருக்கின்றதுபோலும்! அதனால் பாரமே இல்லை. இன்று பிச்சை எடுத்துஉமக்கு உணவு தந்து காப்பாற்றுவேன். நாளைமுதல் என்னை நீர் காப்பாற்றவேண்டும்'' என்று கூறி, ஆனந்த தாண்டவமாடிக் கொண்டுதமது குடிசைக்குச் சென்றார்.

''பெண்ணே! நல்லகுருநாதர். நம்முடைய வறுமையை ஒழிக்க வளர்ந்த பிள்ளையாரை வழங்கினார். ஒரு பலகை போடு'' என்றார். அவள் ஒரு பலகையை எடுத்து இட்டாள். வீட்டைப் பசுவின் சாணத்தால் மெழுகினாள். கோலம் போட்டாள். அறுகு, வெள்ளெருக்கு, வில்வம் முதலிய பத்திர புஷ்பங்களைக் குடலையில் எடுத்தாள்.

ஐயர் ஊருக்குள் சென்று ''இன்று எங்களுக்கு இந்தத் தள்ளாத வயதில் ஒரு பெரிய பிள்ளை பிறந்திருக்கிறது. அரிசி போடுங்கள்'' என்று வீடுதோறும் பிட்சை எடுத்துக்கொண்டு வந்தார். முக்கால்படி அரிசி சேர்ந்தது. அதை மனைவி கையில் கொடுத்தார். அந்தப் புண்ணியவதி முக்கால்படி அரிசியையும் சமைத்து, தோட்டத்திலுள்ள கீரையைப் பறித்துக் கடைந்து வைத்தாள். ஒரு சிறிது மோர் வாங்கி வைத்தாள்.

அந்தணர் ஐந்துகரத்து அண்ணலுக்கு அபிஷேகம் செய்யப் பாலும், தேனும் பஞ்சாமிர்தமும் இல்லையே என்று ஏங்கினார். கிணற்றிலுள்ள நீரை முகந்து, தண்ணீரும் கண்ணீரும் விட்டு, விநாயகமூர்த்திக்கு அபிஷேகம் செய்தார். பத்திரபுஷ்பம் சாத்தினார். வலம்வந்து தலையில் குட்டிக்கொண்டு, தோப்புக்கரணம் போட்டு வழிபாடு செய்தார். பிள்ளையாரின் திருமுன் மூன்று வாழை இலை இட்டு, ஒவ்வோர் இலையிலும் கால்படி அன்னத்தை இட்டுக் கடைந்த கீரையை வைத்து, மோர்க் கிண்ணத்தையும் அருகில் வைத்தார்.

''விநாயகமூர்த்தி! நான் பரம ஏழை. எள்ளுருண்டை, கடலை, பொரி, தேங்காய், பழம் முதலியவற்றை உனக்குப் படைக்கத் தகுதி இல்லாதவனாக இருக்கிறேன். இந்த மூன்று இலைகளிலுள்ள அன்னமும் உனக்கு என்று எண்ணிக்கொள்ள வேண்டாம். நடு இலையில் உள்ள அன்னம் உனக்கு. ஓர் இலை அன்னம் எனக்கு. மற்றோர் இலையில் உள்ள அன்னம் உன் அன்னையாகிய இவளுக்கு உரியது. அருட் கடலே! இந்த ஏழையின் அன்னத்தைக் கருணையுடன் ஏற்றுக்கொண்டு உண்ணுக, என வேண்டிக்கொண்டார். அவர் பிள்ளையார் அமுது செய்வார் என்ற நம்பிக்கையில் பிள்ளையாரைப் பணிந்து பலமுறை வேண்டினார். பிள்ளையார் முன் அமர்ந்து கணவனும் மனைவியும்.

*''ஜய கணேச ஜய கணேச ஜய கணேச பாகிமாம்,*
*ஜய கணேச ஜய கணேச ஜய கணேச ரக்ஷிமாம்''*

என்று நெடுநேரம் பஜனை செய்தார்கள். ஐயர் கண்களை மூடித் தியானம் செய்தார். பிள்ளையார் அமுது செய்யவில்லை. அந்தணர் அழுதார், பலமுறைதொழுதார்.

''பெண்ணே! பிள்ளையாருக்கு நம் மீது வருத்தம்போலும். இந்தக் கிழவனுக்கும் கிழவிக்கும் இரண்டு இலை அன்னம். நமக்கு மட்டும் ஓர் இலை அன்னமா? என்று குழந்தை எண்ணுகிறான். ஓர் இலை அன்னத்தை நடு இலையில் கொட்டிவிடுகிறேன். மற்றோர் இலை அன்னத்தை நாம் இருவரும் பகிர்ந்து உண்ணலாம். இது உனக்கு உடன்பாடா? என்று கேட்டார்.

அந்த அம்மாள் அப்படியே செய்து விடுங்கள் என்றார். ஓர் இலை அன்னத்தை எடுத்து நடுஇலையில் கொட்டிவிட்டார். ''பிள்ளையாரப்பா, உனக்கு இரண்டு இலை அன்னத்தைப் படைத்திருக்கிறேன். உனக்குப் பசி எடுக்கவில்லையா? களைப்பாக இருக்கிறதா? அன்னத்தைப் பிசைந்து உனக்கு ஊட்டட்டுமா? தயவுசெய்து தாமதிக்காமல் சாப்பிடு என்று வேண்டிக்கொண்டார். பிள்ளையார் சாப்பிடவில்லை.

''பெண்ணே! நாம் இத்தனை நாள் அரச மரத்தின் கீழே பட்டினி கிடந்தோமே! இந்தக் கிழவனும், கிழவியும் ஒரு நாள் பட்டினி இருக்கக்கூடாதா? என்று நம் மகன் கருதுகிறான். இன்று நாம் உபவாசம் இருப்போம். இந்த இலை அன்னத்தையும் நடு இலையில் படைத்து விடுவோம் என்றார். அதுதான் நல்லது என்று அவள் கூறினாள். மற்ற இலையின் அன்னத்தையும் நடு இலையில் கொட்டிவிட்டார்.

மூத்த பிள்ளையாரே! முக்கால்படி சோறு படைத்திருக்கிறேன். நீ அடம் பிடிக்காதே. அமுது செய்து எங்களுக்கு அருள் செய்! என்று பலமுறை வேண்டினார். பிள்ளையார் சாப்பிடவில்லை. பெண்ணே! இன்னும் உள்ளே சோறு இருக்கிறதோ என்று மகன் சந்தேகப்படுகிறான். சோற்றுப் பானையைக் கொண்டுவந்து மகனிடம் காட்டு என்றார். அந்த உத்தமி சோற்றுப் பானையைக் கொண்டுவந்து மகனிடம் காட்டினாள். பிள்ளையாரப்பா! பானையைப் பாரப்பா. உன் பாத சாட்சியாக ஒரு பருக்கையும் கிடையாது. இந்த ஏழைகளை அலட்சியம் செய்யாதே. நாங்கள் உன் அடிமைகள். அமுது செய்தருள் என்று இன்னுரை கூறி வேண்டினர். பிள்ளையார் அமுது செய்தாரில்லை.

அந்தணருக்குச் சீற்றம் பொங்கி எழுந்தது. பெண்ணே! மாலை மணி ஆறு ஆச்சு. இன்னும் என்ன ஆராய்ச்சி? உலக்கையைக் கொண்டு வா. இவன் தொப்பை கிழிய இடிக்கிறேன் என்றார். அவள் உலக்கையைக் கொண்டு வந்து கொடுத்தாள். தம்மீது நம்பிக்கை வைத்த அந்தணருக்கு இரங்கி, ஆனைமுகத்து அண்ணலார் இலையில் தும்பிக்கையை வைத்தார். அன்னம் மறைந்துவிட்டது. பிள்ளையார் அமுது செய்தார் என்ற ஆனந்தத்தில் அந்தச் சதிபதிகள் நிதி பெற்றாற்போல் துதிசெய்து மகிழ்ந்தார்கள். அவர்கள் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. பிள்ளையாரை வணங்கிவிட்டு ஒரு புறம் படுத்தார்கள்.

ஐயருக்குப் பசியின் கொடுமையால் உறக்கம் வரவில்லை. 'பெண்ணே! பிள்ளையார் வேண்டாம் என்று சொன்னேனே, கேட்டாயா? பிள்ளையார் முக்கால்படி சோறுதின்றார். உனக்கு அரைக்கால்படி, எனக்கு அரைக்கால் படியாகத் தினம் ஒருபடி அரிசிக்கு நான்எங்கே போவேன்? என்று கூறி வருந்தினார்.

அவள் ''நீங்கள் ஏன் கவலைப்படுகிறீர்கள்? கருணைக் கடலாகிய கணபதி நம்மைக் காப்பாற்றுவார்'' என்று ஆறுதல் கூறினாள். இருவரும் விநாயகருடைய திருவடியைச் சிந்தித்துக்கொண்டே உறங்கிவிட்டனர். கணேசப் பெருமான் ''குசேல முனிவர் கொடுத்த ஒரு பிடி அவலுக்குக் கண்ணபிரான் அஷ்டலட்சுமியையும் அள்ளிக் கொடுத்தாரே! முக்கால்படி சோறு கொடுத்த முதிய அந்தணனுக்கு நாம் அருள்புரிய வேண்டும்' என்று திருவுளம் பற்றினார்.

அந்தக் குடிசை ஏழடுக்கு மாடியாக ஆயிற்று. அம்மாளிகையில் அரிசி மூட்டைகளும் பருப்பு மூட்டைகளும், பாத்திரங்களும், பண்டங்களும் பட்டாடைகளும் நிறைந்து காட்சியளித்தன. அதிகாலையில் அந்தணர் எழுந்தார். மனைவி மூவாயிரம் ரூபாய் பெறுமானஉயர்ந்த பட்டாடையுடனும், வயிர அணிகளுடனும், காட்சி அளிக்கக் கண்டார். அதிசயம் கொண்டார். சிறிது நேரம் கண்களையே நம்பாமல் விழித்தார். அப்பனுடைய அருளை நினைந்து உருகினார்.

''மாதரசே! மகா கணபதியின் கருணை இருந்தவாறு என்னே! குசேலனாக இருந்த என்னைக் குபேரனாகச் செய்துவிட்டார்'' என்று கூறிக் கூத்தாடினார். அந்த அம்மையார் பிள்ளையார் இத்தனை செல்வத்தையும் நமக்குத் தந்தார். ஆனால் பிள்ளையாரைத் தந்தவர் குருநாதர் தாமே? அவரை அழைத்துவந்து காணிக்கை கொடுங்கள்'' என்று வேண்டினாள். வேதியர் மடத்தை நாடி ஓடினார். அங்கிருந்த மடத்து அன்பர்கள், பிள்ளையாரை வைத்துப் பூசை செய்வதுபோல் நடித்துக் கொண்டிருந்தார்கள். அந்தணர் யதீந்திரர் முன்சென்று குருவே பிள்ளையாருக்கு முன் வாழைப் பழத்தை வைத்திருக்கிறீரே, அதை உரித்துப் பிள்ளையாருக்கு ஊட்டும். பிள்ளையார் உண்டு உவக்கட்டும்.

குருநாதர் அவரை விழுங்கி விடுவதுபோல் பார்த்து 'ஏனப்பா பிள்ளையார் வாழைப் பழத்தை உண்ணுவாரா?' எனக் கேட்டார். அந்தணர், 'குருவே நீர் தந்த எங்கள் வீட்டுப் பிள்ளையார் முக்கால்படி சோறு தின்கிறார். வறுமையாகிய சிறுமையில் வாடிக்கிடந்த என்னுடைய மாளிகைக்கு வாருங்கள். காணிக்கை தருகிறேன்' என்று கூறிக் குருநாதரைத் தம் இல்லத்துக்கு அழைத்துச் சென்றார். அங்கு விநாயகர் உலாவிக் கொண்டிருப்பதைக் குருநாதர் கண்டு வியந்தார்.

''மகாகணபதி! ஐம்பது ஆண்டுகளாக வழிபாடு செய்கிறேன், என் கனவிலும் காட்சி தந்தீரில்லை. இங்கு உலாவுகின்றீரே! என்று கேட்டார். கணேசப்பெருமான் ''அன்பனே! இந்த அந்தணன் உள்ளம் உருகி, ஆனந்த வெள்ளம் பெருகி, நேற்றுச் செய்த ஒருநாள் பூசைக்கு உன்னுடைய ஐம்பது வருடப் பூசை இணையாகாது'' என்று கூறியருளினார்.

அந்தணர் குருநாதருக்குத் தங்கக் கட்டிகளை வெள்ளித்தட்டில் வைத்து அளித்தார். விநாயகரை வழிபட்டு வீடுபேறு பெற்றார். **

# வள்ளலாரும், அவர் கண்ட நெறியும்

''முத்தமிழ்க் காவலர்''

திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள், திருச்சி

(முற்றொடர்ச்சி)

**அவர் கண்ட நெறிகளில் ஒன்று பெருநெறி:**

இது ஒரு புது நெறி. நெறி பலவகை. அதில் பெருநெறி ஒருவகை. நெறி என்றாலே நன்னெறியைக் குறிக்கும். தீ நெறியைக் குறிக்காது. இதை ''நெறி நின்றார் நீடு வாழ்வார்'' என்னும் திருக்குறளால் அறியலாம். நெறி என்றால் வழி. அதுவும் நல்வழியையே குறிக்கும். அல்வழியைக் குறிக்காது. இதனை வழியே ஏகுக. வழியே மீளுக! என்பதால் அறியலாம். தீ நெறியைக் குறிக்கும்போதெல்லாம் நமது முன்னோர்கள்''நெறியல்லா நெறி'' என்றே குறிப்பிட்டிருக்கிறார்கள். இது தமிழகச் சான்றோரின் பண்பு. வள்ளலார் தமது அருட்பாவில் பல நெறிகளைப் பற்றிக் கூறியிருக்கிறார். அவற்றுள் பெருநெறி என்பதை அடிக்கடி பல்வேறு இடங்களில் கூறியிருக்கிறார்.

''பன்னெறிச் சமயங்கள், மதங்கள், எனுமோர் பலநெறி உலகில் பரவியது. இதனால் மக்கள் செந்நெறி அறிந்திலர். இறந்து இறந்து உலகோர் செறியிருள் அடைந்தனர். ஆதலின் இனி நீ புன்னெறி தவிர்த்து வான்புத்தமுது அளிக்கின்ற சுத்த சன்மார்க்கத் தன்னெறி செலுத்துக! என்ற என் அரசே!'' எனக் கூறியிருக்கின்றார். இதில் பல நெறிகள் வந்துள்ளன. வடலூரில் சத்திய ஞானசபை எட்டுப் பட்டை அமைப்பில் கட்டப்பட்டிருக்கிறது. அதில் எட்டாவது பட்டையில் ''குருநெறிக்கே' என்னைக் கூட்டிக் கொடுத்தது, கூறரிய பெருநெறிக்கே சென்ற பேர்க்குக் கிடைப்பது, பேயுலகக் கருநெறிக்கே சென்றவர் காணற்கரியது, காட்டுகின்ற திருநெறிக்கே சென்றவர்க் கேற்றது, உத்தர ஞான சிதம்பரமே'' என்ற அருட்பா எழுதப் பெற்றிருக்கிறது. இதில் ஒரு பெருநெறி வருகிறது.

''சிறுநெறி செலுத்தாது தடுத்தெனை யாண்டு பெருநெறி செலுத்தியோன்'' என இறைவனைக் குறிப்பிடுகிறார். இங்கே ஒரு பெருநெறி. மற்றநெறிகளுக்குப் பொருள் தெரிகின்றன. பெருநெறி என்றால் என்ன? எனில் ''பெரிய நெறி'' எனக் கூறிவிடலாம். பெருநெறி என்பது எது? என்றால் என்ன கூறுவது?

அருட்பாவில் உள்ள தெய்வமணி மாலையில் ''ஒருமையுடன் நினது திருமலரடி நினைக்கின்ற உத்தமர்தம் உறவு வேண்டும்'' இது உறவு நெறி. ''உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார் உறவு கலவாமை வேண்டும்'' இது வஞ்சநெறி. ''பெருமை பெறு நினது புகழ் பேச வேண்டும்'' இது பக்தி நெறி. ''பொய்மை பேசாதிருக்க வேண்டும்'' இது வாய்மை நெறி. ''பெருநெறி பிடித்தொழுக வேண்டும்'' இங்கும் ஒரு பெருநெறி. ''மதமான பேய் பிடியாதிருக்க வேண்டும்'' இது சமயநெறி. ''மருவு பெண்ணாசையை மறக்கவே வேண்டும்'' இது துறவு நெறி. ''உனைமறவாதிருக்க வேண்டும்'' இது யோக நெறி. ''மதி வேண்டும்'' இது அறிவு நெறி. ''நின்கருணை நிதிவேண்டும்'' இது கருணை நெறி. ''நோயற்ற வாழ்வு நான் வாழ வேண்டும்'' இது சுகாதார நெறி. இவற்றுள் பெருநெறி என்றால் எது? புரியவில்லை.

பெருநெறி என்பது நான்கு எழுத்துக்கள் உள்ள, இரண்டு சொற்களைக் கொண்ட ஒரு சிறு சொற்றொடர். இதனை வள்ளலாருக்கு முன்பு உள்ள சான்றோர்கள் எவரும், கையாண்டதாகக் கேள்விப்படவில்லை. பழந்தமிழ் இலக்கியங்களைத் தேடியும் என் கண்களுக்குப் புலப்படவில்லை. வள்ளற்பெருமான், திருஞானசம்பந்தரை வழிபடு குருவாகக் கொண்டார் என அறிந்தேன். அவரிடம் கிடைக்குமா என ஆராய்ந்தேன். சம்பந்தருக்கு வயது மூன்று. சீர்காழியில் குளத்தருகில் பாலுண்ட வாயோடு காட்சியளித்தார். தந்தை சிவபாத இருதயர் பிரம்பெடுத்து வந்து யார் பால் கொடுத்தது? என்று அதட்டிக் கேட்டார். அதற்குச் சம்பந்தர். 'பெம்மான்' என்றார். எந்தப் பெம்மான்? பிரமாபுர மேவிய பெம்மான். எந்தப் பிரமாபுரம்? ''பெரு நெறிய பிரமாபுரம்'' என்றார். இங்கு அகப்பட்டுக் கொண்டது பெருநெறி. அங்கே பூட்டியிருந்த பூட்டுக்கு இங்கு சாவி கிடைத்தது போன்றிருந்தது. அது மட்டுமல்ல. ''பெருநெறிய பிரமாபுரம் மேவிய பெம்மான்'' என்ற சொற்றொடர் இறைவனையும், அவன் கோயில் கொண்ட சீர்காழியையும், அந்தச் சீர்காழி நகரத்திலுள்ள சான்றோர்களின் நெறியையும் விளக்கியது. அப்பொழுது தெய்வமணிமாலைக்குத் திரும்பி வந்து அங்குள்ள பெருநெறியைப் பார்த்தால் ''வெறும் பெருநெறி என்றில்லை'' ''பெருநெறி பிடித்து ஒழுக வேண்டும்'' என்றிருப்பது புரிந்தது.

மற்ற நெறிகளெல்லாம் பிறர் கொடுக்க வேண்டும் என்பதாகவும், இந்தப் பெருநெறி மட்டும் பிறர் கொடுத்துப் பெறுவதல்ல ''தானே பிடித்து ஒழுக வேண்டிய ஒன்று'' என்றும் விளங்கிற்று. இதிலிருந்து பெருநெறி என்பது எல்லா நெறிகளிலும் உயர்ந்த நெறி என்பதும், அது நம் சான்றோர்களால் கையாளப்பெற்ற-கையாளப்படுகின்ற நெறி என்பதும், அது, அன்புநெறி, அருள்நெறி, கருணைநெறி ஆகிய மூன்று நெறிகளாலும் பின்னப்பட்ட ஒரு பெரு நெறி என்பதும் விளங்கிற்று.

அன்புநெறி, அருள்நெறி, கருணைநெறி ஆகிய இம்மூன்றும் மனமிளகிய நிலையையே காட்டுவன. எனினும் அவை ஒன்றல்ல. ''அன்பு'' சிறியவர் பெரியவரிடத்தில் காட்டுவது. ''அருள்'' பெரியவர்கள் சிறியவரிடத்தில் காட்டுவது. ''கருணை'' தன்னை ஒத்தவரிடத்திற் காட்டுவது எனலாம். இனி அன்பு மேல் நோக்கிச் செல்வது. அருள் கீழ்நோக்கி வருவது. கருணை சமவழியில் நடப்பது எனவும் கூறலாம். இவ்வுண்மைகளை ''அன்பைச் செலுத்துதல்'' என்பதனாலும், ''அருளைப் பொழிதல்'' என்பதனாலும், ''கருணை காட்டுதல்'' என்பதனாலும் நன்கறியலாம். இம் மூன்றையும் கண்டு, கையாண்டு நமக்கும் நடத்திக் காட்டி மகிழ்ந்தவர் வள்ளலார்.

**அன்புநெறி :**

இதைப் பக்தி நெறி எனவும் கூறுவர். இதற்கு வள்ளலார் இலக்கணம் கூறும்பொழுது இறைவனை ஒரு 'மலை' என்கிறார். அதைப் பார்த்து எவரும் பயந்து விடவேண்டியதில்லை. அம் மலை அன்பு என்ற கைப்பிடிக்குள் அடங்கிவிடும் என்கிறார். அடுத்து இறைவனைக்'கடல்' என்கிறார். அதைக்கண்டு எவரும் பீதி அடையவேண்டியதில்லை. அக்கடல் அன்பு என்ற குடத்துக்குள் அடங்கிவிடக் கூடியது என்கிறார். அடுத்து இறைவனை இவ்வுலகம் முழுவதும் நிரம்பியுள்ள ஒரு 'பரம்பொருள்' என்கிறார். இதைக்கண்டு எவரும் கலக்கமடைய வேண்டியதில்லை. அப்பரம்பொருள் 'அன்பு என்னும் வலைக்குள்' அகப்பட்டுவிடும் என்று கூறுகிறார். இதிலிருந்து வெளியைவிட, மலையைவிட, கடலைவிட அன்பு பெரியது என்று தெரிகிறது. இறுதியில் இறைவனே ''அன்பு உருவானவன்'' என்று அன்புருவாம் பரசிவமே என முடிக்கிறார்.

இதனைத் திருமூலரும் ''அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார், அன்பே சிவமாவது யாரும் அறிகிலார், அன்பே சிவமாவது யாரும் அறிந்தபின், அன்பே சிவமாய் அமர்ந்திருப்பாரே'' எனக் கூறியிருப்பதாலும் நன்கறியலாம். இனி மக்களாய்ப் பிறந்தவர்கள் இறைவனிடத்தில் அன்பு செலுத்தியாக வேண்டும் என்பதற்காக இறைவன் எத்தகையவன் என்பதை நமக்குச் சுட்டிக் காட்டுகிறார். ''கல்லார்க்கும் கற்றவர்க்கும் களிப்பருளும் களிப்பு'' என்பது அவரது வாக்கு. இறைவன் கற்றவர்க்கு மட்டுமல்ல, சிறிதும் கல்லாதவர்க்கும் மகிழ்ச்சியைத் தருபவன், ஏன்? அவன் மகிழ்ச்சியே உருவானவன் என்கிறார்.

அடுத்து, காணார்க்கும் கண்டவர்க்கும் கண்ணளிக்கும் கண் என்பது அவரது வாக்கு. கண் உள்ளவர்களுக்கு மட்டுமல்ல, கண் இல்லாதவர்களுக்கும் கண் அளிப்பவன் இறைவன். காரணம் எல்லா உயிர்களுக்கும் இறைவன் கண்ணாகவே இருப்பவன் என்பது அவர் கருத்து. இதில் ஒன்று. கண் இல்லாதவர்களுக்குக் கண் கொடுப்பது புரிகிறது. கண் உள்ளவர்களுக்கும் அவன் கண் கொடுப்பது என்றால் அது எப்படி? அது ஆராய வேண்டிய ஒன்று. ஆராய்ந்தால், அது ஊனக் கண்ணிலும் உயர்ந்த ஞானக்கண் என்பது புலப்படும்.

**அருள்நெறி :**

''வள்ளலார் வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடினேன்'' என்கிறார். இதனால் உயிர்கள் வாடுவது மட்டுமல்ல, பயிர்கள் வாடியதைக் கண்டும் அவர் பாடியிருக்கிறார் என்று தெரிகிறது. இது அருள்நெறியில் மிக உயர்ந்த நெறி. இதில் 'கண்டபோதெல்லாம்' என்ற ஒரு சொற்றொடர் இருக்கிறது. இது வள்ளலார் ஒரு பயிரை வாடியிருக்கும்போது கண்டிருக்கிறார், கண்டு வருந்தியிருக்கிறார். மறுபடியும் உழவன் தண்ணீர் இறைத்து அப்பயிர் செழித்து நிற்பதைக் கண்டு மகிழ்ந்திருக்கிறார். அடுத்து ஒரு நாள் அதே பயிர் வாடியிருப்பதைக் கண்டு வருந்தியிருக்கிறார் என்ற நிகழ்ச்சிகளையெல்லாம் ''கண்டபோதெல்லாம்'' என்ற சொற்றொடர் நமக்கு அறிவிக்கிறது. வள்ளலார் உடம்பு ஒருமுறை இளைத்திருந்தது. அன்பர்கள் காரணம் கேட்டபோது நான் வருகின்ற வழியில் நடந்துசென்ற மக்களில் பலபேர் இளைத்திருந்ததைக் கண்டேன். அதனால் என் உடம்பு இளைத்து விட்டது போலும் என்றார். இது எவ்வளவு பெரிய அருள்நெறி!

மற்றொரு தடவை வள்ளலாருடைய புருவம் துடித்தது. இதைக்கண்டதும், யாருக்கோ எவருக்கோ துன்பம் வரப்போகிறது. அதைக்கண்டு நான் துடிக்கப் போகிறேன் என்பதை, இது துடிதுடித்துக் காட்டுகிறது என்று கூறியிருக்கிறார். இந்த உயர்ந்த அருள் நெறியை நம்மால் சிந்தித்துக்கூடப் பார்க்க முடியவில்லை. அவ்வளவு உயர்ந்து நிற்கிறது இந்த அருள்நெறி.

வள்ளலார் ஒரு ஏழைக் குடும்பத்தில் பிறந்தவர். சொத்து ஒன்றும் இல்லாதவர், வருமானமும் இல்லாதவர். இவரின் இந்த நிலை கண்டு தமையன் கடிந்ததால் குடும்பத்தின் ஆதரவையும் இழந்தார். தமையனார் இவருக்கு வீட்டில் சோறு போடக்கூடாது என்று கட்டளை இட்டிருந்ததால் பசிக்கு உணவு கிடைக்காமல் வருந்தியவர். எவரிடத்திலும் சென்று இரந்ததில்லை. எதுவும் ஏற்றதில்லை. வாழ்க்கையில் பலகாலும் பசித்திருந்து, ''பசி'' மக்களை எப்படி வருத்தும் என்பதை அவர் உணர்ந்திருக்கிறார். அதன்

விளைவே ''சத்தியதருமச் சாலையைத்'' தோற்றியதும் மக்களின் பசிப் பிணியைப் போக்கும் செயற்கருஞ் செயலைச் செய்திருப்பதும் என உணரலாம்.

**கருணை நெறி :**

உலகில் உள்ள எல்லா நாட்டினரிடத்தும், எல்லா மதத்தினரிடத்தும், எல்லா நிறத்தினரிடத்தும், எல்லா மொழியினரிடத்தும் மட்டுமல்ல, எல்லா உயிர்களிடத்தும் காட்டுவதே 'கருணை நெறி' ஆகும். இதற்கு உயிரிரக்கம் என்று பெயர். இதைச் சீவகாருண்யம் என்பர். வள்ளலார் கூறியிருக்கிற கருணை நெறியிலும் ஒருமைப்பாட்டிலும் மக்கள் மட்டுமல்ல, மற்ற எல்லா உயிர்களும் அடங்கியிருக்கின்றன. 'ஊனைத்தின்று ஊனைப் பெருக்காமை முன்னினிதே' என்று இனியவை நாற்பது கூறுகிறது. 'தன் ஊன் பெருக்கற்குத் தான் பிறிதூன் உண்ணற்க' என்பது திருவள்ளுவர் கருத்து. இதற்கு மேல் வள்ளற்பெருமான், மக்களாய்ப் பிறந்தவர்கள் எல்லா உயிர்களிடத்தும் கருணைகாட்டி ஆகவேண்டும் என்று கட்டளையிட்டிருக்கிறார்.

நான் 50 ஆண்டுகட்கு முன் மூன்று சொற்றொடர்களை எழுதியிருந்தேன். அது ''தன்னைத்தானே காப்பாற்றிக் கொள்ளத் தெரியாத மனிதர்கள், தன்னைத்தானே காப்பாற்றிக் கொள்ளத்தெரியாத உருவங்களுக்கு, தன்னைத் தானே காப்பாற்றிக் கொள்ளத் தெரியாத உயிர்களைப் பலிகொடுக்கிறார்கள்'' என்பது, பொருள் விளங்கியிருக்கும் என நம்புகிறேன். தன்னைத் தானே காப்பாற்றிக் கொள்ளத் தெரிந்த மனிதர்களாக இருந்தால் தங்களுக்கு வந்திருக்கும் நோய் என்ன? அது எப்படிவந்தது? அதை எப்படிப் போக்குவது? என்ன மருந்து சாப்பிடுவது? என்று தெரிந்து தங்களைக் காப்பாற்றிக் கொள்வார்கள். அப்படிக் காப்பாற்றிக் கொள்ளத் தெரியாமையால்தான் சில உருவங்கள் தங்களைக் காப்பாற்றும் என நினைத்து அதனிடம் போகிறார்கள்.

அந்த உருவங்களும் தன்னைத்தானே காப்பாற்றிக் கொள்ளத் தெரியாதவை. காப்பாற்றிக் கொள்ளத் தெரிந்தால் அவைகள் நேராக ஆட்டு மந்தைகளுக்கும் கோழிப் பண்ணைகளுக்கும் சென்று பசியாறக் கடித்துத் தின்று திரும்பிவரும். அதனால் எப்படி வெளியே போக முடியும்? பூசாரிதான் உள்ளே வைத்துப் பூட்டி விடுகிறானே! எவனாவது ஏமாந்தவன் எதையாகிலும் கொண்டு வந்து 'பலி' கொடுக்கமாட்டனா என்று அவை உட்கார்ந்திருந்த இடத்திலேயே ஏங்கிக் கொண்டிருக்கும். அதனால் அது தன்னைத்தானே காப்பாற்றிக் கொள்ள முடியாது.

இனி பலிகொடுக்கப்படும் உயிர்கள், அவைகளும் தங்களைத் தாங்களே காப்பாற்றிக் கொள்ள முடியாதவை. மனிதன் அவைகளை வெட்டும்போதும், அறுக்கும்போதும் ''கீச்கீச்'' என்று அலறி அழுது மடிவதைத் தவிர அவைகளால் வேறொன்றும் செய்ய இயலாது. கரடி, புலி, சிறுத்தை, சிங்கம் முதலியன தன்னைத் தானே காப்பாற்றிக் கொள்ளத் தெரிந்தவை. அவைகளைக் கொண்டு வந்து எவரும் பலி கொடுப்பதில்லை. ஆகவே தன்னைத் தானே காப்பாற்றிக் கொள்ளத் தெரியாத மனிதர்கள், தன்னைத்தானே காப்பாற்றிக் கொள்ளத் தெரியாத உருவங்களுக்கு, தன்னைத் தானே காப்பாற்றிக் கொள்ளத் தெரியாத உயிர்களைப் பலி கொடுக்கிறார்கள் என்பது முடிவு.

ஜீவகாருண்யப் பிரச்சாரம் செய்யும் அன்பர்கள் இனி ஒரு புதிய முறையைப் பின்பற்றுவது நல்லது. அவர்கள் இனி உயிர்ப்பலிகூடாது என்று சொல்வதை நிறுத்திக்கொண்டு, காளி கோயிலுக்கும், கருப்பண்ணன் கோயிலுக்கும் சென்று, 'அம்மையே! ஐயனே! இனி உன் கோயிலுக்கு வருகின்ற பக்தர்களிடம் ஆடு, கோழிகளை இனி பலிகொடுக்க வேண்டாம். அவற்றைத் தின்று சலித்துவிட்டது. இனி கரடி புலி சிறுத்தை, சிங்கங்களைக் கொண்டு வந்து பலிகொடுங்கள் எனக் கட்டளையிட வேண்டும் என்று அத்தெய்வங்களிடம் வேண்டிக் கொள்ள வேண்டும். இப்பக்தர்கள் அவைகளைக் கொண்டு வரக் காடுகளுக்குச் செல்வார்கள். சென்றதும் அவர்களே அவ்விலங்குகளுக்குப் பலியாகிவிடுவார்கள். கோவில்களில் நடைபெறும் பலிகள் தானாகவே நின்றுவிடும். சீவகாருண்யப் பிரச்சாரமும் வெற்றி பெற்றுவிடும்.

வள்ளலார் உயிர்க்கொலையும், புலைப்புசிப்பும் உடையவர்களெல்லாம் உறவினத்தார் அல்லர். புறவினத்தார் என்று தமது அருட்பாவில் கூறியிருக்கிறார். இதற்குப் பொருள் கூறியவர்களுள் சிலர் உறவினம், புறவினம் என்பதை மனித இனம் அல்லாத பிற இனம் என்று சிலரும், செட்டியார் முதலியார் முதலிய சைவ இனத்தவரல்ல, வேறு இனத்தைச் சேர்ந்தவர் என்று சிலரும் பொருள் கூறுகின்றனர்.

வள்ளலார் கருத்து அதுவல்ல. அவர் உயிரினங்களையெல்லாம் இரண்டாகப் பிரிக்கிறார். ஒன்று தட்டைப்பல் இனம். மற்றொன்று கோரைப் பல்இனம். தட்டைப்பல் இனங்கள் யானை, ஒட்டகம், குதிரை, மாடு, கழுதை, மான், ஆடு முதலியன. இவை உயிர்க்கொலையும் புலைப்புசிப்பும் உடையனஅல்ல. கோரைப் பல் இனங்கள், சிங்கம், சிறுத்தை, புலி, கரடி, ஓநாய், நரி, நாய் முதலியன. இவைகள் அனைத்தும் கோரைப் பற்களாகிய கொக்கிப் பற்களை உடையன. இவை அனைத்தும் உயிர்க்கொலையும் புலைப்புசிப்பும் உடையன. இவைகளால் புல் உணவை உண்ண முடியாது. உண்ண விரும்பினாலும் அவற்றின் பற்கள் அவைகளுக்குத் துணை செய்யா.

மக்களாய்ப் பிறந்தவர்களுள் உயிர்க்கொலையும், புலைப்புசிப்பும் உடையவர்களானால், அவர்கள் மனித இனத்தைச் சேர்ந்தவர்களல்ல, விலங்கினத்தைச் சேர்ந்தவர்கள் என்பது வள்ளலாரின் கருத்து. இதிலிருந்து உறவினம் பிறஇனம் என்பதற்கு, தட்டைப்பல் இனம், கோரைப் பல் இனம் எனப் பொருள் கூறுவதே சிறந்தது எனத் தெரிகிறது.

கழுதையானது தட்டைப்பல் உடைய மக்கள் இனத்தைச் சேர்ந்தது. அதற்கு எவ்வளவு பசித்தாலும், எதை எதையோ தின்றாலும் இறைச்சியைத் தின்னாது. அதுவே உண்ணாத பொருளை மனிதர் உண்ணலாமா? என்பது சிந்திக்க வேண்டிய ஒன்று. சிந்தித்தால் மனிதரது பற்களின் இயற்கை அமைப்பே இறைச்சியைத் தின்பதற்கல்ல என அறியலாம். ஒரு மாணாக்கன் தவம் செய்ய விரும்பி அதற்குரிய வழிகளை அறியத் தவமுனிவர் ஒருவரிடம் சென்றான். அவர் இப்பையனுடைய இளம் வயதை எண்ணி, தவம் செய்வதற்குரிய பக்குவம் இல்லை என்பதை உணர்ந்து அவனுக்கு உரிய வழியைக் காட்ட வேண்டும் என நினைந்து தம்பீ! உன்னால் ஒரு பெருந்தவத்தைச் செய்ய முடியுமா என்று கேட்டார். அவன் என்னால் முடியும் என வாக்களித்தான். அதன் பிறகு அவனுக்குரிய பெருந்தவத்தை இவ்வாறு கூறினார். அனைத்துயிரும் ஒன்றென்று எண்ணு, அரும்பசி எவருக்கும் ஆற்று, மனத்துள்ளே பேதாபேதம், வஞ்சம், பொய், களவும் சூதும் சினத்தையும் தவிர்; தவிர்ப்பாயாகில் செய்தவம் வேறொன்றுண்டோ ? இதுவே 'பெருந்தவம்' எனப் போதித்தார்.

இத்தவத்தில் மூன்று நெறிகள் உள்ளன. ஒன்று அனைத்துயிர்களும் ஒன்று என்று எண்ணுவது. மற்றொன்று அரும்பசி எவருக்கும் ஆற்றுவது. இன்னொன்று மனத்தைத் தூய்மைப்படுத்துவது. இம்மூன்றுமே 'கருணை நெறிக'ளாகும்.

வடநாட்டிலிருந்து ஜைன சமயத் தலைவர் 'அனுவிரதி ஆச்சர்யா துளசி'' அவர்கள் தென்னாட்டிற்கு வந்தபோது என் இல்லத்திற்கும் வந்திருந்தார். என் நூல் நிலையத்தையும் பார்த்தார். அதில் இராமலிங்க அடிகளின் அருட்பாவை எடுத்து அதிலுள்ள சில பாடல்களைப் படித்துக் காட்டினேன். ''வாடிய பயிரைக் கண்டு அவர் வாடியதையும், இளைத்தவர் தமைக்கண்டு இளைத்ததையும், பிறர் துயர்கண்டு துடித்ததையும் அறிந்து, அவர் துடி துடித்துப் போனார். அதோடு தென்னாட்டில் இத்தகைய சீவகாருண்யம் படைத்த சான்றோர்கள் இருந்தனரா? என்று வியந்தும் கேட்டார். மேலும் சில கருத்துக்களை அவருக்கு விளக்கிக் காட்டியபோது அவர் சொன்ன சொற்கள் இவை. ''நான் வடநாட்டில் இருந்து தென்னாட்டிற்கு வந்து மக்களுக்குக் கருணை நெறியைப் பரப்பலாம் என வந்தேன். இப்போது இன்றும் இங்கு உள்ள கருணை நெறிகளை அறிந்து, அவைகளைக் கொண்டு போய் வடநாட்டில் பரப்ப வேண்டும் என எண்ணுகிறேன்' என்பதே.

வள்ளலாருடைய கருணை நெறிகளில் ஒன்று ''எல்லா மக்களும் தங்கள் மனதைத் தூய்மைப் படுத்திக் கொண்டு, பேராசைகளையும் பேதங்களையும் ஒழித்து, சன்மார்க்க நெறி நின்று இறைவனை அடையவேண்டும்' என்பது. அதற்காக வள்ளலார் பேதை மக்களைப் பார்த்து வருந்தி அவர்கள் நிலையைத் தன் மேல் ஏற்றித் தானே பேதையானேன். அதுவும் வெறும் பேதையல்ல. ''பேயேறி நலிகின்ற பேதையானேன்'' என்கிறார். அப்படி ஆனது எதனால் என்பதற்குக் காரணமும் கூறுகின்றார். ''பித்தேறி அலைகின்ற மனத்தினாலே பேயேறி நலிகின்ற பேதையானேன்'' என்கிறார். அப்படி ஆனது எதனால் என்பதற்குக் காரணமும் கூறுகின்றார். ''பித்தேறி அலைகின்ற மனத்தினாலே பேயேறி நலிகின்ற பேதையானேன்'' என்று என்னென்ன பித்து மனத்திலே ஏறியது என்பதை விளக்கியும் காட்டுகிறார். வஞ்சக வாழ்க்கை ஏறி, மயக்கம் ஏறி, பேராசை ஏறி, மதவெறி ஏறி, அதனாலே பித்து ஏறியது என்று.

அந்தப் பித்து எப்படி மனதை அலைக்கழிக்கின்றது என்பதற்கு ஒரு உவமை காட்டுவதுதான் நமக்குப் பெரும் வியப்பைத் தருகிறது. நாம் ஏறுகிற பொருள்கள் எனச் சில உள்ளன. அவை கப்பல், மாடிப்படி முதலியன. அவை நம் மேல் ஏறுவதில்லை. நம்மேல் ஏறுகின்ற சில பொருள்கள் உள்ளன. அவை, ஆடை, அணிகலன்கள். அவற்றின் மேல் நாம் ஏறுவதில்லை. ஆனால் இரு பொருள்கள் ஒன்றின்மேல் ஒன்று ஏறுகின்றன. அவை மத்தும், தயிரும். மத்தின் மேல் தயிர் ஏறி, தயிரின் மேல் மத்துஏறி, சர்-சர் என்று அலைக்கழிப்பது போல இந்தப் பித்து என் மனதின்மேல் ஏறி, மனம் அதன் மேல் ஏறி நான் அலைக்கழிக்கப்படுகிறேன் என வருந்துகிறார். இது அவர் நிலையை அல்ல, நம் நிலையை எண்ணியே கூறியிருப்பது. பாடல் இதுதான்.

''மத்தேறி அலைதயிர்போல் வஞ்ச வாழ்க்கை
மயலேறி விருப்பேறி, மதத்தினோடு
பித்தேறி அலைகின்ற மனத்தினாலே
பேயேறி நலிகின்ற பேதையானேன்''

## முடிவுரை :

ஆக மூன்று பிரிவுகளைக் கொண்டு முறுக்கப் பெற்ற ஒரு வடக்கயிறு போன்றதுதான் அன்புநெறி, அருள்நெறி, கருணை நெறி ஆகிய மூன்று நெறிகளையும் பின்னிக்கொண்டிருக்கின்ற ஒரு நெறி; அதுவே பெருநெறி எனக் கொள்ள வேண்டியிருக்கிறது. மற்றொரு வகையில் நெறி என்றால் வழி. பெருநெறி என்றால் உயர்ந்தவழி, நல்லவழி என்றாகும். இதனுடைய நேரான மொழி பெயர்ப்பே சன்மார்க்கம் (மார்க்கம்-வழி). இதைக் கண்ட பெருமகனார்தாம், நமது இராமலிங்க வள்ளலார்.

இதுகாறும் கூறியவற்றால் வள்ளலாரது வரலாற்றையும், அவர்கண்ட நெறியையும் ஒருவாறு அறியலாம். அடுத்து, அவருடைய ''அருட்பாவை''ப் பற்றி ஆராய்வோம்.

—தொடரும்

# திருவிருத்தத்தின் முதல் விருத்தம்

ந. ரா. முருகவேள், M.A., M.O.L.,

### முன்னுரை:

நம்மாழ்வார்க்கு எம்பெருமான் மயர்வற மதிநலம் அருளினான். நம்மாழ்வார் அது கொண்டு தம்முடைய ஞானக் கண்ணுக்கு இலக்காகிய எம்பெருமானை நோக்குகின்றார். நோக்க நோக்க, அவனைப் பிரிவறக் கலந்து அநுபவிக்கப் பெறவேண்டும் என்னும் ஆராக் காதல் அவர்க்கு மிகுதிப்படுகின்றது. ஆனால் அத்தகைய இனிய அநுபவத்திற்குத் தடைகள் மூன்று இருத்தலை அவர் உணர்கின்றார்.

### மூன்று தடைகள்:

*(1)* அவைகளுள் முதலாவது தடை, பொய் நின்ற ஞானம்: அதாவது தத்துவ ஞானத்திற்கு மாறான விபரீத ஞானம். நல்வினை தீவினைகள் உண்டு, சுவர்க்க நரகங்கள் உண்டு, இம்மை மறுமை உண்டு, இறைவன் உண்டு என்று உணரப் பெறுவது தத்துவ ஞானம். நல்வினை தீவினைகள் இல்லை, இறைவனில்லை என்று பிறழ உணர்ந்து துணிந்து கூறுவது விபரீத ஞானம். தத்துவஞானம் மெய்யுணர்வு என்றும், விபரீதஞானம் திரிபுணர்வு என்றும் கூறப் பெறும்.

*(2)* இரண்டாவது தடை, பொல்லா ஒழுக்கம். இறைவன் ஒருவன் உளன் என உணர்ந்து, ''யானே நீ என்னுடைமையும்நீயே'' என அவனை வழிபட்டு ஒழுகுதல், நல்லொழுக்கம். அதற்கு மாறாக, இறையுணர்வு என்பது சிறிதும் இன்றி, யான் என்னும் அகப்பற்றும், எனது என்னும் புறப்பற்றும் ஆகிய அகங்கார மமகாரங்கள் மேலிட்டு, அவற்றின் வழியே இறைவனை மறந்து, ஊனே உடையே உகந்து ஓடியுழலுதல், பொல்லா ஒழுக்கு.

*(3)* மூன்றாவது தடை, அழுக்கு உடம்பு. பொய்ந் நின்ற ஞானத்திற்கும், பொல்லா ஒழுக்கத்திற்கும் அடிப்படைக் காரணமாக அமைந்திருப்பது, அசுத்தமான தேகத்துடன் கூடியிருக்கும் சம்பந்தமேயாகும். உடம்பு அழுக்கினின்று பிறந்தது; அழுக்குகளையுடையது; அழுக்குகள் சேர்வதற்குக் காரணமாக இருப்பது. இறைவன்பாற் பிரிவறக் கலந்து கூடி இன்புறுவதற்கு அழுக்குடம்பும், பொல்லா ஒழுக்கமும், பொய்ந் நின்ற ஞானமும் ஆகிய இம்மூன்றும், பெரிய தடைகளாக இருக்கின்றன.

இம்மூன்றினாலுமே, எல்லாத் துன்பங்களுக்கும் நிலைக்களமான கொடிய பிறவித்துன்பம் ஏற்படுகின்றது. இதுகாறும் எத்தனையோ பிறவிகளை எடுத்து எடுத்துத் துன்புற்றாயிற்று. இனிமேலும் பிறவி எடுத்து வருந்துதல் கூடாது என்று கருதி, ஆழ்வார் எம்பெருமான்பால் மிகவும் பணிவுடன் விண்ணப்பம் செய்து கொள்ளுகின்றார்!

### இரண்டு குணங்கள்:

தமது விண்ணப்பத்தைப் பெருமான்செவி சாய்த்துக் கேட்டருளற் பொருட்டு, ஆழ்வார் அவனைப் புகழ்ந்து பாராட்டிப் பேசுகின்றார். எண்ணில்லாத பலப்பல குணநலங்களையுடையவன் எம்பெருமான். ஆயினும் அவைகளுள் மிக மிகத் தலைசிறந்த குணநலங்கள் இரண்டு. அவையாவன முறையே சௌலப்பியம் (எளிமைத்தன்மை); பரத்துவம் (ஒப்புயர்வற்ற மேன்மைத்தன்மை). அவைகள் இரண்டையும் இங்கே குறிப்பிட்டு, ஆழ்வார் பேசுகின்றார்.

இறைவன் எப்போதும் மூன்று செயல்களைச் செய்தலில், குறியாக இருக்கின்றான். நல்லவர்களைப் பாதுகாத்தல்; கொடியவர்களை அழித்தொழித்தல்; அறத்தை நிலைநாட்டுதல் என்பனவே, அம்மூன்று செயல்கள். இவற்றுள் நல்லவர்களைப் பாதுகாத்தலைத்தான், இறைவன் மிகவும் முதன்மையாகக் கருதுகின்றான். இந்த ஒன்றில் ஏனைய இரண்டும் அடங்கிவிடும். ஆதலின் நல்லவர்களைப் பாதுகாப்பதற்கென்றே, அவன் 'மீன் ஆமை கேழல்' முதலிய பல வடிவங்களில் வந்து திருவவதரித்தான். நம்மைப் போல வினைவயப்பட்டு அவன் பிறக்கவில்லை. நல்லவர்களைப் பாதுகாக்க விரும்பித், தானே தன்கருத்தின்படி அருள்வயத்தாற் பிறந்தான். அங்ஙனம் அவன் பல பிறவிகளில், பல வடிவங்களில் வந்து பிறந்தான். அந்தந்தப் பிறவிகளில் பிறந்தபோது, சிறிதும் வேறுபாடு தோன்றாதபடி, அதனதன் தன்மையாகவே இருந்தான். இங்ஙனமெல்லாம் அவன்செய்தருளியது, உயிர்த் தொகுதிகளைக் காத்தருளல் வேண்டும் என்னும் அவனது ஒப்பற்ற அருளியல்பினாலேயே யாகும். ஆதலின் ''உயிர் அளிப்பான் எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்'' என்று, ஆழ்வார் இறைவனின் எளிமைத் தன்மையைப் புகழ்ந்தார்.

இறைவன் எளியவன் மட்டும் அல்லன்; மிக மிக அரியவனும் ஆவான்; அரியன் ஆதல் தான், அவனது இயற்கையியல்பு. அதுதான் மேன்மை அல்லது பரத்துவம் எனப்படும். எம்பெருமான், விண்ணுலகில் உள்ள இந்திரன் முதலிய தேவர்களுக்கெல்லாம் தலைவனாகத் திகழ்கின்றான். அம்மட்டோ! வைகுந்தம்ஆகிய பரமபத உலகில் உள்ள நித்திய முக்தர்கள் எல்லோருக்கும்கூட, அவன்தலைவனாக விளங்குகின்றான். இவ்விருவர்க்கும் ஒருசேர அவனது தலைமை நிலைமைபெற்று விளங்குதல்பற்றி,

"இமையோர் தலைவா" என்று இனிது புகழ்ந்து இறைவனை விளிக்கின்றார் ஆழ்வார்!

**விண்ணப்பம்:**

இங்ஙனம் இறைவனை,விளித்து நின்பால் யான் ஒரு விண்ணப்பம் செய்து கொள்ள வந்துள்ளேன்; இதனைச் சிறிது நின்று கேட்டருள வேண்டும் என்கின்றார் ஆழ்வார்!

பொய்ந்நின்ற ஞானமும், பொல்லா
ஒழுக்கமும், அழுக்குடம்பும்,
இந்நின்ற நீர்மை இனியாம்
உறாமை, உயிர்அளிப்பான்
எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்!
இமையோர் தலைவா!
மெய்ந்நின்று கேட்டருளாய் அடியேன்
செய்யும் விண்ணப்பமே!

[பொய்ந்நின்ற-பொய்யில் நின்ற, பொய் யாக நிலைபெற்ற.ஒழுக்கு-ஒழுக்கம், நடத்தை, இயல்பு, பிறவித்துன்பம். உறாமை-அடையாத படி. உயிர்அளிப்பான்-உயிர்களைக் காப்பதற் காக. எந்நின்ற யோனியுமாய்-எப்படிப்பட்ட பிறப்புகளையும் உடையவனாய், இமையோர்-தேவர்கள். விண்ணப்பம்-வேண்டுகோள்.]

**சொற்பொருள் நுட்பங்கள்:**

இவ்வினிய சிறந்த பாடலின்கண் உள்ள, ஒவ்வொரு சொல்லும் சொற்றொடரும், மிக நுண்ணிய சிறந்த கருத்துக்கள் செறிந்து காணப் படுகின்றன. சிந்திக்குந்தோறும் இவைகள் சிந் தனைக்கு விருந்தாய்ச் சிறந்து திகழ்கின்றன. ஈண்டுச் சில கருத்துக்கள், மிகவும் சிறப்புடை யனவாக விதந்து குறிப்பிடத்தக்கவையாகும்.

(1) நாம் பிறவிகளைப் பெறுதற்கும், இறைவனொடு கூடாமற் பிரிந்திருப்பதற்கும், பொய்ந்நின்ற ஞானம்-பொல்லாஒழுக்கம்-அழுக்குடம்பு ஆகிய மூன்றுமே முதன்மையான காரணங்கள்.

(2) தண்டகாரணியத்தில் முனிவர்கள் இராமபிரானிடம் சென்று, 'இஃது ஒருவெட்டு இஃது ஒரு குத்து, இதனைக்காண்' என்று அரக்கர்கள் தமக்குச் செய்த கொடுமைகளைக் கூறித் தம் உடம்பைக் காட்டிப் புலம்பினாற் போல, ஆழ்வார் எம்பெருமான்பால் தமது ஆத்மாவைக் காட்டி, பொய்ந்நின்ற ஞானம் முதலிய மூன்றையும் சுட்டி, 'இந்நின்ற நீர்மை' என்கின்றார் என்று, ஆளவந்தார் அருளிச் செய்வராம்.

(3) 'அடியேன் செய்யும் விண்ணப்பம்' என்று குறிப்பிடும் ஆழ்வார், அதற்கு ஏற்ப 'யான் உறாமை' என ஒருமையிற்கூறாமல், 'யாம் உறாமை' எனப் பன்மையிற் கூறுகின் றார். இஃது ஆழ்வாரின் தன்னலமற்ற பரநல உணர்வைப் புலப்படுத்துவதாகும். 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என் பதே பெரியோர் இயல்பாதலை, இதனால் நாம் இனிதுணரலாம்.

இச் சொற்றொடருக்கு 'வியாக்கியானச் சக்கரவர்த்தி' ஆகிய பெரியவாச்சான்பிள்ளை அவர்கள் ''பிறர்படும் துன்பம் (பரா நர்த்தம்) நெஞ்சிற்படுகையாலே நாட்டுக்காகத் தாம் மன்றாடுகின்றார்'' என்று எழுதியுள்ள சிறப்புரை அறிந்து மகிழற்பாலது.

(4) ''பிறவாப் பிறப்பிலை, பிறப்பித் தோர் இலையே'' எனவும், ''பிறப்பில் பல் பிறவிப் பெருமான் ''எனவும் புகழ்ந்தோதப் படும் சிறப்பினனாதலின், இறைவனை ''எந் நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்'' என்றார்.

(5) கீதையிற் கண்ணபிரான் 'நல்லவர் களைப் பாதுகாப்பதன் பொருட்டு வந்து பிறக் கின்றேன்' என்று அருளிச் செய்திருத்தலின், இங்ஙனம்எந்நின்றயோனியுமாய்ப்பிறந்தமைக் குக் காரணம் கூறுவார், 'உயிர் அளிப்பான் பிறந்தாய்' என்றார்.

(6) 'இமையோர்' என்றது கண்களை இமைக்காதவர்கள் என்னும் பொருளில் விண் ணுலகத்தில் உள்ள தேவர்களையும்; அகநோக் காகிய ஞானக்கண்களைக் குவியாதவர்கள் என் னும் பொருளில், வைகுந்தத்தில் உள்ள நித்ய முக்தர்களையும் ஒருசேரக் குறிக்கும்.

(7) 'இமையோர் தலைவா' என்றது உத் தம புருடத்தன்மையை உணர்ந்து நினைந்த படி. இது தென்னத்தியூர் என்னும் காஞ்சிபுரத் தில் உள்ள தேவாதிராசன் ஆகிய பேரருளாளப் பெருமாளையே குறிக்கும். திருவாய்மொழியின் முதற்பாடலிலும், 'அமரர்கள் அதிபதி' என்று ஆழ்வார் இவரையே சுட்டியருளினார் என்பர்.

(8) 'மெய்ந்நின்று' என்பதில் உள்ள 'மெய்' என்பதனை 'விண்ணப்பம்' என்பத னோடும் இயைக்கலாம். அங்ஙனம் இன்றி, ''உனது திருமேனியைக் காட்டி என்முன் நேரிலே நின்று'' எனவும் பொருள்கொள்ளலாம்.

(9) இனி 'நின்று' என்பதனைக் 'கேட்டு' என்பதனோடு கூட்டி, 'நின்று கேட்டு' என ஒரு தொடராக்கியும் பொருள்கொள்ளலாம். ''பெருமாள் திருவீதிப் புறப்பாடுகளில் வேத பாராயணம் கேட்க நிற்பதில்லை. அருளிச் செயல் இயல்கேட்க நிற்பதுண்டு: ஆழ்வார் இங்ஙனே நின்று கேட்டருளாய் என்று பிரார்த் தித்ததனாலன்றோ இது'' என்று அழகிய மண வாளச்சீயர் சுவாமிகள், இதற்கு நயவுரை அருளிச் செய்வராம்.

(10) 'கேட்டருளாய்' என்னும் தொட ரைக் 'கேட்டு-அருளாய்' எனப் பிரிப்பர் சிலர். 'கேட்டுவிட்டு, அதன்பின்னர் அருள்செய்க' என்பது அவர் கருதும் பொருள். அஃது ஆழ் வார் கருத்துக்கு ஏற்புடையதன்று. 'கேட்ட ருளாய்' என்பது 'நன்னயம் செய்துவிடல்' (314) என்புழிப் போல் அன்றி, 'அடங்காமை ஆரிருள் உய்த்துவிடும்' (212) என்புழிப்போல ஒரு சொல் நீர்மையது. 'செவிமடுத்துக் கேட் டல் ஆகிய அருளைச்செய்யாய்' என்பது பொருள். செவிமடுத்துக் கேட்டுத் திருவுள்ளத் திற்கொண்டால், இறைவன் அருள் செய்யா திரான் என்பது கருத்து. **

# பாரதநூற் பண்போவியங்கள்

கவிஞர் திரு. மனசை. ப. கீரன், B.A., B.T.,

(முற்றொடர்ச்சி)

## நச்சுப் பொய்கை

பாண்டவர்கள் சூதாட்ட நிபந்தனைப்படி 12 வருட வனவாசம் முடியும் காலம் நெருங்கி விட்டது. ஒரு நாள் காட்டில் ஓர் ஏழை அந்தணன் நெருப்பை உண்டாக்குவதற்கான கடைக் கோலும் கீழ்க்கட்டையும் பொருந்திய அரணிக் கட்டையில் மான் ஒன்று உராய்ந்தது. அரணிக் கட்டை அதன் கொம்பில் மாட்டிக்கொண்டது. மான் அத்துடன் ஓடத் தொடங்கிவிட்டது. அந்த அந்தணன் தன் அரணிக்கட்டையை மீட்டுத் தருமாறு பக்கத்துக் குடிசையிலிருந்த பாண்டவர்களிடம் முறையிட்டான். துள்ளிக் குதித்து ஓடிய மானை அவர்களால் பிடிக்க முடியவில்லை. அது அவர்களைக் காட்டுக்குள் வெகு தூரம் இட்டுக் கொண்டு போனது. பிறகு மறைந்துவிட்டது. பாண்டவர்கள் களைத்துப் போய் ஓர் ஆலமர நிழலில் அமர்ந்தார்கள். வெயிலில் ஓடிய களைப்பாலும் தாகத்தாலும் தவித்தார்கள். அந்தணனுக்கு அரணிக்கட்டையை மீட்டுத்தந்து உதவ முடியவில்லையே என்று நினைத்தபோது வருத்தம் அதிமாயிற்று. வெய்யிலும், அலைச்சலும் வருத்தமும் தண்ணீர்த் தாகத்தை அதிகமாக்கியது. மூத்த தருமர் 'தண்ணீர் வேண்டும்' என்றார்.

நகுலன் காட்டிடையில் ஒரு மரத்தின் மேல் ஏறிப் பார்த்தான். கொஞ்சம் தூரத்தில் நீர்த்தாவரங்கள் வளர்ந்திருந்தன. அங்கே நீர்ப்பறவை கொக்கும் காணப்பட்டது. ஆகவே அங்கே தண்ணீர் இருக்க வேண்டும் என்று நகுலன் நினைத்தான். தருமரும் சென்று தண்ணீர் கொண்டு வரச் சொன்னார்.

நகுலன் விரைந்தான். அவன் எதிர்பார்த்ததைப் போலவே அங்கே ஒரு தடாகம் இருந்தது. வயிறாரத் தண்ணீர் குடித்துவிட்டு அம்பறாத் தூணியில் சகோதரர்களுக்கும் கொண்டு செல்லலாம் எனத் தண்ணீரைத் தொட்டான்.

''மாத்ரீ புத்திரனே! பொறு. தண்ணீரைக் குடிக்காதே. என் கேள்விகளுக்குப் பதில் சொல். இது என் குளம். கேள்விக்குப் பதில் சொன்னால்தான் தண்ணீர் குடிக்க முடியும்'' என்ற குரல் ஒலி கேட்டது.

தாக வேகத்தில் நகுலன் இதைச் சட்டை செய்யவில்லை. தண்ணீரை அள்ளி அள்ளிக் குடித்தான். குளத்தைவிட்டுக் கரையேறினான். மயக்கத்தினால் விழுந்தான்.

நகுலன் சென்று நேரமாயிற்றே என்று சகோதரர்கள் கலங்கினார்கள். அவனுக்கு ஏதாவது தீங்கு நேர்ந்திருக்குமோ என நினைத்தார்கள். தருமர் சகாதேவனை அனுப்பினார். தடாகத்திடம் சென்றபோது நகுலன் மயங்கிக் கிடப்பதைச் சகாதேவன் கண்டான். யாரோ கொன்றிருக்க வேண்டுமென வருந்தினான். தாகம் பொறுக்காமல் நீரைநெருங்கினான். முன் போலவே சகாதேவனையும் குரல் தடுத்தது. சகாதேவனும் கேட்காமல் நீர் பருகினான். அவனும் நகுலனைப் போலவே குளக்கரையில் மயங்கி வீழ்ந்தான்.

இப்படியே அருச்சுனனும், பீமனும் மயங்கி வீழ்ந்தனர். அவர்களின் வீரமும் ஒன்றும் செய்யமுடியவில்லை. நீர் கிடைக்காமல் தான், காட்டில் அலைகிறார்களோ என்று நல்லதையே எண்ணும் தருமன் நினைத்தான். சகோதரர்களைத் தேடிப் புறப்பட்டான்.

பசும்புல்லில் சகோதரர்கள் வீழ்ந்து கிடப்பது கண்டு துக்கம் தாளவில்லை. வனவாசம் முடியும் நிலையில், சபதம் முடிக்காமல் வீழ்ந்ததை எண்ணிக் கலங்கினார் தருமர். இதுவும் துரியோதனன் சதியாக இருக்கலாம், தண்ணீரில் நச்சு கலந்திருக்கலாம் என்ற எண்ணம் ஓடியது. எனினும் தாகத்தால் இழுக்கப்பட்டுத் தருமரும் நீரை நெருங்கினார். முன்போலவே அசரீரி கேட்டது. தருமர், இது யட்சன் குரல்தான் என நினைத்து 'கேள்விகளைக் கேள், பதில் சொல்கிறேன்' என்றார்.

மனிதனுக்குத் துணை எது? தைரியம்.

மனிதன் புத்திமானாக எந்தச் சாத்திரங்களைப் படிக்க வேண்டும்?

பெரியோரைத் துணைக் கொண்டே. மனிதன் புத்திமானாகிறான்.

தாங்கும் நிலத்தைவிடச் சிறந்தது எது? தாய்.

வானைவிட உயர்ந்தது........? தந்தை.

காற்றைவிட விசையானது? மனம்.

புல்லினும் அற்பமானது.....? கவலை.

தேசாந்திரம் போவோனுக்குத் தோழன் யார்? கல்வி.

வீட்டில் தோழன் யார்? மனைவி.

சாகும் கிழவனுக்குத் துணை....? தானம்.

பாத்திரங்களில் பெரியது....?

எல்லாவற்றையும் தன்னுள் அடக்கும் பூமி.

சுகத்தை நிலையாகப் பெறுவது எப்படி?

'நல்லொழுக்கத்தில் சுகம் நிலைக்கும்'

எதை இழந்து விடுவதில் துயரம் இல்லை?

கோபத்தை இழந்தால் துயரமே அணுகாது.

இப்படி அசரீரி கேட்ட கேள்விகள் பலவற்றுக்கும் தருமர் உடனுக்குடன் பதில் கூறினார். தற்காலத்தில் வேலைக்கும், மேல் படிப்புக்கும் நடக்கும் நேர்முகத் தேர்வுகளில் கேட்பவற்றைப் போல, இக்கேள்விகள் இருக்கிறது அல்லவா?

'மிக்க மகிழ்ச்சி. நன்றாகப் பதில் சொன்னாய். ஆனால் இறந்து வீழ்ந்த உன் சகோதரர்களில் ஒருவர் மட்டுமே பிழைக்க முடியும். நீ யாரை விரும்புகிறாயோ, அவரைப் பிழைக்கச் செய்கிறேன். யார் வேண்டும்? நன்றாகயோசித்துச் சொல்' என்றது அசரீரி.

தருமர் யோசித்தார். 'நகுலன் உயிர் பிழைக்கட்டும்' என்றார்.

யட்சன் தருமரின் முன் தோன்றினான். 'உனக்குப் பலமான அர்ச்சுனனையும் பீமனையும் விட்டு நகுலனைக் கேட்டாயே? காரணம் என்ன? என்றான்.

'நகுலன் மாத்திரியின் புத்திரன். மற்ற நாங்கள் நால்வரும் குந்தியின் பிள்ளைகள். குந்திக்கு நான் உயிரோடிருக்கிறேன். மாத்திரிக்கு நகுலன் பிழைக்கட்டுமே என்று நினைந்தே கேட்டேன்' என்றார் தருமர்

யட்சன் களித்துத் தழுவினான். ''பட்சபாதம் அறியாத என் மகனே! உன் சகோதரர் அனைவரும் பிழைத்து எழுவார்கள். 12 ஆண்டு வனவாசம் முடிய வெகு சில நாட்களே உள்ளன. உங்களின் தலைமறைவு வாழ்வும் நன்கு நிறைவேறும்!'' என்று வாழ்த்தி மறைந்தான். வீழ்ந்த சகோதரர்கள் எழுந்தார்கள்.

தருமர் தாகத்தில் தவித்த பொழுதும் யட்சனுக்குப் பதில் சொன்னார். உலகுக்கு வழி காட்டும் உண்மைகளைக் கலங்காமல் நெருக்கடி நிலையிலும் எடுத்துக் கூறினார். இதிலிருந்து, எவ்வளவு இன்னல்கள் வந்தாலும் அவசரப்படாமல் இருக்க வேண்டும் என்பதை உணருகின்றோம். சகோதரர்களானாலும் வேற்றுமை பாராட்டாமல் அறவழியில் நடக்க வேண்டும் என்ற உறுதி பிறக்கின்றது. அதனால் பாண்டவர்கள் உயிர் பெற்றதைப் போல, நாமும் இறவா இன்பம் பெறுவோம் என்று தெளிய வேண்டும். இதனால் உலகின்—சமுதாயத்தின் அன்பும் ஆதரவும், அறச் சிந்தனையாளருக்குக் கிடைக்கும் என்பது உறுதியாகிறதல்லவா?

**மறைந்து வாழ்ந்தனர்:**

பாண்டவர்களின் 12 ஆண்டு வனவாசம் முடிந்தது. விதித்தபடி இனி ஓராண்டுக் காலம் யாருக்கும் தெரியாமல் மறைந்து வாழவேண்டும். எங்கே வாழ்வது? பாஞ்சாலம், மத்சயம், சால்வம், வைதேகம், பாகலிகம், தசார்ணம், சூரசேனம், கலிங்கம், மகதம் என்று பலநாடுகள். அவற்றில் எந்த நாட்டுக்குப் போவது? அழகும் செல்வமும் மிகுந்த மத்சய நாடே தகுந்தது. அதன் மன்னன் விராடன் பலமுள்ளவன்; தருமசீலன், துரியோதனனின் பேச்சைக் கேளாதவன், பாண்டவர்பால் அன்புள்ளவன். ஆதலால் அவனை அண்டி வாழ்வதே சிறந்தது, என்று பாண்டவர்கள் கூடிப்பேசி முடிவு செய்தார்கள்.

தருமன், கங்கன் என்ற பெயரோடு சந்நியாசி வேடம் பூண்டான். தருமனிடமிருந்து பல கலைகளையும் கற்க விராடன் அவனுடன் பாய்ச்சிகை விளையாடினான். ஜோதிடம், பட்சி சகுனம், நீதி நூல்களையெல்லாம் எடுத்துச் சொல்லித் தருமன், விராடனுடனே இருந்துகொண்டிருந்தான்.

பீமன் மடைப்பள்ளியில் வல்லபன் என்ற பெயரோடு சமையல் வேலை பெற்றான். அரண்மனைக்கு வந்த மல்யுத்த வீரர்களுடன் போரிட்டும், காளைகளையும், காட்டு விலங்குகளையும் அடக்கியும், மன்னனுக்கு மகிழ்வூட்டினான். ஆனால் யாரையும் கொல்வதில்லை, என்று வாக்களித்திருந்தான்.

அருச்சுனன் பிருகன்னளையாகக் கச்சு அணிந்து வில் நாணால் தழும்பேறிய கைகளை மறைத்துக்கொண்டு அந்தப்புர மகளிரிடையில் நபும்சகனாகப் பணிபுரிந்தான். திரௌபதிக்குப் பணிவிடை செய்து பழக்கமென, மகளிர்க்கு நடனமும் பாட்டும் கற்றுத் தந்தான்.

நகுலன் விராடனின் குதிரை லாயத்தில் தாமக்கிரந்தி என்ற பெயருடன் வேலைக்கமர்ந்தான். குதிரை மருத்துவம் செய்தான். அவைகளைப் பழக்கினான்.

சகதேவன் தந்திரீபாலன் என்ற பேரோடு காளைகளையும் பசுக்களையும் காத்துவந்தான்.

திரௌபதி சைரந்திரியாக அந்தப்புரத்தில் வேலைக்கமர்ந்து அரச மகளிர்க்குத் தோழியாகவும் உதவியாளாகவும் இருந்தாள்.

அரசன் விராடன், அரசி சுதேஷ்ணை இருவரும் மகிழப் பாண்டவரும் திரௌபதியும் பணிவிடை செய்தார்கள். சுதேஷ்ணையின் சகோதரன் கீசகன். விராடன் மூத்த நிலையில், கீசகனே சேனைத்தலைவனாக இருந்து செருக்குடன் திரிந்தான். திரௌபதியை அடைய விரும்பினான்.

ஒரு சமயம் கீசகன் தன் சகோதரி சுதேஷ்ணையையும் இதற்குச் சம்மதிக்கச் செய்து விட்டான்.

''கீசகன் வீட்டில் பலகாரங்களும் நல்ல பானமும் செய்துள்ளான். சென்று வாங்கி வா'' என்று மாலை மயங்கும் நேரத்தில் சுதேஷ்ணை சைரந்திரியை அனுப்பினாள்.

சைரந்திரி பயந்தவாறே சென்றாள். கீசகன் காமுகனாய் அவளை அடைய விரும்பினான். சைரந்திரி திமிறிக் கொண்டு ஓடினாள். வற்புறுத்தினால் கந்தருவர் பழி வாங்குவர் என்றாள். ஆனால் கீசகனோ வழியில் பலரும் பார்க்க அவமதித்து உதைத்தான். ஒருமாதமே எஞ்சிய நிலையில் அவர்களைப் பகைத்தால் மறைவு வாழ்வு வெளியாகி விடுமெனப் பயந்தாள் சைரந்திரி. நடன சாலையில் நடனம் பயின்றபின் அவரவர் இருப்பிடத்திற்குப் போய் விடுவதால் இரவு தனியே சந்திக்கலாம் என்றாள்.

அன்றிரவு சைரந்திரி முதலிலேயே சொல்லியபடி, பீமன் நடனசாலையில் கீசகனை எதிர் பார்த்துக் கட்டிலில் கிடந்தான். கீசகனோ அழகாகப் புனைந்து கொண்டு வந்தான். இருட்டில் பீமனைச் சைரந்திரி என நினைத்தான் கீசகன். நெருங்கியதும் பீமன் அவனைப் பிடித்து இழுத்துப் போரிட்டான். பெரும்போர் நிகழ்ந்தபின் இறுதியில் கீசகன் உருத் தெரியாமல் விழுந்து இறந்தான். காலையில் சைரந்திரி, தன்னைத் தகாதமுறையில் நெருங்கியதால், கந்தர்வர் கீசகனைப் பழிவாங்கி விட்டதாகக் கூறினாள். சுதேஷ்ணையும் தனக்குப் பழிவேண்டாமென சைரந்திரியை விரட்ட நினைத்தாள். ஒரு மாதம் இருக்க அனுமதிக்க வேண்டும் என்று சைரந்திரி வேண்டிக்கொண்டாள். அப்படியே இசைந்தாள். இந்தச் செய்தி கௌரவர்களின் காதிலும் விழுந்தது. இது பாண்டவரின் வேலையாகத்தான் இருக்கும் என்று, கவுரவர் விராடனின் மேல் போருக்கு எழுந்தனர். மறைந்த நிலையில் இருந்த பாண்டவர்கள் தமக்கும் போர்ப் பயிற்சி உண்டென விராடனுக்கு உதவியாகத் திரண்டனர். துரியோதனனோ விராடனின் பசுக்களைக் கவர்ந்து சென்றான்.

விராடனின் மகன் உத்தரன் போருக்குப் புறப்பட்டான். பிருகன்னளையும், தேரோட்டும் பயிற்சி உண்டென உதவிக்குப் புறப்பட்டாள். கௌரவரின் பெரும்படையைக் கண்ட உத்தரன் திரும்பி ஓட எத்தனித்தான். பிருகன்னளை உத்தரனைப் பிடித்து வன்னிமர மீது ஏறித், தொங்கும் ஆயுத மூட்டையைக்கொண்டு வரச் சொன்னாள். முதலில் பயந்த உத்தரன் மூட்டையிலிருந்து பளபளத்த ஆயுதங்களைக் கண்டு வீறு பெற்றான்.

பிருகன்னளையோ வில்லில் நாண் தொடுத்து ஒலித்தாள். காண்டீபம் ஒலித்தது. இது கேட்ட கௌரவர்கள், ''அருச்சுனன் வந்து விட்டான். காலம் முடியுமுன்பே யாரெனத் தெரிந்துவிட்டது. மீண்டும் 12 ஆண்டு காட்டுக்குப் போக வேண்டியதுதான்! என்றனர்.

பீஷ்மரோ, ''13 ஆண்டும் நேற்றோடு முடிந்தன. இப்போதாவது சமாதானம் செய்து கொள்'' என்று துரியோதனனுக்குக் கூறினார். அவன் கேட்கவில்லை.

துரியோதனன் பசுக்களைக் கவர்ந்து சென்று கொண்டிருந்தான். பிருகன்னளையாக இருந்த அருச்சுனனோ துரோணாசாரியர் மற்றும் பிதாமகர், பீஷ்மர் ஆகியோரின் கால்களின் அருகில் மரியாதைக்காக அம்புகள் விழும்படி விட்டான். அதேசமயம் துரியோதனனை நோக்கி முன்னேறினான். துரியோதனன் இறுதியில் தோல்வியுற்றான். அவனது படைகள் தோல்வியுற்று அத்தினாபுரம் நோக்கி ஓடின. பசுக்களை மீட்டான் அருச்சுனன்.

ஓராண்டு தலைமறைந்து வாழ உதவிய விராடனின் பெருமையைக் காத்தனர் பாண்டவர். அதற்கு அர்ச்சுனனின் காண்டீபம் ஒலித்தது. கௌரவரின் காதுகளில் மீண்டும் மீண்டும் காண்டீபம் ஒலித்தது.

பாண்டவர்களின் வனவாசமும் தலைமறைவு வாழ்க்கையுமாக 13 ஆண்டுகள்முடிந்து விட்டன. விராடனின் தலைநகரில் தலைமறைவாக வாழ்ந்ததை முடித்துக் கொண்டு, பாண்டவர் உபப்பிலாவியம் என்ற நகரத்தில் வாழலாயினர். இவ்வளவு காலமும் சிக்கலிலிருந்து, துன்பங்களிலிருந்து விடுபட்ட பாண்டவர்களைக் காணப் பல நாட்டு மன்னர்கள், உற்றார் உறவினர்கள் வந்து பார்த்தவண்ணம் இருந்தனர். அரசர்கள் அவரவரின் தகுதிக்குத் தக்கபடி படைகளுடன் வந்து மரியாதை செலுத்தினார்கள்.

கண்ணனும் பலராமனும் வந்தார்கள். கண்ணன், ''இனி நடக்க வேண்டியதை நினைக்க வேண்டும்,'' என்றான். 'ஆறாத் துன்பங்களை அடைந்த பாண்டவருக்குத் துரியோதனனிடமிருந்து பாதி நாட்டைப் பெற்றுத் தர வேண்டும். அதற்குத் தக்கவரைத் தூதனுப்ப வேண்டும்,' என்பது கண்ணனின் கருத்து.

பலராமனோ, ''சூதாடியதே தவறு. சூதில் நாட்டை இழந்தாயிற்று. ஒப்பந்தப்படி தண்டனை 13 ஆண்டுத் துயர வாழ்வு. ஆனால் நாடு திரும்ப அளிப்பதென ஒப்பந்தத்தில் இல்லை. எனவே, கௌரவர் விரும்பித் தந்தால்தான் பெறலாம்'' என்று கருதினான்

சாத்யகியும் துருபதனும் போரிட்டேனும் பாண்டவரின் பெருமையை நிலைநாட்டவிரும்பினர். கௌரவரின் நிலையறியத் தூதனுப்புவதாக முடிவாயிற்று.

தூதால் படைதிரட்ட அவகாசம் கிடைக்கும். எதிரிக் குழுவிடையில் கருத்து வேறுபாடும் ஏற்படும். இவ்வகையில் தூது, போர் மேற்கொள்பவனுக்கு உதவும். இதற்கிடையில் கௌரவரும்கூட, படையும் நண்பரின் ஆதரவும் திரட்டலாயினர். கண்ணனும் பலராமனும் இருசாராருக்கும் ஒத்தவராதலின் நடுநிலையில் இருந்தனர். எனினும் அருச்சுனனும் துரியோதனனும் துவாரகைக்குக் கண்ணனைக் காணச் சென்றனர்.

அப்போது கண்ணன் தூங்கிக் கொண்டிருந்தான். இருவரும் நெருங்கிய உறவினராதலால் கண்ணனின் பள்ளியறைக்குப் போயினர். துரியோதனன் சற்று முந்திச் சென்றதால் கண்ணனின் தலைப்புறமிருந்த ஆசனத்தில் அமர்ந்தான். அர்ச்சுனனோ கண்ணனின் காலடியில் நின்றான். ஆகவே கண்ணன் கண் விழித்ததும் அருச்சுனனைப் பார்த்தான். திரும்பிப் பார்த்த போது துரியோதனன் இருந்தான். ஒருவன் முதலில் வந்தான். ஒருவனை முதலில் பார்த்தான். ஆகவே இருவருக்கும் சமஉரிமை உண்டு.

இருவரும் கண்ணனின் உதவியை நாடினர். ஆயுதமின்றித் தானே ஒரு சார்பில் உதவவும், யாதவப்படை இன்னொரு புறம் உதவவும் செய்யலாமெனக் கண்ணன் கூறினான். இளையவன் என்ற முறையில் அருச்சுனனை முதலில் கேட்கச் சொன்னான். அவன், ''கண்ணன் ஆயுதமின்றியேனும் தன் பக்கம் இருந்தால் போதும்'' என வேண்டினான். துரியோதனனுக்குப் பெரும் மகிழ்ச்சி.

துரியோதனன் ஊசி நாட்டவும் பாண்டவருக்கு இடம் தருவதாக இல்லை. கண்ணனும் தூது சென்றான், பலிக்கவில்லை.

போர் மூண்டது. பாண்டவர்கள் போர்க்களத்திலும் எதிர்ப்புறமிருந்த பீஷ்மர், துரோணர் ஆகிய பெரியோர்களை வணங்கி ஆசி பெற்றுப் போரில் ஈடுபட்டனர்; கௌரவர்களை எதிர்க்க வேண்டிய நிலை வந்தாலும் பாண்டவர்கள் அவர்களைப் போர்க்களத்தில் எதிர்க்கத் தயங்கினார்கள்.

அருச்சுனன் மாவீரன். அவனுக்கேற்ற வகையில் தேரை ஓட்டினால் தானே சிறந்த முறையில் போரிடமுடியும்? பார்த்தன் போரிடச் சாரதியாக இருந்தது யார்? கண்ணனே சாரதியானான். பார்த்தனுக்குச் சாரதியாக, பார்த்தசாரதியாக வநதான். ஆனாலும் உறவினர்களையும் பெரியவர்களையும் எதிரணியில் பார்த்த பார்த்தன் ' தயங்கினான். அப்போது சாரதியான கண்ணன், ''கௌரவர்கள், பாண்டவர்களான உங்களுக்கு மட்டுமல்ல நாட்டுக்கே தீமை செய்கிறார்கள்.... தீமையை எதிர்த்து ஒழிப்பது நல்லவர்களின் கடமை. தீயவர்கள் உறவினரே ஆனாலும் தாக்குவதும் கொல்வதும் தலைமையேற்பவர்களின் கடமை. அந்தப் பொறுப்பும் கடமையும் இன்று உன் கையில் இருக்கிறது. கடமையைச் செய்'' என்றான் கண்ணன். இந்த உபதேசமே 'கீதை' என்று புகழப்படுகின்றது. இவ்வுரைகளைக் கேட்ட அருச்சுனன் பகைவர்கள் மேல் ஆவேசம் கொண்டு பாய்ந்தான். போர் தொடர்ந்து பலநாள் நடந்தது.

கௌரவர்களும், பீஷ்மர் துரோணர் போன்ற பெரியோரும் போர்க்களத்தில் உயிர் விட்டனர். இருபுறமும் உற்றார், உறவினர்களில் முக்கியமானவர்களும், வளர்ந்து பரம்பரையையும் நாட்டையும் காக்க வேண்டியவர்களும் மறைந்தார்கள். இந்தக் கொடும்போர் 18 நாட்கள் நிகழ்ந்தது.

போரின் முடிவில் தருமரும், சகோதரர்களும் உற்றார் உறவினர் பலர் மறைந்து விட்டனரே என்று துயரத்தில் ஆழ்ந்துவிட்டனர். தருமருக்கு ஆறாத்துயர். போர் முடிவில் இன்பத்திற்குப் பதில் துன்பமே மிகுந்தது. வன்முறையில் விளைவது நன்மையாக எப்படி முடியும்? இப்படித்தான் புத்தரும் அசோகரும், காந்தியடிகளும் போரையும், வன்முறையையும் வெறுத்தொதுக்கினர். அந்த வழியில்தான் உலக மன்றங்கள் இன்றைக்குத் தோன்றியுள்ளன. உலக இதய ஒலியாய்க் கொண்டு இயங்கி வருகின்றன. **

## நால்வர் குருபூசை நாள்கள்

சித்திரைச் சதயம் அப்பர்; சிறந்த வைகாசி மூலம்
அத்தரைப் பணி சம்பந்தர்; ஆனிமா மகத்தில் அந்த
முத்தமிழ் வாத வூரர்; முதியநல் ஆடி தன்னில்
சுத்தமாம் சோதி நாளில், சுந்தரர் கயிலை சேர்ந்தார்!

—தனிப்பாடல்.

# சேயூர் முருகன்

"இலக்கியப் பேரறிஞர்"

திரு. மு. அருணாசலம், எம். ஏ.,

**முன்னுரை:**

முருகனுடைய பிரசித்திபெற்ற தலங்கள், படைவீடுகள் என்று திருமுருகாற்றுப்படையால் புகழ்பெற்ற ஆறு ஆகும். இவற்றுள் குன்று தோறாடல் என்ற பெயரில் அடங்கியனவாகத் திருத்தணிகை, திருமயிலம் போன்ற பலகுன்று களிலுள்ள முருகன் தலங்களும், வேறு சில அபிமானத் தலங்களும் முருகனுடைய சிறப்புத் தலங்களாகச் சொல்லப்படும். வேறுள்ளவற் றிற்கு உதாரணமாக, புள்ளிருக்கு வேளூர், திருச்சிக்கல் போன்ற தேவாரப் பாடல்பெற்ற தலங்களும், பாடல் இல்லாத முருகனுக்கே யுரிய தலங்களாகிய எட்டுக்குடி, எண்கண் முத லான தலங்களும் சொல்லப்பெறும். இப்படி முருகனுக்கேயுரிய தலங்களில் தொண்டை நாட் டிலுள்ள சேயூர் என்பதும் ஒன்று. சேய்-முரு கன்; ஆகவே ஊர் சேயூர்; இது மருவிச் செய் யூராயிற்று. இலக்கியங்களில் இவ்வூர் 'செய்கை-வளவாபுரி' என்றும் சொல்லப்படும்.

**இடம்:**

இவ்வூர் செங்கல்பட்டு மாவட்டம் மதுராந்த கத்திலிருந்து கிழக்கே 16 மைல் தொலைவில் உள்ளது. இது பட்டணமென்று சொல்லத்தக்க வசதி படைத்த ஊர். முன் சமீன் ஊராயிருந்து இனாம் ஒழிப்புச் சட்டத்தால் அந்த நிலையி லிருந்து மாறியது. முருகன் கோயிலும், வேறு தனிச் சிவன்கோயில்களும், திருமால் ஆலயங் களும், பல்வேறு காவல் தெய்வங்களான சத்தி கோயில்களும் உள்ளன. தனி முருகன்கோயில் இருப்பது இவ்வூருக்குரிய சிறப்பு. இதுவும் பெரியகோயில்.

**முருகன் கோயில்:**

இது கந்தசாமி கோயில் என்றும் சொல்லப் பெறும். இது கிராமத்தில் தனியே உள்ளது. சுவாமி சந்நிதி கிழக்கு நோக்கி இருந்தாலும், வாயில் தெற்கு மதிற் சுவரில்தான் அமைந் துள்ளது. வாயிலின் முன்புறமும் பின்புறமும் பெரிய விசாலமான தெற்றிகள்; தெற்றிகளின் சுவரில் சிலவீரர் வடிவங்கள் செதுக்கப்பெற் றிருக்கக் காணலாம்.

தெற்றிகளைக் கடந்ததும் வெளிப்பிரா காரம், கோயில் வாயிலில் (தெற்கு) சோம நாதேசுவரருக்குச் சிறு ஆலயம். முருகனுக்குத் தனிக்கோயில் இருக்கும் எல்லா இடங்களிலும் சிவம் சத்திக்கும் கோயில் உண்டு. எட்டுக்குடி எண்கண் சுவாமிமலை முதலான எல்லாஇடங் களிலும் இப்படியே. கோயில் என்றால் சிவன் கோயில்தான். முருகனுக்குச் சிறப்புமிக்க தல மாயிருந்தாலும், அங்குத் தவறாது சிவமும் சத்தியும் பிரதிட்டை செய்யப்பெற்றிருக்கும். இங்கு சுவாமி திருநாமம் சோமநாதேசுவரர். அம்பிகை திருநாமம் மீனாட்சியம்மை. அம் பிகை, சுவாமி கருவறையினுள்ளேயே உள்ள னர். அதன் வாயிலில் பிரமனும் திருமாலும்: எதிரில் சிவசூரியன்.

**முருகன் சந்நிதி:**

தெற்கு வாயில் கடந்து உட்சென்றால் இடப்புறம் முருகன் கருவறை. கிழக்குநோக்கி முருகன் ஏகமுகராகப் பெரியவடிவில் உள்ளார். வள்ளி தேவயானை இருபுறமும்; முருகனுக்குப் பின்னால் வழக்கம்போல் மயில். துவாரத்தில் துவார பாலகர். எதிரில் மயிலும் பலிபீடமும். கிழக்கு வாயில் உள்ளது. ஆனால் அதற்கு உப யோகம் இல்லை. இவ்வாயிலுக்கு வெளிப்புற மும் இரு பெரிய துவார பாலகர் உள்ளனர்.

முருகர் சந்நிதியில், மயிலுக்குத் தென்பால் முண்டிதமான கும்பிட்ட கோலத்தில் அந்தகக் கவி வீரராகவ முதலியார் சிலை உள்ளது. இவர் இத்தலத்துக்குப் பிள்ளைத்தமிழ் பாடிய வர். இவரது பரம்பரையில் வந்தோர் முற் காலத்தில் இங்கு இவ்வடிவைச் செய்தார்கள்.

**கோட்டங்கள்:**

கோட்டங்களில் நிருத்த ஸ்கந்தர்-நடமா டும் முருகன்வடிவம்; கணபதி, தட்சிணாமூர்த்தி, பிரம்மசாஸ்தா-ஒரு காலை மடித்த வடிவம்; பொதுவாக சாஸ்தா சிவன் கோயிலினுள் இருப் பதில்லை. காரணம் முருகனுக்கே பிரம்ம சாஸ்தா என்று பெயர் உண்டு. பிரமனுக்குச் சாசனம் (கட்டளை) அளித்தவன் ஆதலால்,

இவ்வுரு இங்கிருப்பது பொருத்தமே. இங்குக் கோட்டத்திலேயே இவர் அமைக்கப்பெற்றுள் ளார். பின்னும் மற்றொரு நிருத்த ஸ்கந்தர் இரு கைகளில் பத்மம் ஏந்தி, வரத அபயகரங் களோடு, கோமுகை மீதும் பிரமன் ஸ்தானத்தி தில் ஸ்கந்தரே. தனியே மற்றொரு கோட்டத் தில் புளிஞர் என்று சொல்லும் வேடர் வடி வில் வில்லும் அம்பும் ஏந்தியமுருகன். சண்டே சர் வழக்கம் போல் சிறிய கோயிலில்.

**உற்சவ மூர்த்திகள்:**

முதலாவதாகப் பிரமன். இங்கு முருகன் பிரமனைப் பிரணவத்தின் பொருள் அறியாமை யால் குட்டிச் சிறையில் இட்ட காரணத்தால் இவ்வுருவம். பொதுவாகப் பிரமன் திருமேனி எங்கும் இருப்பது வழக்கமில்லை. அடுத்துத் திருமால், தண்டபாணி, பிட்சாடனர். ஒன்ப தாந்திருநாளில் பிட்சாடனர் உலா வருவார். விநாயகர், முத்துக்குமாரசாமி. அவர் கந்தர் சஷ்டி விழாவில் சூரசம்மாரத்துக்கு எழுந்தருளு கிற மூர்த்தி. இவர் நின்ற கோலம். மயில்மீது வலக்காலைத் தூக்கி வைத்திருக்கிறார். அஸ்திர தேவர், சீபலிநாயகர், அடுத்துள்ள உருவம். அந்தகக் கவியின் செப்புத்திருமேனி என்றுசொல் கிறார்கள். பின் சண்டேசர், வீரவாகுதேவர் இருவடிவங்கள். செப்புத் திருமேனி முருகர் இருவர் உள்ளனர். சந்நிதிக்கு இடப்புறம் தெற்கு நோக்கி நடராசர் சபை இருக்குமிடத் தில் தனியான ஒரு சபை. இங்கு தேவியரோடு சண்முகர் உள்ளார். இவர் திருவாதிரையில் மட்டும் உலா எழுந்தருளுவது வழக்கமாம். இவரையன்றி, சோமநாதர்கோயிலுக்குத்தென் புறம் ஒரு தனிக்கோயிலில் பெரிய வடிவினரான மற்றொரு முருகர் தேவியரோடு உள்ளார். இவரே உற்சவ காலங்களில் வெளியே எழுந் தருளுவார். கந்தர் சஷ்டி உற்சவத்திலும் பிரம் மோற்சவத்திலும்.

**வள்ளி தெய்வயானை கோயில்:**

இது தனியே வெளிப்பிராகாரத்தில் சனி திசையில் உள்ளது. இருவருக்கும் இரு தனிக் கோயில்கள். இங்கு முன்புறம் மேல்பால்மூன்று தூண்களும், கீழ்பால் மூன்று தூண்களும், குதிரை வீரர்கள் அமைந்தவை. மிகவும் சிறப் பாகப் பல சிவபராக்கிரம வடிவங்கள் பொறிக் கப்பெற்று மிகவும் அழகாகக் காட்சி தருகின் றன. இவையொத்த ஆறு தூண்கள் வன்மீக நாதர்கோயில் சந்நிதியிலும் உள்ளன. இவை பிற்காலம் நாயக்கர் ஆட்சியில் அமைக்கப்பெற் றன என்று தெரிகிறது. தூண்கள் உள்ள மண்ட பம், வசந்த மண்டபம்போல, உற்சவ காலங் களில் மூர்த்திகளை வைத்து அலங்கரித்து எழுந்தருளச் செய்வதற்குப் பயன்படுகிறது.

**வன்மீகநாதர் கோயில்:**

இதுவே இங்குள்ள சிறப்பான சிவாலயம். சந்நிதி கிழக்கு நோக்கியிருப்பினும், வாயில் தெற்கு நோக்கியதுதான். கோயிலின் பல பகுதிகளுக்கு 1945, 1960, 1970 முதலான பல ஆண்டுகளில் கும்பாபிஷேகம் நடந்துள்ளது. வாயிலின் வெளிப்புறம் மேல்பால் தீர்த்தம். தீர்த்தக்கரையில் பின்னமான பழைய பெரிய அழகிய விநாயகரும் முருகரும் வைக்கப்பட்டுள் ளனர். வாயிலை அடுத்து உட்சென்றால் நீண்ட மண்டபம்.

அடுத்து ஆன்மீகநாதர் சந்நிதி. கருவறை மிகவும் பள்ளத்தில் உள்ளது. மழைக்காலத்தில் நீர்முழுமையும் ஊறி முழுகச் செய்கிறது. சிவ லிங்கம் சிறிய வடிவு. சுயம்பு. ஆதியில் புற்று மூடிக் காணப்பட்டமையால் புற்றிடங்கொண்ட நாதர். வன்மீகநாதர். மண்ணை அப்புறப் படுத்தியபோது பின்புறம் மண்வெட்டி, சிவலிங் கத்தில் பட்டு, வழித்தது போன்ற தோற்றம் இன்றும் காணப்படும். சந்நிதியில் சிற்ப வேலைபாடு மிக்க ஆறு தூண்கள். துவாரபால கர், துவாரவிநாயகர், கோட்டங்களில் விநாய கர், தட்சணாமூர்த்தி, நிருதியில் பிரதான விநாயகர் கோயில், பின்கோட்ட தட்சணா மூர்த்தி, நேர் பின்னோ முருகன் இல்லை. வடமேல் கோடியில் வழக்கமாய் லட்சுமி இருக் கும் இடத்தில் முருகர் உள்ளார். இடைப்பகுதி வேதபுரீசர், வேணுகோபாலர், காசிவிஸ்வ நாதர் உள்ளனர்.

வடகோட்டங்களில் பிரமன் துர்க்கை. வழக்கம்போல் சண்டேசர். சந்நிதிக்கு எதிர்ப் புறம் பைரவரும் சூரியனும். அம்பிகை கோயில் தனியே பெரிதாக உரிய இடத்தில் உள்ளது. துவார பாலகியர்-ஜயை விஜயை. அம்பிகை திருநாமம் முத்தாம்பிகை. முத்துவாணியம்மை என்றும் சொல்வதுண்டு; இப்பெயர் சேயூர் முருகன் பிள்ளைத்தமிழில் சொல்லப்பட்டுள் ளது.

தலவிருட்சம் வில்வம். மாசிமகத்தில் பிரம்மோற்சவம். தேர் முதலியன சிறப்பாக இருந்தன. இப்போது இல்லை. உற்சவ மூர்த்திகள் எல்லோரும் உள்ளனர். சிறப்பாக சுக்கிரவார அம்மன். பிரதோஷநாயகர்; நட ராசர், அம்பிகை சிறிய வடிவினர். சுவாமி சந்நிதி வலப்புறம். தனியே நவக்கிரகக் கோயில் புதிய பிரதிட்டை.

வெளிப்பிராகாரத்தில் வடமேல்புறம்முதல் கோயில் சத்தமாதர் கோயில். முதலில் பெரிய முத்தாம்பிகை வடிவம் கும்பாபிஷேகர் காலத் தில் இங்கு வைக்கப்பட்டது போலும். அடுத்து துர்க்கை. இவை நின்ற கோலம். அடுத்து ஒரு சாஸ்தா. பின்முறையாகச் சப்தமாதர்கள். கடைசியில் ஒரு பூதகி வடிவம் இறுதியில் உள்ள சிலை, ஒரு ரிஷி என்று தெரியாமல் சொல்லு கிறார்கள்; மாணிக்கவாசகர் திருவுரு. அடுத்து ஒரு சுப்பிரமணியர் கோயில். இவர் ஆறுமுகர். மயில்மீது உள்ளார். தேவியர் இல்லை. அழ காகப் பொதுவை வேலையுள்ள சிற்பம்.

**இலக்கியம்:**

இவ்வூருக்குச் சிறப்பான இரு பிரபந் தங்கள் இன்று உள்ளன. ஒன்று புகழ்வாய்ந்த

அந்தகக் கவி வீரராகவ முதலியார் பாடிய சேயூர் முருகன்பிள்ளைத்தமிழ். இது பலமுறை அச்சாகியுள்ளது. புலவருடைய வாக்கின் சிறப்புத் தமிழுலகம் நன்கறிந்தது. எடுத்துக் காட்டாக ஒரு பாடல் கூறலாம். அம்புலிப் பருவத்து இறுதிப்பாடல்:

தவிராத வெவ்வினை தவிர்க்கும் முருகாறும்
தரித்தா றெழுத் தோதலாம்;
சந்நிதிக் கருணகிரி நாதன் திருப்புகழ்ச்
சந்தம் புகழ்ந் துய்யலாம்;
புவிராசன் வளவன் கழுக்குன்றன் வளமைபுரி
புண்ணியந் தரிசிக்கலாம்;
பொருஞ் சூரனைப் பொருங்கதை முதற் கந்த
புராணக் கடல் காணலாம்;
கவிராசர் இப்பிரான் மிசைச் செய்த திருவுலாக்
கவிவெள்ளை கற்றுருகலாம்;
கவிவீர ராகவன் சொற்ற பிள்ளைக்கவி
கலம்பகக் கவி வினவலாம்;
அவிராடகக் கோயில் புக்கு விளையாடலாம்
அம்புலீ ஆட வாவே!
அயில்வனச் செய்கையின் மயில்வனக் கந்தனுடன்
அம்புலீ ஆட வாவே!

இதனுள் ஆசிரியர் முருகாறு, அருணகிரிநாதர் திருப்புகழைப் பாடியது போலவே, பிற இடங்களிலும் குறிப்பிடுகிறார். வளவன் கழுக்குன்றன் என்பது, ஒற்றிகொண்டான் மகன் கழுக்குன்றன் என்பவர், இங்கு வந்து திருப்பணி செய்தது, சகம் 1521-ல் நடத்திய தேர்த்திரு திருவிழாவில். இதை இவ்வாசிரியரே சிறுதேர்ப் பருவம் ஆறாம் பாடலில் கூறுகிறார்:

வைவத் துரந்தூரு முரகக்கு லேசன்மகன்
மகனாகு மொரு தொண்டை மான்,
வாரிதித் திரைநல்கு மன்னன் பெரும்பேர்
வரம்பெற்ற வொற்றி கொண்டான்,
சைவத் தவப்பயனை யொத்தவன் வழிவந்த
தனையன் கழுக்குன்றனாம்
தக்கசெம் பியவளவன் வந்துனக் காலயம்
சகலமும் தந்ததற்பின்,
பௌவத்தலத்தெழு சகாத்தமோ ராயிரத்
தொருநாலு நூற்றின் மேலும்
பயிலுநாற் பத்துமூ வருடமாம் விடுவருட
மகரம்ப குந்தத் திருநாள்
தெய்வத் திருத்தே ருருட்டியது போலவிச்
சிறுதே ருருட்டியருளே
செய்கையாய் சரவணப்பொய்கையாய் தோகையாய்
சிறுதே ருருட் டியருளே.

மற்றொரு நூல், முதற் குறிப்பிட்ட பாடலில் கவிராயர் சொல்வது: ''கவிராசன் எம்பிரான் மிகைச் செய்த கவிவெள்ளை கற்றுருகலாம்.'' 16-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்த சேறைக் கவிராசபிள்ளை பாடிய சேயூர் முருகன் உலாவை இது குறிப்பிடுகிறது. இவ்வரிகள் இந்நூலிடத்துக் கவிராயர் கொண்டிருந்த பெரு மதிப்பைக் காட்டும். இது இன்று வரை கிடைக்கப் பெறாமலிருந்தது. இப்போது இது திருவான்மியூர் மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூலகத்திலிருந்து பிரதி செய்யப் பெற்று என்னால் பதிப்பிக்கப் பெறுகிறது. இது 503 கண்ணிகள் கொண்ட சிறந்த நூல். இவ்வாசிரியரே திருவாட்போக்கி நாதருலாவும் திருக்காளத்தி நாதருலாவும் பாடியவர். சேயூர் முருகனுலாவிலிருந்து ஒரு பகுதி: பேரிளம்பெண் உலாவரும் முருகனைத் துதிக்கிறாள்:

கண்டாள், இரண்டு கரதலம் தன்முடிமேல்
கொண்டாள், சிவந்த குமுதவாய்-விண்டாள்
குகனே அரசே கொழுஞ்சுடரே கங்கை
மகனே கவுரி மணியே-அக்கினிதனே
நித்தனே சோதியே நேயனே சேயனே
சுத்தனே ஆயனே தூயனே-முத்தனே
வேளே அரனே வினோதனே வித்தகனே
தோளே துணையே சுலபனே-வாளவுணர்
காலனே செஞ்சதங்கைக் காலனே கந்தனே
பாலனே லோகபரி பாலனே—சீலனே
ஒருருவே உன்னதமே ஓங்கலே உட்பொருளே
காருருவே தாரே கனவுருவே—சீருருவே
விண்ணே அனந்தமே வேத விழுப்பொருளே
கண்ணே ஒளியே கவிதையே—பண்ணே
அருவே அகண்டமே ஆனந்த வைப்பே
உருவே உளமே உணாவே-கருவே
கதியே பரஞ்சுடரே கற்பகமே நண்பே
விதியே வெளியே விளைவே-அதிகமே
தந்தி முதற்கிளைய தாணுவே தற்பரமே
அந்தி ஒளிபடைக்கும் ஆதியே குந்தம்
சிறந்தநிதி யேசெய்யூர்ச்செவ்வேளே என்னை
மறந்து விடிலின்ப வழக்கோ?

கவிராயர் தாமே குறிப்பிடுகின்ற 'கவி வீரராகவன் சொற்ற பிள்ளைக் கலம்பகக் கவி வினவலாம்' என்பது இவர் பாடிய சேயூர் முருகன் கலம்பகத்தைக் குறிப்பிடுவது. இந்நூல் இன்று இருப்பதாகத் தெரியவில்லை.

அருணகிரிநாதர் இத்தலத்துக்குப் பாடியது 'முகிலாமெனும்' என்று தொடங்கும் திருப்புகழ். இங்கு சேயூர் வளவாபுரி என்று குறிப்பிடப்பட்டுள்ளது. தண்டபாணி சுவாமிகள் இத்தலத்திற்குத் திருப்பதிகக் கோவை என்ற நூல் பாடியுள்ளார். இவ்வூர் முத்தையா முதலியார் இத்தலத்துக்குப் புராணம் எழுதியுள்ளார்.

கோயிலுக்கு வெளியே தென்மேற்கில் அழகிய பெரியவிநாயகர் வடிவமும், முருகன் வடிவமும் வைக்கப்பட்டுள்ளது. இவற்றின் பின்புறம் தீர்த்தம். **

# "வீறதேறும் தமிழால் வழி"

'தத்துவப் பேரறிஞர்'
டாக்டர் திரு. வ. ஆ. தேவசேனாபதி, M.A., Ph.D

"உரையுணர்விறந்து நின்றுணர்வதோர் உணர்வே!
யானுன்னை உரைக்கு மாறுணர்த்தே"

என்று மாணிக்கவாசகர் இறைவனிடம் வேண்டிக் கொள்கிறார். இறைவன் உண்டு என்பதனை உணர்வதும், உண்டு என உணர்ந்தால் அவ்வுணர்வை உரையால் வெளியிடுவதும் எளிதல்ல. எனினும் இறைவனை உணர்ந்து, தாம் அடைந்த இன்பத்தைப் பிறர்க்குத் தெரிவிப்பதனால், அவர்களையும் அவ்வின்பத்தைப் பெற முயலச் செய்யவே மாணிக்கவாசகர் திருவாசகத்தை இயற்றியுள்ளார். திருவாசகத்தின் பெருமை உலகறிந்த ஒன்றாகும். திருவாசகத்தைப் போலவே தேவாரம், திவ்வியப்பிரபந்தம் முதலிய புகழ்நூல்களும் உள. தமிழ்மொழி மிகச் சிறந்த சமய இலக்கியமுடையது என்று அறிஞர்களால் போற்றப்பெறுகிறது. மேலும் இறைவன் அருள் பெற்று வீடுபேற்றினை அடைவதற்கு இம்மொழி துணைசெய்கிறது.

சைவ நூல்களை முறைப்படுத்திய நம்பியாண்டார் நம்பிகள் என்னும் புலவர் பெருமான், இறைவனையடைந்து பேரின்பம் துய்த்தற்கு வாயிலாகவுள்ள அறிவு மொழி இத்தமிழ் மொழியெனக் கண்டு, அக்காட்சியைத் திருஞானசம்பந்தப் பிள்ளையார் பெருமைகூறு முகமாக,

"ஆறதேறுஞ் சடையான் அருள்மேவ அவனியர்க்கு
வீறதேறுந் தமிழால் வழிகண்டவன்"

என்று வெளியிட்டருளினார். "சிவபிரானது திருவருட் பேற்றையடைய உலகத்தவர்க்குத் தமிழால் வழிகண்டவர்" என்னும் இதனால் இது ஞானமொழி என்பதில் ஒரு சிறிதும் ஐயமின்றாம். ஈண்டுத் தமிழைச் சுட்டுங்கால், "வீறதேறுந்தமிழ்" என்றார். வீறு என்னும் சொல் "வேறொன்றற்கில்லா அழகு" என்னும் பொருளதாம். இப்பொருள் சீவக சிந்தாமணியில் "வீறுயர் கலசநன்னீர்" என்புழி நச்சினார்க்கினியர் கண்டதாகும். வேற்று மொழிகட்கில்லாச் சுருங்கச் சொல்லல், விளங்கவைத்தல் முதலிய அழகுகள் இத்தமிழ்மொழிக்கண் மலிந்திருத்தலின், இச் சொற்பொருள் நச்சினார்க்கினியர் கண்ட அவ்விடத்திலும் இங்கு மிகவும் இயைபுடைத் தென்பது நன்கு விளங்கும்.

வீடுபேற்றுக்குத் தமிழால் வழி என்னும் கருத்து ஆராயத்தக்கதாம். வீடு பேற்றுக்கு வழியாக அறிவுநெறி (பக்தி மார்க்கம்), தன்னலமற்ற தொண்டுநெறி (கர்ம மார்க்கம்)என்பவை பேசப்பெறுகின்றன.

"எழுத்தறியத் தீரும் இழிதகைமை; தீர்ந்தால்
மொழித்திறத்தின் முட்டறுப்பானாகும்-மொழித்
திறத்தின்
முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து
கட்டறுத்து வீடு பெறும்"

என்னும் வெண்பாவில் வரும் கருத்து, மொழியைச் சரிவர உணர்வதன் கட்டாயத்தை வற்புறுத்துகிறதெனினும், மொழிஅறிவு அல்லது இலக்கண அறிவு,எம் மொழியிலும் கருவியாகக் கூறப்படுவதாகக் கொள்ளலாம். எனவே, தமிழ் மொழியின் வழி, வீடுபேறு என்பது மிகத் தெளிவாகத் தமிழ்மொழியின் முதன்மையைக் கூறுவது புதிய கருத்தாகத் தோன்றுகிறது. மேலும், மொழியை முன்கூறிய மூன்று நெறிகளுள் யாதேனும் ஒன்றைக் கற்பிக்கப் பயன்படுத்தலாமெனினும், முதன்மை மொழிக்கே தரப்பெறுவது வியப்பையுண்டாக்குகிறது. இதே கருத்து வேறு எங்கேனும் கூறப்பட்டுள்ளதா என்று எண்ணும்போது,

"சித்தர் சித்தத் துறப்பற்றி மெத்தப் புகழ்
செப்பு முத்தித் தமிழ்ப் பெருமாளே"

என்னும் திருப்புகழ் நினைவுக்கு வருகிறது. "முத்தித்தமிழ்ப் பெருமாளே" என்பதற்கு முத்தியைத் தரவல்ல தமிழாம் தேவாரத்தை அருளிய பெருமாளே(அல்லது )முத்தியைத் தரவல்ல பெருமாளே! தமிழ்க் கடவுளாம் பெருமாளே' என்று தணிகைமணி வ. சு. செங்கல்வராய பிள்ளை அவர்கள் பொருள் கண்டுள்ளார்கள். 'ஞானசம்பந்தன் தமிழ் பத்தும் வல்லார்எய்துவர் வீடெளிதே' என்னும் வரியையும் திரு. பிள்ளை அவர்கள் அடிக்குறிப்பாகக் கொடுத்துள்ளார்கள்.

"செஞ்சொல் சேர் சித்ரத் தமிழாலுன்
செம்பொ னார்வத்தைப் பெறுவேனோ"

"வாய்ப்புற்ற தமிழ் மார்க்கத்தின் பொருள்
வாய்க்கும் சித்திர முருகோனே"

''குறுமுனிவ விருபொழுதும் அர்ச்சித்து முத்திபெற
அறிவுநெறி தவநிலைகள் செப்புத் தமிழ்க்கினிய
குருகுமர பழனிவளர் வெற்புத்தனிற்றிகழும்
பெருமாளே''

''அருணதள பாதபத்ம மதுநிதமுமே துதிக்க
அரியதமிழ் தானளித்த மயில்வீரா''

என்பன போன்ற திருப்புகழ் வரிகளும் ஆராயத் தக்கன.

''அவிழ்க்கின்ற வாறும் அதுகாட்டு மாறும்
சிமிட்டலைப் பட்டுயிர் போகின்ற வாறும்
தமிழ்ச்சொல் வடசொல் எனுமிவ் விரண்டும்
உணர்த்தும் அவனை யுணரலு மாமே''

என்பது திருமந்திரம்.

''ஆதியிற் றமிழ் நூல் அகத்தியர்க் குணர்த்திய
மாதொரு பாகனை வழுத்துதும்
போதமெய்ஞ் ஞான நலம்பெறற் பொருட்டே''

என்னும் தொல்காப்பியப் பாயிரம் தமிழுக்கும் மெய்ஞ்ஞான நலத்துக்கும் உள்ள தொடர்பினைக் காரண காரிய முறையில் குறிப்பதாகவும் கொள்ள இடமிருக்கிறது.

சிவன் திருமால் முருகன் இம்மூவரையும் வழிபடும் அடியவர்கள் இத் தெய்வங்களுக்குத் தமிழில் மிகுந்த ஆர்வமிருப்பதாகவும், தமிழுக்கே இவர்கள் உறைவிடமாக அல்லது தமிழே இவர்களுடைய உறைவிடமாக இருப்பதாகவும் நினைத்துப்பாடி மகிழ்கிறார்கள். ''அங்கண் முல்லையின் தெய்வம் என்றருந்தமிழ் உரைக்கும் செங்கண்மால்' என்று சேக்கிழார் கூறுவது நினைவுக்கு வருகிறது. செந்தமிழ்ப்பின் சென்ற கொண்டலாகக் குமரகுருபரர் கூறுவது கணிகண்ணன் வரலாற்றினைக் குறிப்பதாகும். ''தமிழ் ஞானசம்பந்தன்'' என்று பெருமிதத்தோடு ஞானசம்பந்தர் பாடுவதைப் போலவே, பூதத்தாழ்வாரும் ''பெருந்தமிழன்'' என்று தம்மை அறிமுகப் படுத்திக் கொள்ளுகிறார். பொதுவாகத் திவ்வியப் பிரபந்தத்தையும், சிறப்பாகத் திருவாய் மொழியையும் திருமால் அடியார்கள் பாராட்டிப் போற்றுகின்றனர்.

''..........குருகூர்நிமலன்
புனையுந் தமிழ்க்கவியா லிருணீங்கிப் பொருள் விளங்கி
வினையுந் திரிவுற்றன குற்ற நீங்கினவேதங்களே''

''மொழி பலவாயின செப்பம்
பிறந்தது முத்தியெய்தும்
வழிபல வாயவிட்டொன்றா
யதுவழு வாநரகக்
குழிபல வாயின பாழ்பட்டன
குளிர்நீர்ப் பொருநை
சுழிபலவாயொழு குங்குரு
கூரெந்தை தோன்றலினே''

செய்யதமிழ் மாலைகள் நாம் தெளியவோதித்
தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே''

என்று தேசிகப் பிரபந்தத்தில் வருவன ஈண்டு நினைவு கொள்ளத்தக்கன. குறிப்பாகக் ''குருகூரெந்தை தோன்றலின் மொழிபலவாயின செப்பம் பிறந்தது., முத்தி யெய்தும் வழிபல வாயவிட்டொன்றாயது'' என்பதும் ''செய்ய தமிழ்மாலைகள் நாம் தெளியவோதித் தெளியாத மறை நிலங்கள் தெளிகின்றோமே'' என்பதும் பெரிதும் இன்பம் பயன்பனவாகும். மறைகளுக்கெல்லாம் வித்தாயும் விளைவாயும் உள்ள பிரணவத்தின் பொருளை இறைவனுக்குமுருகர் தமிழில் கூறினார்என்னும் கருத்து,

''கொன்றைச் சடையாற் கொன்றைத் தெரியக்
கொஞ்சித் தமிழாற் பகர்வோனே''

என்று திருப்புகழில் காணப்பெறுகிறது. கூடலில் தமிழாய்ந்த சிவனைப் போல முருகரும் முத்தமிழை ஆயும் வரிசைக்காரராகப் போற்றப் பெறுகிறார்.

மேற்கூறியனவற்றால் வீடுபேற்றுக்குத் தமிழை வழியாக நம் முன்னோர்கள் கொண்டார்கள் என்பது விளங்கும். நம் மொழியைப் பற்றி விரிவான விஞ்ஞான முறையில் ஆராய்ச்சி மேல்நாட்டில் பல ஆண்டுகளாகவும், நாட்டில் சில ஆண்டுகளாகவும் நடந்து வருகிறது. மொழிகளின் ஒற்றுமை, வேற்றுமைகளை ஆராய்வதோடு தனிப்பட்ட முறையிலும் ஒரு மொழிக்கு என்ன சிறப்பு உளது என்று பார்ப்பது நலம். உலகியல் நுகர்ச்சிகளை வெளிப்படுத்த மட்டும் மொழி ஏற்பட்டதா? புறப்பொருள்கள் அல்லது வேற்றுநிலை உண்மைகள் (Abstract truth) பற்றி விஞ்ஞான முறையில் விளக்கம் தரவும் மொழிக்கு ஆற்றலுண்டா? மற்றும், அக வுணர்வுகளையும் புலன்களுக்கு எட்டா உண்மைகளையும் தெரிவிக்க மொழி உதவுமா? உதவுமெனின் விஞ்ஞான முறைக் கட்டுப்பாட்டுடன் அவ்வாறு செய்யமுடியுமா? இன்றேல் அவற்றின் மெய்ம்மை பொய்ம்மைகளை எவ்வாறு பிரித்தறிய முடியும்? இன்னபல கேள்விகள் தற்கால மெய்யுணர்வியலில் மொழி பற்றி எழுகின்றன. பண்டிதமணி அவர்கள், வேற்றுமொழிகட்கில்லாச் சுருங்கச் சொல்லல், விளங்க வைத்தல் முதலிய அழகுகள் இத் தமிழ் மொழிக்கண் மலிந்திருத்தலின் இச் சொற்பொருள் நச்சினார்க்கினியர் கண்ட அவ்விடத்தினும் இங்கு மிகவும் இயைபுடைத்தென்பது நன்கு விளங்கும்'' என்கிறார்கள். சுருங்கச் சொல்லல் (Brevity), விளங்கவைத்தல்(Lucidity) இவற்றுடன் கருக்காகச் சொல்லல் ( Precision ) என்பதும் விஞ்ஞானத்திற்கு மட்டுமின்றி மெய்யுணர்வியலிலும் சமய இயலிலும் வேண்டற்பாலன. ஆயினும் வெறும் அறிவு நிலைத் தெளிவுடன் நின்றுவிடாது உள்ளத்தை உருக்கும் தன்மையும் மொழிக்கு அமையவேண்டும். பகுத்துணர்வுக்கு விஞ்ஞானமுறை தேவைப்படுவது போலத் தொகுப்புணர்வுக்கு உள்ளுணர்வுமுறை வேண்டற்பாலதாகிறது. இவை ஒன்றற்கொன்று மாறுபட்டவையாகக் காணப்படுவதால், இரண்டின் நலத்தையும் ஒருங்கே எவ்வாறு ஒருமொழியில் பெறமுடியும்?

அறிவு விளக்கம் தருகிற 'தெள்ளு தமிழ் பாடத் தெளிவோனாக' முருகர் கூறப்படுகிறார். உளத்தின் உருக்கமும் தமிழுக்கு உண்

டென்பது திருவாசகத்தைப் பற்றிச் சிவப்பிரகாசர் முதலியோர் கூறுவனவற்றால் அன்பர்களுக்குத் தெரியும். திருவாசகத்தைப் பாராட்டுவது போலவே திருவாய் மொழியையும் அறிஞர்கள் பாராட்டுவதற்கு எடுத்துக் காட்டாக,

''உயிர்த்தாரையிற்புக்குறு
குறும்பாமொரு.. மூன்றனையுஞ்
செயிர்த்தார் குருங்கவந்தார்
திருவாய்மொழி செப்பலுற்றால்
மயிர்த்தாரைகள் பொடிக்குங்
கண்கணீர் மல்குமாமறையுள்
அயிர்த்தா ரயிர்த்தபொருள்
வெளியா மெங்களந்தண்ர்க்கே''

எனக் கம்பர் கூறுவது நினைவுக்கு வருகிறது. பண்டைக் காலமுதல் தமிழ்மொழியின்பெருமை பலவாறாகப் பாராட்டப்பட்டுள்ளது. இன்று நடைபெறும் மொழி ஆராய்ச்சியில் அதன் சிறப்பு, எழுத்துக்களின் ஒலியால் ஏற்படுவதா? சொற்களின் திறனால் உண்டாவதா? சொற்றொடர்களின் அமைப்பால் விளங்குவதா? இன்னபல கேள்விகளுக்கு விடை காண இம்மொழியைப் பிறமொழிகளுடன் ஒப்புநோக்குவதுடன், இம்மொழியையே உலகியல், விஞ்ஞானம், மெய்யுணர்வு ஆகிய மூன்று நிலைகளின் தேவைகளுக்கேற்ப எவ்வாறு அமைந்துள்ளது என்று ஆராய்வதால் மிகுந்த பயன் உண்டாகும்

அறிவு விளக்கத்தால் உருக்கம் ஏற்படுகிறதா? உருக்கத்தால் அறிவு தெளிவு அடைகின்றதா? ('கண்கள் நீர்மல்க, மாமறையுள் அயிர்த்தார் அயிர்த்த பொருள் வெளியாம்') அறிவுவழி உருக்கம்-அல்லது உருக்கத்தின் வழி அறிவு என்னும் இவ்வரிய நிகழ்ச்சியை உண்டாக்கும் தமிழ் 'சித்தர் சித்தத்துறப் பற்றும் தமிழ்''அருள்மேவ வழியாம் வீறதேறும் தமிழ்' என்பதனை இக்கால மொழி ஆராய்ச்சியாளர் நிலைநாட்டினால் 'என்றுமுள தென்தமிழ்' என்பது வலியுறுத்தப் பெறும்.

---


The following particulars are furnished regarding the OWNERSHIP of "THIRUKKOIL" the monthly newspaper, published as called for, by Rule 8 of the Registration of Newspapers (Central) Rules, 1956.

FORM IV
(See Rule 8)

| | | |
|---|---|---|
| 1. | Place of Publication | .. 119, Nungambakkam High Road, Madras-600 034. |
| 2. | Periodicity of Publication | .. Monthly |
| 3. | Printer's Name | .. Thiru M.N. Shanmugam, L.P.T., Asst. Works Manager. |
| | Nationality | .. Indian |
| | Address | .. Tamil Arasu Press, Government Estate, Madras-600 002. |
| 4. | Publisher's Name | .. Thiru U. Subramanyan, I.A.S., Commissioner, H.R. & C.E. Department |
| | Nationality | .. Indian |
| | Address | .. H.R.&C.E. Administration Department, Madras-600 034. |
| 5. | Editor's Name | .. Thiru N.R. Murugavel, M.A., M.O.L., |
| | Nationality | .. Indian |
| | Address | .. H.R.&C.E. Administration Department, 119, Nungambakkam High Road, Madras-600 034. |
| 6. | Name and Address of the individuals who own the Newspaper and partners or shareholders holding more than one per cent of the total capital. | .. Government Publication. |

I, U. Subramanyan, Commissioner, H.R.&C.E Administration Department, Madras-600 034, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

Dated 18-3-1980

(Sd.) U. Subramanyan,
Publisher.

# அருணகிரிநாதரின் ஆராப் பெருவிருப்பம்

ந. ரா. முருகவேள், M.A., M.O.L.

**முன்னுரை :**

அருணகிரிநாதரின் அருமை பெருமைகளையும், அவர் அருளிச் செய்த சொற்பொருள் நலங்களிற் சிறந்த அற்புதமான திருப்புகழ்ப் பாடல்களையும் பற்றி அறியாதவர், தமிழ் நாட்டில் எவரும் இரார். "அதல சேடனார் ஆட" எனத் தொடங்கும் திருப்புகழில், "பிரபுடதேவ மாராயன்" எனவரும் சொற்றொடர்க் குறிப்பினால், அருணகிரிநாதர் விசயநகர அரசர்களுள் ஒருவனாக விளங்கியிருந்த இரண்டாம் தேவராயன் என்னும் மன்னனின் காலத்தில் இருந்தவர் என்பது, தெளிவுறத் தெரிகின்றது. வரலாற்று ஆசிரியர்கள், இவ்வரசன் கி. பி. 1450-ஆம் ஆண்டில் அரசாண்டிருந்ததாகக் கல்வெட்டுக்களைக் கொண்டு, ஆராய்ந்து கூறுகின்றனர்.

**கிருபாசித்தர் :**

அடியவர்களை இருவகையினராக நூல்கள் குறிப்பிடுவதுண்டு. ஒரு சிலர் பன்னெடுங் காலம் முயன்று பக்தி செய்து தவம் கிடந்து, பின்னர் இறையருளைப் பெறுவர்; இவர்கள் சொரூபாசித்தர் எனப்படுவர். மற்றும் ஒரு சிலரோ, இப் பிறவியில் ஏதும் செய்திலராயினும் முன்பு செய்த புண்ணியங்களின் பயனாகச் சாதாரண நிலையில் இருந்து வரும்பொழுதே, திடீரென்று இறைவனின் திருவருளைப் பெற்று மேலான நிலையை எய்துவது உண்டு; இவர்கள் கிருபாசித்தர்கள் எனப்படுவர். அருணகிரிநாதர் கிருபாசித்தர் என்னும் வகையைச் சேர்ந்தவராவர். அவருக்குத் திடீரென்று முருகனின் திருவருள் கிடைத்தது. இதனை அவரே,

> "அறிவும், அறிதத்துவமும்,
> அபரிமித வித்தைகளும்,
> அறிஎன இமைப்பொழுதில்
> வாழ்வித்த வேதியன்"

என்று, தமது திருவகுப்பின் பன்னிரண்டாம் பாடலில் முருகனைப் போற்றியிருப்பதனால் தெரிகின்றது. "யாம் ஓதிய கல்வியும் எம் அறிவும் தாமேபெற வேலவர் தந்தருளினார்" என்று அவர், தம் கந்தரனுபூதியில் குறிப்பிட்டிருப்பதும், நாம் கருதுதற்குரியது.

**திருப்புகழ்ச் சிறப்பு:**

அருணகிரிநாதரின் திருப்புகழ், சித்திர கவித்துவம் நிறைந்தது; வகைவகையான சந்தபேதங்கள் அமைந்து கேட்பதற்கே மிக இனிமையான தலைசிறந்த ஓசைநலம் மிகுதியாகப் பெற்றது. அதனால் அவர் பாடிய திருப்புகழ், அவர் காலத்திலேயே நாடெங்கும் பரவிப் பெரிதும் போற்றப் பெற்றது. தமிழகத்தின் தெற்கு வடக்கு கிழக்கு மேற்கு ஆகிய எல்லாத் திசைகளில் உள்ளவரும், திருப்புகழைப் போற்றிப் பாராட்டி ஓதி மகிழ்ந்தனர். இத்தகைய திருப்புகழைப் பாடும்படி எனக்கு அருள்செய்த முருகப்பெருமானை, யான் எப்பொழுதும் மறக்கமாட்டேன் என்று, அருணகிரிநாதர் தமது திருப்புகழில் குறிப்பிடுகின்றார்.

> "பச்சிம தட்சிண உத்தர திக்குள
> பக்தர்கள் அற்புதம் என ஓதும்
> சித்திர கவித்துவ சத்தம் மிகுந்த
> திருப்புகழைச் சிறிது அடியேனும்
> செப்பென வைத்து உலகிற் பரவத்
> தெரிசித்த அனுக்கிரகம் மறவேனே"

என்பதனால், திருப்புகழின் அருமை பெருமைகளை அருணகிரிநாதர் காலத்திலேயே, தமிழ் மக்கள் அற்புதம் அற்புதம் எனப் பாராட்டி மகிழ்ந்தனர் என்பது தெரிகின்றது.

**வாக்கிற்கு அருணகிரி :**

திருப்புகழ் நம் செந்தமிழ் மொழியிலுள்ள கவிதை வகைகளிலேயே, மிகவும் தனிச் சிறப்பான பெருமைகள் வாய்ந்தது. தாளநுட்பங்களும், சந்தபேதங்களும், மிக இனிமையான ஓசைநலங்களும், அழகிய பற்பல சொற்றொடர் அடுக்குகளும் கொண்டது. அதனால் அவற்றில் மனத்தைப் பறிகொடுத்து முருக பக்தர்கள் அனைவரும் அதனைப் பாடிப் பாடி மகிழ்வர். இவ்வாற்றால், வாக்குநலமும் வளமும் சிறந்த கவிதைத் திறனில் தலைசிறந்தவர் என்னும் கருத்தில், "வாக்கிற்கு அருணகிரி" என்று, தமிழ்கூறும் நல்லுலகம் அவரைப் பெரிதும் புகழ்ந்து போற்றிப் பாராட்டி வருகின்றது.

**அருணகிரிநாதரின் ஆசை :**

அத்தகைய பெருநலஞ் சான்ற அருணகிரிநாதருக்கு ஆராத ஒருபெரும் ஆசை மேலோங்கியிருந்தது. முருகப்பெருமான் அவருக்கு "முத்தைத்தரு பத்தித் திருநகை" என்னும் அடியெடுத்துக் கொடுத்து, அவரைப் பாடுமாறு பணித்து அருள்செய்தான். அவரும் பாடும் பணியே பணியாய், அரிய பலப்பல திருப்புகழ்களைப் பாடி முருகனைத் துதித்து வழிபட்டுப் போந்தார். ஆயினும், அவருக்குத் தமது பாடல்களில் போதிய மனநிறைவு ஏற்படவில்லை. மேலும் மிக மிகச் சிறப்பாகப் பாடுதல் வேண்டும் என்று, அவர்தம் திருவுள்ளம் பெரிதும் விரும்பியது. 'பாம்பறியும் பாம்பின் கால்' என்றபடி, பெரியோர்களின் பெருமைகளைப் பெரியோர்களே அறிந்து போற்றவல்ல

வர்களாவர். தமது பாடல்களைக் காட்டிலும் தமக்குப் பல நூற்றாண்டுகளுக்கு முற்பட்ட திருஞானசம்பந்தரின் தேவாரத் திருப்பாடல்களில், அருணகிரிநாதர், அளவிலாத பெரு மதிப்பும் பெரும் பக்தியும் கொண்டிருந்தார். அதனால்.,

''புமியதனில் ப்ரபுவான
புகலியில்வித் தகர்போல,
அமிர்தகவித் தொடைபாட
அடிமைதனக் கருள்வாயே!
சமரில்எதிர்த் தசுர்மாளத்
தனிஅயல்விட் டருள்வோனே!
நமசிவயப் பொருளோனே!
ரசதகிரிப் பெருமாளே!''

என்று, முருகன்பால், அவர் வேண்டிக் கொள்கின்றார். நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தப் பெருமானின் அற்புதமான தேவாரத் திருப்பாடல்களைப் போலத் தாமும் பாடுதல் வேண்டும் என்றும், அத்தகைய பேராற்றலைத்தமக்கு முருகப்பெருமான் அளித்தருள்தல் வேண்டும் என்றும், அருணகிரிநாதர் பெரிதும் ஆசைப்படுகின்றார்.

**சொற்பொருள் நுட்பங்கள் :**

(1) ஞானசம்பந்தரின் மிக மேலான பெருமையை நலமுற அறிந்து உணர்ந்தவராதலின், அவரை அருணகிரிநாதர் குழந்தை என்றோ பாலன் என்றோ பிறவாறோ குறிப்பிடாமல், உலகத்திற்கே ஒரு பெரும் தலைவர் என்னும் கருத்தில் ''புமியதனில் ப்ரபுவான'' என்கின்றார். தாயுமான சுவாமிகளும் இவ்வாறே ''வெம்பந்தம் தீர்த்து உலகாள்வேந்தன் திருஞானசம்பந்தன்'' என்று அருளிச் செய்திருத்தல் காணலாம்.

(2) உலகத்திற்கே ஒருபெரும் தலைவர் என்று அறிந்துணர்ந்து போற்றத்தக்க பெருமாட்சிமை பெற்றிருந்ததனால், ஞானசம்பந்தரை அருணகிரிநாதர் அவர்தம் பெயர்கூறிக் குறிப்பிட நினையாமல், தமது பெருமதிப்பும் பக்தியுணர்வும் தோன்ற ''வித்தகர்'' என்கின்றார். 'வித்தகர்' என்னும் சொல், பிறர் எவராலும் செய்தற்கு அரிய செயற்கரும்செயல்களை மிகமிக எளிதாகவும் இனிதாகவும்செய்து முடிக்கும் ஒப்புயர்வற்ற திறமை மிக்கவர்களைக் குறிப்பதாகும். ''நத்தம்போற் கேடும் உளதாகும் சாக்காடும் வித்தகர்க்கு அல்லால் அரிது'' என்பது திருக்குறள். இதன்கண் திருவள்ளுவர் 'வித்தகர்' என்னும் சொல்லை, அதன் திட்பநுட்பத் திறம் தெரிந்து கையாண்டிருத்தல் காணலாம்.

(3) வறிதே வித்தகர் என்னாமல், 'புகலியில் வித்தகர்' என்ற நுட்பமும், ஊன்றி உணரற்பாலது. புகலி என்பது சீர்காழிக்கு உரிய பெயர். முன்னொரு காலத்தில் சூரபதுமனுக்கு அஞ்சித் தேவேந்திரன், தேவர் உலகத்தை விட்டு ஓடிவந்து, சீர்காழியில் புகலடைந்து மறைந்து உறைந்து இருந்தனன். அதனால் சீர்காழிக்குப் புகலி என்னும் காரணப் பெயர் உண்டாயிற்று. அச்சொல்லை, ஈண்டுக் குறிப்பால், சிவநெறியும் செந்தமிழும், ஞானசம்பந்தர்பால் நண்ணிப் புகலடைந்த திறனையும் சுட்டுமாறு, அருணகிரிநாதர் வழங்கியருள்கின்றார் எனலாம்.

(4) ஞானசம்பந்தப் பெருமான் நவின்றருளிய பாடல்களைப் பொதுவாகப் பாடல்கள் என்றோ கவிதைகள் என்றோ, பதிகங்கள் என்றோ பிறவாறோ குறிப்பிடாமல், **'அமிர்த கவி'** என்று போற்றிச் சிறப்பித்திருப்பது, அப்பாடல்களில் அருணகிரி நாதர்க்கு இருந்த பெருமதிப்பு மிக்க பக்தியின் ஊற்றத்தை உணர்த்துகின்றது எனலாம். சில கவிதைகள் செவிக்கு இனிக்கும். செவிக்கு இனிக்கும் கவிதைகளைச் 'செவிநுகர் கனிகள்' என்று அறிஞர்கள் போற்றுவதுண்டு. திருஞானசம்பந்தரின் தேவாரத் திருப்பதிகங்கள் செவிக்கு மட்டுமோ, சிந்தைக்கு மட்டுமோ இனிப்பவை அல்ல. உயிருக்கும் உயரின்பம் அளித்து, உயிர்களின் இறப்புத் துன்பத்தை மாற்றி, அவைகளையெல்லாம் இறவாத பேரின்ப நிலையில் என்றும் இருத்தி வைத்து உய்விக்கும் உயர்வுடையவை; ஆதலின் அவற்றை ''அமிர்தகவி'' என்று புகழ்ந்து போற்றினார்.

(5) ஞானசம்பந்தரின் சிவநலஞ் செறிந்த செந்தமிழ்த் தேவாரப் பாடல்கள் சந்தநலங்கள் செறிந்து, அவருக்கு முன்னரோ பின்னரோ பிறரெவரும் பாடாத நிலையில், பலப்பல புதுப்புதுவகையான விசித்திரமான சித்திர கவிதைகளைக் கொண்டவையாதலின், அத்திறம் தெள்ளிதின் விளங்க அமிர்தகவிஎன்றதோடு அமையாமல் ''அமிர்தகவித் தொடை'' என்றும், மேலும் சிறப்பித்துக் குறிப்பிட்டார். திருஞானசம்பந்தர் அருளிய சிறந்த பலப்பல செந்தமிழ்ப் பாடல்வகைகளைத் தெய்வப் புலவர் சேக்கிழார் பெருமான், ஒருங்கே தொகுத்துரைத்திருத்தல், (276,-277) ஈண்டு உணரற்பாலது.

(6) ஞானசம்பந்தர் தம் தேவாரத் திருப்பதிகங்களை நாளும் இன்னிசையால் நாடெங்கும் பரப்பிய பெருமாட்சிமையுடையவராதலின், இயற்ற என்றோ, புனைய என்றோ, அமைக்க என்றோ, பிறவாறோ கூறாமல், ''அமிர்தகவித் தொடை பாட, அடிமை தனக்கு அருள்வாயே'' என்று முருகன்பால் வேண்டுவாராயினர்.

**முடிவுரை :**

இவ்வாற்றால் அருணகிரிநாதரின் ஆராத நற்பேராசையும், அவர் அங்ஙனம் ஆசைப்படுதற்கு ஏற்ப அமைந்த திருஞானசம்பந்தப்பெருமானின் செந்தமிழ்த் தெய்விகக் கவிதைச் சிறப்பும், நம்மனோர்க்கு நன்கினிது செவ்விதிற் புலப்படும். ஆதலின் நாம் அனைவரும் அருணகிரிநாதரின் திருப்புகழ்ப் பாடல்களையும், அவர் வியந்து புகழ்ந்து மகிழ்ந்து போற்றிய திருஞானசம்பந்தரின் தேவாரத் திருப்பாடல்களையும், நாளும் இடையறாது ஓதி இறைவனை வழிபட்டு, வையத்து வாழ்வாங்கு வாழ்ந்து உய்ய முயலுதல் நமது கடமையாகும்!

# ஆலய வழிபாடு

பண்டிதர் திரு வைத்தீசுவரக் குருக்கள், காரைநகர்

இவ்வுலகில் உயிர்கள் மாயாகாரியமான உடல்களோடிருந்து, உலக இன்பதுன்பங்களைப் பெற்று வாழ்கின்றன. இந்த வாழ்வு இகலோக வாழ்வு எனப்படும். இவ்வாழ்வு தற்காலிக மானது; நிலையா இயல்போடு கூடியது; இன்ப துன்ப மயக்கநிலை வேறுபாடுகளுக்கு இட மானது; சனன மரணத் தொடர்ச்சிகளால் நிறைந்திருப்பது; சுவர்க்க நரக அநுபவங்கட்கு முரியது.

இந்த உடலிற் பொருந்தாமலும் இங் குள்ள இன்ப துன்ப மயக்கங்கட்கு ஆட்படாம லும் வாழும் வாழ்வும் ஒன்று உயிருக்குண்டு. அது பரலோக வாழ்வு என்று கூறப்படும். அது நிரந்தரமானது; போக்கு வரவு, மாற்றம் மலைவு முதலியன இல்லாதது; பிறப்பு, இறப்பு நிலையைக் கடந்தது. சிவனைச் சார்ந்து சிவ மயமாய் அமைந்து சிவானந்த உணர்வில் திளைப்பது. வாழ்வில் ஈடுபட்டிருக்கும் ஒவ்வோருயிருக்கும் முடிவான இலட்சியமா யிருப்பது அப் பரவாழ்வே யாகும். அப்பர வாழ் வைப் பெறுதற்கான தகுதிப்பாட்டைஉயிர்கள் இகவாழ்விலேயே பெற்றுக் கொள்ளுதல் வேண் டும். அதிலும் பிரதானமாக மனிதப் பிறவி வாய்த்திருக்கும்போதே பெற்றுக் கொள்ள வேண்டும் என்பது நெடுங்காலமாக உணரப் பட்டு வருகிறது. இத்தகுதிப்பாட்டை மனித உயிர்களிடத்தில் வருவிக்கு முகமாகவே உலகில் சமயங்களும் சமய சாதனைகளும் அமைந்துள் ளனவாகும்.

நமது சைவசமயம் ஆலய வழிபாட்டை இதற்கேற்ற பொருத்தமான சாதனமாக வகுத் திருக்கின்றது. பரலோக வாழ்வாகிய பேற்றை அடைவதற்கு ஓர் உயிர் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற படிநிலைகளில் முறையே தேறித் தேறி மேலேறிப் போதல் வேண்டும் என்ற சைவசித்தாந்தக் கருத்துக்கு முற்றிலும் அநுசரணையாக இருப்பது இந்த ஆலய வழிபாடேயாம். ஆலய வழிபாட்டுக்கு வகுக்கப்பட்டிருக்கும் நியமங்கள், அங்கே செய்யலாம் என விதிக்கப்பட்டிருக்குஞ் செயல்கள், அங்குள்ள மூர்த்திகளின் இலட்ச ணங்கள், அங்கே நடக்கும் நித்திய நைமித்திகக் கிரியைகளின் நோக்கங்கள், அங்கு நடைபெறும் உற்சவங்களின் தத்துவக் கருத்துக்கள், ஆலய மண்டப அமைப்பு முறைகள் முதலியன வற்றை நன்கு விசாரித்து அவற்றின் விளக்கங் களை அறியும்போது, ஒருவர் மேற்கூறிய சரியை முதலிய நான்கு நிலைகளிலும், அவற் றின் உட்பிரிவுகளாயுள்ள பல்வேறு துறைகளி லும் பொருந்திப் பொருந்தி முன்னேறுவதற் கான பெருவாய்ப்புக்குப் போதிய இடமிருத்தல் நன்கு புலனாகும். அவற்றுள் சரியை, கிரியை என்னும் இரண்டு படிநிலைகளும் மிகத் தூல மாகவும், யோகம், ஞானம் என்னும் இரண்டும் அவற்றுள் மறைபொருள்களாகவும் அமைந் திருக்கும் நுட்பம் விவேகித்து உணரத்தக்க தாகும். ஆலயக் கிரியைகளுக்கு உரியவரா யிருக்கும் சிவாசாரியர் புரிதற்குரிய கடமைகள் புறத்தோற்றமளவிற் கிரியைகளாயிருக்கும். ஆனால், அவர் முற்று முழுதாக யோகஞான அநுபவ நிலைகளைத் தமது அகத்தினால் உணர்ந்து அவற்றில் ஒன்றிநின்று கொண்டு, தமது புறக்கிரியைகளைச் செய்யாதவிடத்து அக் கிரியைகள், பலன்படுங் கிரியைகள் ஆக மாட்டா. அவர் புரிதற்குரிய கிரியைகளின் தத்துவார்த்தங்களை, அவற்றை விரித்துரைக் கும் ஆகம விளக்கின் உதவியினாலே காண்ப வர்க்கு இவ்வுண்மை தெற்றெனப் புலப்படும்.

கிரியையை ஆரம்பிக்கு முன்னமேசிவாசாரி யர் தம்மைச் சகலவிதத்திலும் மனித நிலையி லிருந்து விடுவித்துச் சிவநிலைக்கு மாற்றிக் கொள்கிறார். அவர் புரியும் ஆன்மார்த்தபூசை அந்தர்யாகம், பூதசுத்தி, சகளீகரணம் முத லான காரியங்கள் அனைத்தும் அவர் தம்மைச் சிவமாகவே மாற்றிக் கொண்டுவிட்டமைக்கு அத்தாட்சியாகும். அந்நிலையில் தாம் சிவமே என்ற பாவனை மூலம் சிவனோடு ஒன்றிநின்று செய்யும் பிராணாயாமம், ஆவாகனம் முத லாகிய கிரியைகள் அவருடைய யோகப் பயிற்சிக்கு அத்தாட்சியாகும். எந்தக் கிரியை யும் அதன் உண்மையான தாற்பரியத்தை விளக் கிச் செய்தாலல்லாது பயன்படுவதில்லை என் பர் அறிஞர். தாம் சிவமேயாய் நின்று

கொண்டே ஒரு சிவாசாரியர் கிரியைகளைச் செய்ய வேண்டும் என்பதன் தாற்பரியம் யாது?

அவனன்றி ஓரணுவும் அசையாது. எவ்வுயிரின் எச்செயலும் சிவனாலேயே செய்விக்கப்படுகிறது. அவரே செய்தும் செய்வித்தும் நிற்கிறார். ஆனால், சாமானியமாக எந்த உயிருக்கும் அந்த உணர்வு நேர்படுவது இல்லை. எந்த ஒரு செயலில் தலைப்படும்போதும் அது தன்செயல் என்ற நினைப்பும், அதன் சார்பான சகல அடைவுகளுக்கும் தானே உத்தரவாதி என்ற முனைப்பும் ஒவ்வோருயிருக்கும் சர்வ சாமானியமானவை. ஆணவச் சார்பான இத்தகைய நினைப்பும் முனைப்பும் வினையாய்ப் பெருகி மேலும் மேலும் உயிரை உலக இன்னல்களில் ஆழ்த்திவிடுதல் சைவசித்தாந்த ஞான அநுபவ உண்மையாகும். வழிபாட்டு விஷயத்திலும் இந்நிலை இடம் பெறின் வழிபாடு கருதிய பலன் கிட்டாது என்பதில் ஆட்சேபமில்லை. ஆதலின், நான் என்ற நினைப்பு முனைப்பு நிலைகளுக்கு அப்பாற்பட்டு நின்று, தம் கடமையைச் செய்ய வேண்டிய சிவாசாரியர்''செயல் எனதன்று: செயலின் பெறுபேறும் எனக்கன்று; என்மூலம் எல்லாஞ் செய்பவனும் சிவனே, அவற்றின் பெறுபேற்றுக்குரியவனுஞ் சிவனே'' என்ற பூரண விளக்க நிலையில் நின்றே செய்தல் வேண்டும். இந்த விளக்க நிலைக்குப் பெயர் ஞானம். ''சிவோ தாதா சிவோ போக்தா சிவஸ் ஸர்வம் இதம் ஜகத் சிவோ யஜதி சர்வத்ர சிவோஹம் ஏவ து'' என்ற ஆகம மந்திரமூலம் இவ்வுண்மை பிரசித்தமாகின்றது.

ஆலயத்தில் நிகழுங் கிரியைகள், யோக ஞானப்பேற்றுக்கு உரியவையாம். இவற்றுக்கு முன்னும் பின்னும் இடம் பெறும் கிரியைகளல்லாத மற்றுங் கோயிற் பணிகள் அனைத்துஞ் சரியைகளாம். ஸ்நானம், சந்தியாவந்தனம், பிரதட்சணம், நமஸ்காரம், திருவலகிடல், திருமெழுகிடல் முதலாகிய யாவும் இச்சரியையில் அடங்கும். இச்சரியைகளும் சிறப்பாக ஆலயக் கிரியைகளுக்கு அங்கமாகவே அமைந்தவை என்ற விளக்கம் இன்றியமையாதது.

ஆலயங்கள் மக்களுக்காகவே அமைந்தவை. மக்களினத்தில் ஒவ்வொருவரும் ஆலய வழிபாட்டினால்முன்னேற வேண்டியவர் ஆவர். அவர் பெறும் முன்னேற்றம் சரியை கிரியை யோகம் ஞானம் என்ற படிமுறை வழியினதாகவே நிகழ வேண்டும். அந்நிலைக்கு அவர்களிடத்தில் ஆகவேண்டிய முன்னேற்றக் குறிகளை விருத்தியாக்குதற்குரியவர் சிவாசாரியர் ஆவர். ஆலய வழிபாடு சம்பந்தப்பட்ட ஒவ்வொரு கிரியையிலும் வைத்து இவ்வுண்மையை நன்குபுரிந்து கொள்ளலாம்.

ஆலய வழிபாட்டில் மிகச் சர்வசாதாரணமான ஒரு கிரியை அர்ச்சனையாகும். 'வழிபடச் செல்லும் பக்தனொருவன் வெறுங்கையுடன் செல்லாது, பழம், பாக்கு, வெற்றிலை, தேங்காய் என்பனவற்றுடன் தனது தகுதிக்கேற்றவாறு செம்புக்காசோ, பொன்னோ கொண்டு செல்லல் வேண்டும். அவற்றைச் சுவாமிக்கு அர்ப்பணிக்க வேண்டும். பின்னர் பிரசாதம் பெற்று மீள வேண்டும்' என்ற ஒழுங்கு உண்டு. இதன் தாற்பரியம் யாது? குறித்த பக்தன் தன்னை முற்றாகச் சுவாமிக்கு அர்ப்பணித்தலே இதன் தாற்பரியமாகும். கனிந்த வாழைப்பழம் அவனது பண்பட்ட உள்ளத்தைக் குறிக்கிறது. வெற்றிலையும் பாக்கும் அவனைச் சுருட்டி மயக்கும் சுகபோக இச்சைகளைக் குறிக்கின்றது. தேங்காய் முழுமையாயிருக்கும்போது அவன் மலத்திணிவில் மூடுண்டிருக்கும் நிலையைக் குறிக்கின்றது; பணம் அவன் தன்னுடைமையாக வைத்துக் கொண்டிருப்பவற்றைக் குறிக்கின்றது. கோயிற் கிரியை சம்பந்தப்பட்ட மட்டில் இஃது எவ்வாறு பிரயோகமாகின்றது என்று பார்ப்போம்.

கோயிலில் சிவாசாரியர் முதலில்அப்பொருள்களைப் பக்தனிடமிருந்து ஏற்கின்றார். பழம், பாக்கு, வெற்றிலைகளைச் சுவாமியின் முன்னர் வைத்து, அவன் மனப்பக்குவத்தையும், அவன் தன் உலகபோக இச்சைகளை அங்கு அர்ப்பணித்து விட்டமையையும் சுவாமிக்குஅறிவித்தலோடு, தேங்காயை உடைத்து அதன் மூலம் அவனது மலத்திணிப்பு நீங்கி உள்ளே காணும் வெண்பருப்புப் போல அவன் சுத்த ஆன்மாவாகிறான் என்பதையும் தெரிவித்து 'இனி அவனுடைமையெல்லாம் உன்னுடைமையாகவே அர்ப்பணிக்கப்பட்டுவிட்டன; சுவாமீ! அவனை ஆட்கொள்ளல் வேண்டும்' என்று பிரார்த்தித்துக் கொள்கின்றார். தம்முடைய பிரார்த்தனைக்குச் சுவாமி செவிசாய்க்கச் செய்யும் பொருட்டாகவே சுவாமியின் நாமங்களை உருக்கமாக ஓதியோதி மலர் தூவுகின்றார். முடிவில் கற்பூர ஒளியில் அவனைத் தரிசிக்க வைத்து, அவனுக்கு ஒரு மனநிறைவை ஏற்படுத்துகின்றார்.

அதன்மேல் அர்ச்சனைப் பொருள்களையும், விபூதி தீர்த்தம் ஆகியவற்றையும் எடுத்து வந்து பக்தனிடம் கொடுக்கிறார். சுவாமி உன் அர்ப்பணித்தலை ஏற்றுக்கொண்டு உனக்குத் தமது கருணையைப் பாலித்திருக்கின்றார் என்று தெரிவிப்பதே இச்செயலின்கருத்தாகும். திரும்பவும் அவன் கையிற் கொடுக்கப்பட்டவை பார்வைக்குப் பழம் முதலியனவாகத் தோன்றினாலும், உண்மையில் அவை குறிப்பது சுவாமியின் கருணையையே தான். அவற்றைப் பிரசாதம் என்ற பெயரால் வழங்குவதே இதற்குப் போதிய அத்தாட்சியாகும். வேறெந்தப் பொருளுக்காவது பிரசாதம் என்றபெயரில்லை. சுவாமியின் கருணைக்கு மாத்திரமே பிரசாதம் என்ற பெயருண்டு. இனி அப்பிரசாதம் கொடுத்தற்கு நியமிக்கப்பட்ட இடத்தைக் கவனித்தால் அர்ச்சனைப் பேறு ஆத்மிகத் தூய்மையாகிய ஞானப்பேறுதான் என்பது எளிதில் விளங்கும். ஆலயத்தில் தம்ப மண்டபத்தில் இருக்கும் நந்தி எந்நேரமுஞ் சிவனையே ஒரே நோக்காகநோக்கி நிற்கும் பரிசுத்தமான ஆன்மாவின் அறிகுறியாயுள்ளது. அதன் முன்னிலையில் வைத்தே சிவாசாரியர் பக்தனுக்குப் பிரசாதம் வழங்குவது அநுபவமுறையாகும். இந்த நந்தியைப் போல நீயும் பரிசுத்தனாயினாய் என்பது அதன் குறிப்பாகும்.

சாதாரண கிரியைகளில் ஒன்று என்ற தோரணையில் அர்ச்சனையைப் பற்றிக்கவனித்தோம். இனி பெருங் கிரியைகளிலும் ஒன்றைக் கவனிப்போம். ஆலயங்களில் நிகழும் பிரதான கிரியைகளில் ஒன்று திருக்கலியாணம். சுவாமிக் குமா கலியாணம்? என்ற விநோதப் பார்வையில் இது வேடிக்கையாய்த் தெரியுமே தவிர, ஆன்ம ஞான நோக்கில் இக்கிரியை தன் பண்பாலும் பயனாலும் மிகுந்த மேம்பாடுடையதாய், முக்கியமான ஒரு யோக உண்மையின் அடிப்படையில் ஞானப்பேற்றுக்குச் சாதனமாய் இருத்தல் இனிது புலப்படும்.

உலக இயக்கம் முழுவதிலும் ஆண்சக்தி, பெண்சக்தி என்ற இரண்டின் தொழிற்பாடு இருத்தலை அணு ஆராய்ச்சியில் வைத்து விஞ்ஞானம் விளம்பரப்படுத்தி விட்டது. 'எலெக்ட்ரன்' ஆண் எனவும், 'நியூட்ரன்' பெண் எனவும் கொள்ளப்படுகிறது. அண்டப்படைப்பியக்கங்களிலும் பிண்ட (உடல்) உறுப்பியக்கங்களிலும் இதனை ஏகப்பட்ட உண்மையாக ஒத்துக் கொண்டுவிட்டார்கள். இத்தொடர்பில், விஞ்ஞானிகளின் காட்சிக்கு அகப்படாத மற்றொரு ஆண், பெண் சக்திகளின் தொழிற்பாட்டைத் தெய்விக ஞான ஆராய்ச்சிச் சபையார் தமது ஞானதிருஷ்டி ஆராய்ச்சியிற் கண்டு கூறியிருக்கின்றார்கள். அணு பாகங்களாய் உள்ளவை ஆண்சக்தி பெண்சக்தியுள்ளனவாயினும் அவை சடங்கள்; தாமாகவே இயங்குஞ் சீவசக்தியுடையனவல்ல. ஆதலால், அவற்றைத் தொழிற்படுத்தி ஆட்டிப் படைக்கும் செந்நிறமான ஒரு சக்தியும், நீல (மங்கல்) நிறமான ஒரு சக்தியும் அவற்றுக்கு வேறாயிருக்கும் இரகசியம், அவர்கள் காட்சியில் வெளியாகியுள்ளது. அவற்றின் இயக்கத்தினாலேயே அனைத்தும் இயங்குவதாக அவர்கள் கண்டிருக்கிறார்கள். ஒளியியக்கத்திற்கூட இந்த ஒழுங்கு காணப்படுதல் ஒளிக்கதிர்ச் சிதறலில் வைத்து அவதானிக்கப்பட்டதாகவும் சொல்கிறார்கள்; ஒரு ஒளிக்கதிர் சிதற வைக்கப்படும்போது இடையிடையே கருமை ஒளியும் இருப்பதாகச் சொல்கிறார்கள். இவ்வாற்றால் செந்நிறச் சக்தியாகிய சிவமும், நீல (மங்கல) நிறச் சக்தியாகிய அம்மையும் கூடும் கூட்டத்தினால் அனைத்தும் ஆகின்றன; அனைத்தும் இயங்குகின்றன என்ற உண்மை உறுதியாகின்றது. ஆலயங்களிலே விசேஷமாகக் கும்பாபிஷேகம் முடிந்தவுடன் திருக்கலியாணம் நடத்துகிறார்கள். கும்பாபிஷேகமாவதன் மூலம் சுவாமி சாந்நித்தியப்பட்டதும் சிவத்தைச் சக்தியோடு சேர்த்தலினால் உடனடி, யாகச் சிருஷ்டி ஆரம்பமாகின்றது என்பது அதன் தாற்பரியம்.

ஆலயக் கிரியைகளின் நோக்கம் மிகமிக உயர்ந்தது. இருந்தும் காலத்திற்கேற்ற கோலமாக, இம்மைக்குரிய சுக, செல்வ, போகப் பேறுகள்தாம் ஆலய வழிபாட்டின் நோக்கமும் ஆலயக்கிரியைகளின் பலாபலனும் என்றெண்ணும் போக்கு இக்காலத்தில் மிகுந்து வருவதும் ஏதோ உண்மைதான். இந்த நிலை மிகத் தவறானது. இலௌகீக முன்னேற்றமே ஆலயக் கிரியை வழிபாடுகளின் இலக்கன்று. ஆன்ம முன்னேற்றமே அவற்றின் இலக்காகும். அந்த ஆன்ம முன்னேற்றத்திற்கு அநுசரணையாக அதன் அடிப்படையில் மற்றும் பேறுகளும் அதிகரித்து வரலாம். வந்தாற் கண்டுகொள்வதே தவிர, வராவிட்டாற் குறைப்பட்டுக் கொள்வதோ, அவற்றுக்காகவே வழிபாட்டு முயற்சியை வீண் விரயமாக்குவதோ சமயப் பண்பாகாது.

# தேவாரம்

தேவாரம் என்பது சைவசமய ஆசிரியர்கள் ஆகிய அப்பர், சம்பந்தர், சுந்தரர் என்னும் மூவரும் பாடிய பாடல்களைக் குறிக்கும். இச் சொற்குப் பலவகைகளிற் பொருள் கூறலாம்.

(1) தே—வாரம். தே—தெய்வம். வாரம்—அன்பு. தெய்வத்தினிடத்து அன்பை, விளைவிக்கும் பாடல்கள்.

தம்மை ஓதுபவர்க்குத் தெய்வத்தின் அன்பு, அருள் என்பவற்றை எளிதிற் கிடைக்கும்படி செய்யும் தன்மை வாய்ந்த பாடல்கள்.

தெய்வத் தன்மை பொருந்திய சிறந்த அன்பின் பயனாகப் பொங்கி எழுந்து வெளிப்பட்டருளிய பாடல்கள்.

(2) தே—வாரம். வாரம்—இசை இயக்கம் நான்கனுள் ஒன்று. எனவே தெய்வம் சுட்டிய இசைத்திறன் (வாரம்) அமைந்த பாடல்கள்.

(3) தே—வாரம். வாரம்—உரிமை. தெய்வத்திற்கே உரிமையுடைய பாடல்கள். அதாவது பிற புலவர்கள் பலர், போரும் காதலும் போன்ற பொருள்களைக் குறித்துப் பாடிப் போந்த பாடல்களைப் போல் அல்லாமல், தெய்வத்தினையே தமக்குரிய குறிக்கோட் பொருளாகக் கொண்டு வழுத்துதற்காக வெளிப்பட்ட பாடல்கள்.

(4) தே—ஆரம். ஆரம்—மாலை. தெய்வத்திற்கு மாலைபோல விளங்கும் சிறந்த பாடல்கள். பூமாலை பொன்மாலை முதலிய மாலைகள் போல்வனவற்றினின்று வேறுபட்டு உயர்ந்து, தெய்வத்தன்மை பொலியும் சிறந்த பாமாலைகள்.

திருப்போரூர்ச் சிதம்பரசுவாமிகள் தம்முடைய உரைநூல்களில், 'தேவாரம்' என்பதைத் திரு திருநாவுக்கரசர் பாடல்களுக்கே யுரிய சிறப்புப் பெயராக வழங்குவர். திருஞானசம்பந்தர் பாடலைத் 'திருக்கடைக்காப்பு' எனறும், சுந்தரர் பாடல்களைத் 'திருப்பாட்டு' என்றும் குறிப்பிடுவது, அவர் வழக்கம்.

—ஆசிரியர்

# தணிகை முருகன் தமிழ்மாலை

'' வேதாந்த சித்தாந்த வித்தகர் ''
சீலத்திரு சோமசுந்தர நாயகர்
சூளை, சென்னை.

முன்னுரை:

சென்ற நூற்றாண்டில் தமிழும் சமயமும் தழைக்கப்பாடுபட்டு உழைத்த சான்றோர் பெருமக்களில், தலைசிறந்த அறிஞராகக் குறிப்பிடத் தக்கவர்களுள் சென்னை சூளையில் வாழ்ந்திருந்த, சீலத்திரு சோமசுந்தர நாயகர் அவர்களும் ஒருவராவர். கி.பி. 1846ல் தோன்றிய அப்பெருஞ் சான்றோர், கி.பி. 1901-ஆம் ஆண்டில் மறைந்து இறைவனோடு இரண்டறக் கலந்தருளினார். தமிழ் வடமொழி ஆங்கிலம் தெலுங்கு கன்னடம் என்னும் மொழிகளில், அவர்பெரும் புலமை பெற்றுத் திகழ்ந்திருந்தார்.

சிறப்பாக, அவருடைய வடமொழிப் புலமை பெரிதும் வியந்து போற்றத்தக்கதாக இருந்தது. வேதம் ஆகமம் உபநிடதம் பிரமசூத்திரம் முதலிய பல பெருநூல்களிலும், அவருக்கு ஆழ்ந்து தோய்ந்த பெரும் புலமை கைவந்திருந்தது. இராமநாதபுரம் அரசர், அவரது பெரும்புலமையை வியந்தும், சைவசித்தாந்தத்திற்கு அவர் ஆற்றி வந்த அளப்பரும் தொண்டுகளைப் போற்றிப் பாராட்டியும், ''வைதிக சைவசித்தாந்த சண்டமாருதம்'' என்னும் பட்டத்தினை வழங்கி அவரைச் சிறப்பித்தார்.

இராமநாதபுரம் அரசவையில் புலவர்களுக்கெல்லாம் பெரும் புலவராக, ஒப்புயர்வற்ற பாவலராகவும், நாவலராகவும், சீலத்திரு சோமசுந்தர நாயகர் அவர்கள் விளங்கி வந்தார்கள்.

அவர்தம் வடமொழிப் புலமையினை இராமநாதபுரம் அரசவைக்கு வந்து சில காலம் தங்கியிருந்த சுவாமி விவேகானந்தர் அவர்களும், பெரிதும் புகழ்ந்து போற்றிப் பாராட்டினர் என்பர். ஆசாரியப் பிரபாவம், அசம்பிரதாய நிரசநம், அஞ்ஞான திமிர பாஸ்கரம், அர்ச்சாதீபம், ஆதிசைவப் பிரபாவம், ஆபாச ஞானநிரோதம், உத்தம வாத தூலவாதூலம், சித்தாந்த சேகரம், சித்தாந்த பூடணம், சன்மார்க்க போத வெண்பா, சிவதத்துவ சிந்தாமணி, சிவ பாரம்யப் பிரதரிசினி, சிவாதிக்கிய ரத்னாவளி, சைவசூளாமணி, ஞானசம்பந்த பரத்துவ நிரூபணம், ஞானபோத விளக்க நியாயரட்சாமணி, பாரததாற்பரிய சங்கிரகம், பிரம்ம தத்துவ நிரூபணம், பிரம்மானுபூதி, முதலிய எத்தனையோ பலப்பல நூல்களைச் சீலத்திரு சோமசுந்தரநாயகர் அவர்கள் இயற்றியருளியிருக்கின்றார்கள்.

அவர்களுடைய நினைவாற்றலும், சொல்வன்மையும், எழுத்து வன்மையும், பல மொழிப்புலமையும், நுண்மாண்நுழை புலமும், சிவபக்திச் சிறப்பும் பிறவும், அனைவரும் வியந்து போற்றி மகிழற்பாலனவாகும்.

இவ் இருபதாம் நூற்றாண்டின் மாபெரும் புலவர் என மதித்துப் போற்றப் பெறும் தமிழ்க்கடல் மறைமலை அடிகளார், சீலத்திரு சோமசுந்தரநாயகர் அவர்களின் மாணாக்கரே யாவர் எனின், நாயகர் அவர்களின் அருமைபெருமைகளை யாவரும்இனி துணரலாம். அருட்டிரு மறைமலை அடிகளார் அவர்கள், சோமசுந்தர நாயகர் வரலாறு, சோமசுந்தரக் காஞ்சி ஆக்கம், என்னும் சிறந்த இரண்டு நூல்களை எழுதியிருப்பதே, இவர்தம் எல்லையற்ற பெருமையை உணர்த்தும் நல்லபெரும் சான்றுகளாகும்.

இத்தகைய பெருமைபல வாய்ந்த வித்தகராகிய சீலத்திரு சோமசுந்தர நாயகர் அவர்கள் இயற்றிய கவிதைநூல்கள் பல. அவைகளுள் ''தணிகைமுருகன் தமிழ்மாலை

என்னும் இந்நூல், பல்லாற்றானும் சிறந்து விளங்குகின்றது. இந்நூல், 30, மே. 1881 ஆம் ஆண்டில், அஃதாவது இற்றைக்குச் சற்றேறத்தாழ 100 ஆண்டுகளுக்கு முன்னர், (39, தம்புசெட்டித்தெரு, மெமோரியல் அச்சகத்தில்) வெளியிடப்பெற்றது. நாயகர் அவர்கள் தணிகைமுருகன் மீது கொண்டிருந்த தணியாத பக்தி நலனையும், அவர்தம் அளப்பரிய கவிதைத் திறனையும், தத்துவஞான உணர்வினையும், இந்நூலின் பாடல்கள் இனிது தெளிவுற விளக்குகின்றன. வேதம் ஆகமம் உபநிடதம் பிரம சூத்திரம் முதலிய வடமொழி நூல்களில் இவருக்கிருந்த பயிற்சியும், இக்கவிதைகளால் புலனாகின்றன. ஒவ்வொரு பாடலின் கருத்தையும் விளக்கும்முறையில், அவர் அமைத்துள்ள தலைப்புக்கள் பெரிதும் போற்றத்தக்கனவாக விளங்குகின்றன.

சிறந்துயர்ந்த செந்தமிழ்ச் சைவச் சான்றோராகிய சீலத்திரு சோமசுந்தரநாயகர் அவர்கள் இயற்றியருளிய ''தணிகை முருகன் தமிழ்மாலை'' என்னும் இந்நூல், முருகன் அடியார்கள் அனைவரும் போற்றிப் பயன்கொள்ளும் பொருட்டு, இங்கு நமது ''திருக்கோயில்'' இதழில், எடுத்து வெளியிடப்பெறுகின்றது. தணிகை முருகனின் அடியார்கள் அனைவரும், இதனை ஓதிப் பயின்று பயன்கொள்வார்களாக!

—ஆசிரியர்.

# தணிகை முருகன் தமிழ்மாலை (மூலம்)

## காப்பு

எவன்உயர் மறைமுடி மிசைநடம் இசைதரும்?
எவன்உயிர் தொறும்மட வரலொடும் இவர்தரும்?
எவன்அமரர்கள் அதிபதி என இலகுறும்?
அவன்அருள் பெறும்வகை அடைதி நன்மனமே

## நூல்

*(உலகம் மாயையில் உதிக்கும் என்றது)*

பொற்பிதிர் அனையது உலகம் மாயையிடைப்
புகன்றிடில் எனும்உயர் சைவ
சிற்பர ஞானம் உணர்தி என்றனன்; எம்
செல்வமாய்க், காழியில் வந்த
கற்பகமாய், என் கண்மணி யாகிக்,
கருத்தினிற் கலந்து தித்திக்கும்
அற்புதன், எங்கள் வாழ்வெனும் தணிகை
அங்கிரி மேய அங்கணனே! (1)

*(உலகம் பிரமத்தில் உதியாது என்றது)*

உலகம் நற்பிரமத்திடை உதித்திடும் என்று
உரைத்திடும் மூடர் வாய்மூடக்,
குலவும்இப் பவஞ்சம் அசத்து, உயர்பிரம
சத்தினில் கூறொணாது என்றான்;
மலைமகள் துணைவன் முக்கணன் நீல
மணிமிடற்றவன் என, வேதம்
நிலவிநின்று ஏத்தும் ஒருபரன் மகன், என்
நெஞ்சுஇவர் தணிகை நின்மலனே! (2)
[பவஞ்சம்—பிரபஞ்சம், உலகம்]

*(அசத்தில் அசத்தே ஆகும் என்றது)*

சிலம்பி வாயிடைநூல் என்னவே, சத்தில்
அசத்து வந்திடும் முறைசெப்பிப்
புலம்புவார்; சிலம்பியுடல் அசத்து, அதின்நூல்
அசத்து வந்திடும் எனப்புகன்றான்;
சிலம்புஎனக் கலிக்கும் எசுர்மறை வேத
சிரசுஎனும் பிரமவல்லியின், நல்
நலம்பெறற்கு எழுதிஎன்று, அருள் தணிகை
நாயகன், வள்ளி நாயகனே! (3)

[எழுதி—எழுக, புறப்படுக]

*(எசுர்மறை சிவனுக்கே உரித்து என்றது)*

இசைதரு காயத்திரி; இதயத்தில்
ஏர்ச்சிவ பார்வதி உருவத்து,
எசுர் மறைவயத்தின் இடபவாகனியாய்
ஏத்து காயத்திரி தெய்வம்,
நசைதவிர் மூன்று சந்தியில் இடையே
நாட்டுசந்தியில் இயங்கிடும் என்று,
அசைவுறாது அருளிச் செய்தனன்; தணிகை
அம்பதி மேய அந்தணனே!. (4)

*(இதுவும் அது)*

காலையில் இருக்கும் பிரமனும்; மாலைக்
காலம் அந்தணர் கொளும்சாமம்
மாலும்; என்று இனிது விளங்கலின் உண்மை
வந்த காயத்திரி முறையே,
சாலும் எம்தாதை எசுர்மறை போற்றும்
சதுரன் என்று, எம்கலி தீரப்
பாலொடு பழத்தின் இரதமும் கைக்கப்
பகர்ந்தனன்; தணிகையம் பரனே! (5)

*(எசுர் வேதத்துக்கு ஏற்றம் உரைத்தது)*

ஐந்தெழுத்து, அழிவில் சிவஎனும் இரண்டால்
அலரும்; அவ்ஐந்தினால் உயர்கொள்
முந்து சீருத்ர நமகமும், அதனால்
முதல்எழு காண்டத்தின் நடுவே
உந்து நாலாவது ஒப்பில் காண்டமும், மற்று
உளஅதனால், எசுர்வேதம்
வந்து ஒளிர்தரும் என்று இசைத்தனன்; தணிகை
வாழ்வென வந்த கண்மணியே! (6)

*(வேதம் அடங்கலும் விளம்பல் ஈது என்றது)*

எசுர்எனும் வேதத்தால் உளஎல்லா
வேதமும் வயங்கும்; இங்குஅதனால்
இசையும் எம்பெருமை; அன்றி மாமறைகள்
ஏத்துறாது என்றுஎனக்கு இசைத்தான்;
அசரமும் சரமும் ஆகி, அல்லவும்ஆம்
அருட்பரன் தன்னில், வேறாகாக்
கசமுகற்கு இளையசேய் எனும், தணிகைக்
கந்தவேள் என் உயிர்த்துணையே! (7)

(குகனே காழியர்கோன் என உரைத்தது)

தணிகையில் வாழும் தமனியக் குன்றே!
சங்கரனார் மகிழ்ந்திடு கண்
மணியென வந்த மதலையே! என்று
வாழ்த்தும் என்முகம் நனிநோக்கி,
''அணிகொள் அம்பலக்கூத்து எந்தை ஏவுதலால்,
அன்று காழிப்பதி மேவித்
திணிகொள் சித்தாந்தம் அருளினம் உலகில்''
என்றனன்; தணிகை மாதேவே! (8)

(சத்தும் அசத்தும் தாம்இவை என்றது)

சத்துநாம்; எம்மைச் சார்தரா அசத்தும்;
அசத்தையும் சார்கிலம் யாம்;அப்
பெத்தமாம் அசத்தே பாசம்; இவ்வுண்மை
பேசுவோர் பெரியர் என்று இசைத்தான்;
வத்துநாம் என்றுவாய் மதம் பேசும்
வம்பர்மாட்டு இணங்கிலா, எம்மைச்
சுத்த மார்க்கத்தில் விடுக்கும், நற்றணிகைச்
சுந்த ரானந்த சண்முகனே! (9)

(சதசத்து இதுவெனச் சாற்றப் போந்தது)

சத்து அசத்து இரண்டின் தன்மைசார் தலினாற்
சதசத்தாம் என்று, எனைவேத
மெய்த்த ஆகமத்தின் விதிவழாது உரைத்து,
வேற்றுரை சழக்குஎன மொழிந்தான்;
பத்தியிற் சிறந்து மேம்படு யோகப்
பண்பினர்க்கு; அழிவறும் இன்ப
முத்தியை நல்கும் தணிகையம் பதியின்
முளைத்தருள், ஆறுமா முகனே! (10)

(கடவுள் நிமித்த காரணர் என்றது)

காரியம் ஒன்று தேர்ந்திடில், அதற்குக்
காரணம் மூன்று உள; அவற்றுள்
சீரிய நிமித்தம் எனைத்து, அது நீர்மை
சேரும் எம்பால் எனமொழிந்தான்;
நேரிய முதல், நற்றுணை, எனும்வேறு
நீடுகாரணம் உணர்வார் தம்,
கூரிய மதியில் குடிகொளும், தணிகைக்
கோஎனும் குறமகள் பதியே! (11)

(ஆகமம் வேதத்தினும் அதிகம் என்றது)

கருமம், நற்பிரம பாகம், ஓர்இரண்டும்
கரிசற ஓதும் நான்மறையில்,
வரும்முதற் பாகம் பூருவம் ஆகி,
மற்றது மாட்சி பெற்றதுபோல்,
அருமறை நான்கும் பூருவம் ஆகி,
அருட்சிவாகமம் தழைத்திடும் என்று,
ஒருமையின் எளிவந்து உரைத்தனன்; எளியேற்கு
ஒப்பிலாத் தணிகை உத்தமனே! (12)

(இதுவும் அது)

மறைநவில் கருமம், ஞானம் ஓரிரண்டில்,
மறையவர்க்கே கருமத்தின்
நிறை அதிகாரம் ஆகி, மெய்ஞ்ஞானம்
நீசரும் பெறற்கு உரிமையினால்,
அறையும் மெய்ஞ்ஞானம் தாழுமோ? கருமத்து
அளவில் அப்படி உணர் என்றான்,
முறைகொள் வேதா கமங்களைத், தணிகை
முழுமுதல் ஆகும் முன்னவனே. (13)

(சுயம்பு என மறையைச் சொல்வதன்று என்பது)

மறை சுயம்பு என்ப; அம்மறை மேலாம்
மானம் என்பெறும் எனில், அந்தோ
நிறைமதி இன்றிக் குழறுப; வேதம்
நீடு ஒலிமயம் எனில், அதனை
அறைகுவர் சடமாய்; ஆதலின் அதுதான்
அருளுமோ? நனி விவத்தையில் என்று,
இறைவன் எம்தணிகைத் தேசிகன், அதுமற்று
என்உரை என, இசைத்தனனே! (14)

(தமிழ் வேதத்தின் தன்மை உரைத்தது)

எம்மில் வேறாகா எந்தையார் புகழ்இங்கு
எய்தும் மாகாழியில் வந்துஅன்று,
எம்மையும் உயிர்கள் பிழைக்க, நன்குஓதும்
எம் திருவாக்கும், எம்துணைவர்
செம்மையர் மூவர்தம் திருவாக்கும்,
தேர்ந்த பேர்க்கே சிவம்உண்டாம்,
அம்ம நீஉணர்தி என்றனன், தணிகை
அசலமீது உறையும் ஆரியனே! (15)

[எம்மையும்—எப்பிறவியிலும். அசலம் —மலை]

(நால்வர் வாக்கின் நலம்இது என்றது)

விடர்க்கு இளம்பாவையர் மொழி இனிக்கும்
மேன்மையில், களிக்கும் எம்தாதை
இடர்க்கடல் அழுந்தும் உயிர்க்கு அருள்தர,ஈண்டு
எழுந்தருள் நால்வர் தம் வாக்கில்,
சுடர்க்கொழுந்து அனைய அன்ன தீஞ்சொல்லில்
சுகம் அளப்பரியது என்று இசைத்தான்;
அடர்த்த மெய் ஆகமத்துடன் வேதம்
அன்றுஅருள், தணிகை அற்புதனே! (16)

(உபயவேதத்து உண்மை உரைத்தது)

மறை அடைத்திட்ட கதவம் அம்மறையே
மாற்றுதல் இன்றி, வாகீசர்
நிறைமொழி மாற்றக் கண்டனம்; மீண்டு
நீடுஅருட் காழி மாமுனிவன்
அறை திருவாக்கால் அடைந்தது; ஆகலின்அவ்
அருமறைப் பேதமாம் அவர்வாக்கு;
இறைமைசால் பெரியோர் அறிவர் இவ்வுண்மை
என்றனன்; தணிகை எம்கோவே! (17)

(சைவநிந்தையர் சார்பு ஒழி என்றது)

எம்மையும், அன்பர் தம்மையும், நிந்தை
இசைக்குநர் தம்மை, என்றென்றும்
அம்ம நீகாணில், பேசிடில், நினைக்கில்,
ஆம்பிழை அறிதி என்றுஇசைத்தான்;
கொம்மை மென்முலையார் கூட்டமே பற்றிக்,
கொடுந்தொழிற் புலையனாய்த் திரியும்
எம்மையும் பணிகொண்டு, அருள்தர வல்ல
ஈசனாம் தணிகை எண்குணனே! (18)

(ஈசன் பூசனைக்கு இடம் இவை என்றது)

எங்கும்நாம் விரவி இருப்பினும், அன்பர்
இடத்திலும், இலிங்கமாம் இடத்தும்,
தங்கியே பூசை ஏற்று உயிர்க்குஅருளுந்
தன்மை; ஆன்இடம் அதுதருபால்
அங்கம் முற்றிடினும், அடைவது முலையில்
ஆவது போன்ம்என மொழிந்தான்
சங்கரன் மகன் அம்பிகைதருசேய் என்
சாமியாம் தணிகை நாவலனே! (19)

(இமையவர் பிரிவு இதுஇது என்றது)

சிவன் மறையோன்; இந்திரை மகிழ்கேள்வன்
சிறப்புடை அரசன்; வைசியனே
தவமுடை பிரமன்; சூத்திரன் ஆகும்
சசியிடந் தோயும் இந்திரனே;
பவமிகையார்க்கு இப்பண்பு கூறினும், என்
பயன்? உளந்தேர்தி என்று இசைத்தான்;
சவமுகத்தினர் காண்பரிய நற்றணிகைச்
சண்முக ஞான தேசிகனே! (20)

(சிவமாமறையோர் சிறப்புரை செய்தது)

தேவரிற் பிரமன் வசியன் ஆகையில், அத்
திசைமுகன் முகத்தில் வந்துஉதித்தோர்
ஆவரோ, பிரம குலத்தவர்ஆக?
அன்று அருட்சிவபிரான் முகத்தில்
ஏவர்வந்து உதித்தோர், அவர் பிராமணர்என்று
இயம்புதல் தகும்என இசைத்தான்;
சேவலங்கொடி எம்தணிகை நாயகன்,எம்
செல்வமாம் கவுணியர் மணியே! (21)

(இதுவும் அது)

சிவமறையோர் தந்திடப் பெறல்அன்றித்,
தீண்டிடில் யாவராயினும் இங்கு
எவம்இல் நின்மாலியம், பலயோனி
எய்தி மாழ்குவர் நிரயத்தில்;
அவநிறை மாந்தர் அறிவரோ? அறியார்;
ஐயநீ அறிதி என்று இசைத்தான்;
தவமலி அன்பர் போற்றும் மெய்ஞ்ஞானச்
சதுரன், எம் தணிகை வேதியனே! (22)

(சச்சிதானந்தத் தன்மை உரைத்தது)

சச்சிதா னந்தம் என்பது தேரில்,
சதுரன் என்தாதையே சத்தாம்;
இச்சைகூர் சித்து எம்தாய்; இடைதோன்றும்
இன்ப ஆனந்தம் என்வடிவாம்;
விச்சை வேதியர் எம்பிரிவு உரையார்;இம்
மெய்ம்மை நீ உணர்தி என்றிசைத்தான்;
அச்சமார் அநுர்தாதிகள் ஒழித்து, அடியேற்கு
அருள்செயும் தணிகை ஆண்டவனே! (23)

(மூவித ஞான முற்றமை வகுத்தது)

ஞானம்ஓர் மூன்றில், நவில் பதிஞானம்
நாடினர்க்கே, எமது உண்மை
ஆன மெய்வாழ்வு உண்டாம்; பசுபாசத்து
அடைவு உடையார், மலபோதத்து
ஈனம் எய்துவர்; இவ்வுண்மை நன்குணர்தி
என்றனன்; தணிகையில் வாழும்
மோன தேசிகன்; என்உளத் தவிசுஅகலான்,
மூர்த்தி, நந்தா முழுமுதலே! (24)

(மூவகை உயிர்க்கு அருள்முறைமை உரைத்தது)

ஒருமலம் உடை விஞ்ஞான கலர்க்கும்,
ஒப்பிலாப் பிரளயா கலர்க்கும்,
வருமலம் மூன்றில் வளர் சகலர்க்கும்,
வழங்குதும் அவரவர்போன்று; எம்
அருள்விளையாட்டு இத்திறம் என அறிதற்
பாலதோ? அன்றுஎன மொழிந்தான்;
குருஎனக் காழிப்பதியில் வந்தருள் எம்கொற்றவன்,
தணிகைவாழ் குகனே! (25)

(நவந்தருபேதம் நாடி உரைத்தது)

உருவம்நால், அருவம்நால், உருவருவம்
ஒன்றுமாய், அல்லவாய், நாளும்
பரவும் நால்வேதப் பண்புதேர்ந்து, எந்தை
பக்கல்சார்ந்து, அன்பு சான்றவர்,மெய்
விரவு பேரின்ப வீட்டில் மேவுவரால்;
மெய்ம்மை ஈதுஎன்று எனக்கு இசைத்தான்;
அரவுநீள் வேணி அண்ணலார் மகன்,எம்
ஆருயிர்த் தணிகை ஆதவனே! (26)

(தீட்சா விசிட்டம் தெரிய உரைத்தது)

சைவம் ஓர் ஆறுவிதம்எனும் வேத
சாத்திரப்படி, நவில் தீக்கை
செய்வரால் சாதிமுறை தெரிந்து உண்மை
சேரும் மெய்த்தவர் எனச்செப்பி
உய்வரோ? தீக்கை பெற்றிலார் அன்னோர்க்கு
உறுபணி பூண்டுஉள உரைத்தே
தெய்வ நல்லருள் தந்து ஆண்டனன், தணிகைத்
தேசிகன், செங்கை வேலவனே! (27)

(இதுவும் அது)

தீக்கையால் அன்றி முத்தி கைககூடும்,
தெண்கடல் நீந்துவார் தோணி
மீக்கொளாது ஏகின் என்று; அருள்நோக்குஎன்
மேல்விளைத்து, இம்மையோடு அம்மை
ஆக்கம், உள்ளங்கை நெல்லியங் கனிஎன்று
அருள்புரிந்து ஆண்டனன்; எங்கள்
பாக்கியம் ஆகும் தணிகையம் பதியில்
பரசுவார்க்கு அருள், பரஞ்சுடரே! (28)

(இதுவும் அது)

எண்ணிலாப் பேதம் எய்தும் அத்தீக்கை;
ஏய்ந்திடும் ஔத்திரி இரண்டாம்,
எண்ணு சீர்க்கிரியை ஞானமாம், அவற்றுள்
ஏற்றதொன்றால் உயிர்ப் பாசம்
நண்ணுறாது அகல மாற்றி, எம்பாதம்
நணுகுவித்து அருள்வம் என்றிசைத்தான்;
கண்ணினுள் மணியாம் கவுணியர் போற்றும்
கடவுள், எம்தணிகை மாகடலே! (29)

(அர்ச்சை ஆராதனம் அதிகம் என்றது)

அர்ச்சையில் எம்மை அன்பினால் வழிபட்
டார்க்கு எமதருள் வரும்; எம்மது
இச்சையாம், அன்னோர்க்கு இகபரம் இரண்டும்
ஈதல்; எம்வழி வரா மூர்க்கர்
பிச்சர்; அந்தோ! வெம்பவம் நனிமேவிப்
பீடழிந்து அழிவர் என்று உரைத்தான்;
நச்சரவு அணியும் நம்பனார் மகன்,எம்
நாயகன், தணிகை நாவலனே! (30)

(இதுவும் அது)

அர்ச்சையைப் பழிப்பர் அறிவிலார்; அந்தோ!
அருட்பரன் தன்னில் வேறாகா
இச்சைகூர் அதனை இயம்பிடில், எழுத்துக்கு
இசைந்திடும் வரிவடிவு ஆகும்;
மெச்சும் அவ்வடிவம் அன்றி ஓர்எழுத்தும்
மேவுறாது; உள்ளம் மேலாக
வைச்ச அம்முறையே காண்டி என்றனன்;எம்
வாழ்வெனும் தணிகை வானவனே. (31)

(கண்டி வெண்ணீறு இலார் முண்டைகள் என்றது)

கண்டி வெண்பூதி வேண்டிலாக் கயவர்,
கழுமலம் தோன்றும் எம் பாத
தொண்டர்தம் குழுவிற் சேர்ந்திடார்; அன்னோர்
சொற்றிடும் கணவரை இழந்த
முண்டைகள் ஆவர்; குங்குமம் மஞ்சள்
முகத்து அழிந்தவர்கள் ஏய்ந்து; உண்மை
கண்டவர் நாளும் விடுவரோ? என்றான்; (32)
காவலன் தணிகை அங்கணனே!

(மூவரின் மேலா முதல்வனை உரைத்தது)

பிரமன் இந்திரன் மால் உருத்திரன் இவர்கள்
பிறத்தலாற் காரணர் அன்றுஎன்று,
உரம்பெற உரையா, சம்புவாம் சிவனே
ஒப்பில் காரணம் எனவிதந்து,
பரம்எனல் காட்டிப், பண்புகூர் தியானப்
படிவம் ஈதுஉணர்தி என்று, அருளால்
சிரந்தரும் மேலாம் அதருவ சிகையைச்
செப்பினன்; தணிகைவாழ் சேயே. (33)
[உரையா—உரைத்து]

(உயிர்தொறும் சிவன் உறையும்
உண்மை உரைத்து)

ஒளியிருள் இரண்டும் ஓரிடம் சேர்தல்
ஒவ்வுறாது; உயிர்தொறும் யாம் அங்கு
அளிமிக விரவி நின்றமை வினவில்,
அனல் பசுமரம் விரவியசீர்;
எளிமையின் விளங்குமாறு எவன்பாகம்
எய்துமால் உயிர்மரம் போல்; இத்
தெளிவுடை யார்க்கே முத்தி என்றனன்; எம்
தேசிகன், தணிகை மாநிதியே. (34)

(சத்திகள் இரண்டின் தன்மை உரைத்தது)

சத்திகள் இரண்டாம் எமக்கு எனும் வேத
சாரம் ஓர்கிலர்; பரிக்கிரக
சத்தியொன்று, உரை தாதான்மியம் ஒன்று
சார்ந்திடும்; சாற்றிடில் முறையே
நித்தமாம் மாயைஒன்று, மற்றொன்று
நீடு சிற்சத்தியாம்; இரண்டும்
எத்திறம் ஏகம்ஆகும் என்றனன்; எம்
இறைவனாம் தணிகை எண்குணனே! (35)

(இதுவும் அது)

கையும், மற்றதனிற் கோலுமாம், அன்ன
காரண சத்திகள்இரண்டும்;
கையும் மற்றதனிற் கோலும் ஒன்றாகக்
காட்டுமேல் ஒன்றெனக் காட்டும்;
ஐய! நீள்சட சித்தாம் அவை; அதனால்
ஆம் விசாதிகம் எனப் பகர்ந்தான்;
செய்ய நீடொளி செய் தணிகைமால் வரையிற்
சேரும் அம்பிகை தரும் சேயே! (36)

(விசாதிகம்—வேறுவேறு தன்மை
களையுடைய பொருள்)

(ஊர்த்துவ ரேதசு உமாபதி என்றது)

சிவன்எனும் எந்தை, உயிர்கள்போல் இன்பம்
தேக்குறக் கீழ்முகத்து இசையும்
எவமில் இந்தியம் பாய்தரச் செயும் அதனால்
எம்பவம் வாய்த்திலது என்று,
நவமிகு சீர்த்தி ஊர்த்துவ ரேதசு
என நவின்றிடும் மறை; அதனால்
அவன்விழி ஆறிற் பிறந்தனம் என்றான்;
அறுமுகன் தணிகை அந்தணனே! (37)

(காயத்திரிப் பொருள் கண்ணுதல் என்றது)

மறைதவழ் காயத்திரி மநு நீடு
மாண்பொருள், எந்தை சங்கரனாம்
அறிமின் என்று, அன்னோன் துணைவிழி அம்மை
அருள் விளையாட்டின் மூடுகையில்,
நிறைதரும் இருள்சீத்து ஒளிசெயக் காட்டும்
நெற்றியில் காட்டும் அம்பகமே,
முறைஇது ஆகும் என்றனன்; தணிகை
முருகவேள், கவுணியர் முதலே! (38)
[அம்பகம்—கண்]

(இதுவும் அது)

மாயனைக் கூறும் வஞ்சகர், பேடி
வாசகம் கேட்டு அலையன்மின்;
பேயர் பல்லாறு பிழைபடப் பேசிப்
பிதற்றுவார்; எந்தையே நாடும்
தூயசீர்ப் பர்க்க நற்பதத்து ஒளியாம்
தொன்மைகண்டு உணர்தி என்றுஇசைத்தான்;
மேய நற்றணிகை மேவிவாழ் கந்த
வேள், மயிலூர்தி வித்தகனே! (39)
(பர்க்கன்—சிவபெருமான்)

(தெய்வம் சிவன் எனத் தெளிய உரைத்தது)

தெய்வம் ஒன்று,; அதுவேசிவம்; எனமறைகள்
செப்பவும், உடன்று பற்பலவாம்
தெய்வ மாயத்தால், சமய சங்கேதம்
செய்துழல் பதிதர்தாம், என்னே
உய்வரோ? முனிவர் இட்ட சாபத்தால்
உழல்பவர் காண்டி, என்றுரைத்தான்;
செய்வளம் மிகுசீர்த் தணிகையம் பதியிற்
சிவமணி, எனவளர் தேவே! (40)

(இமையவர் செருக்கை ஈசன் மாய்த்தது[)

எந்தை ஓர் இயக்கன்ஆகி, இந்திரன்மால்
எரி முதலோர் வலிதப, அன்று
உந்தி ஓர்துரும்பை அசைத்திடக் கேட்டது
உணர்திகொல்? மறையிடத்து என்றான்;
வந்து அவண் 'இவன்என் பதி'யெனக் கூறும்
மாது, உமைதரும் முலைப்பால் உண்டு,
அந்தர முனிவர் போற்றும் நற்றணிகை
மர்ந்தருள் பரம சற்குருவே! (41)

(பரன் இமையோரைப் பங்கஞ் செய்தது)

பிரமனைச் சிரம் கொய்து, அவற்குஇளையோனைப்
பேருடல் மாய்த்து, எரிகரத்தை
உரம்இறத் தறித்து, மாயனைச் சூலத்து
உச்சிகோத்து, அந்தகன் வீழத்
தரமுற உதைத்துத் தண்ணருள் கொழிக்கும்
தலைவன், என்தாதை என்று இசைத்தான்;
வரமுறும் தணிகை வள்ளல், தெய்வானை
வள்ளி நாயகி மகிழ்வோனே! (42)

(அரிஒப்பானது எப்படி அரற்கு என்றது)

மாயன் என்றொருவன் கருநிறம் பெற்று,
மன்னியே பிறவிகள் பல, இங்கு
ஆய பேருண்டி நித்திரை விழைவுற்று,
அப்பிறவிகள் மலதேகம்
மேய சூகரம் மீன் கமடமாய், யோனி
விரும்புமேல், அவன் பிறப்பில்லாத்
தூய சங்கரனுக்கு ஒப்புளவன்? என்றான்;
தொன்மை சேர் தணிகை நாயகனே! (43)

—(தொடரும்)

# எம்பெருமானார் பிரபாவம்

திரு. தேவி இராமாநுசதாசர்,
சென்னை.

முன்னுரை :

திருமால்நெறியின் ஆசாரியப் பெருமக்களில், மிகவும் தலைசிறந்த ஒருவராகத் திகழ்பவர் இராமாநுசர் ஆவர். இவ் இருள்தரும் மாஞாலத்தைத் தெருள்தரும் மாஞாலமாகச் செய்தருள்வதற்குத் திருஅவதரித்தவர், இராமாநுசர்! 'கலியும் கெடும் கண்டுகொள்மின்' என்ற ஆழ்வார் பாசுரத்தை மெய்ப்பித்தற்காகவே தோன்றியருளிய பெருஞ்சான்றோர் இராமாநுசர் எனலாம். திருவாய்மொழி ஆயிரத்தையும் ஈன்றளித்த முதல்தாய் நம்மாழ்வார் என்றால், அவற்றை உலகிற் பரப்பி வளர்த்துச் செழிப்பித்த இகத்தாய் இராமாநுசரே யாவர் எனப் பெரியோர்கள் போற்றியுள்ளனர். வைணவ சமய வரலாற்றில், இராமாநுசருக்குப் பெருஞ்சிறப்பும் முதன்மையும் உண்டு. இவருக்கு முன்னர், 'பரம வைதிக சித்தாந்தம்' எனவே வழங்கப்பெற்று வந்த வைணவப் பெருஞ் சமயமானது, இவருக்குப் பின்னர் ''எம்பெருமானார் தரிசனம்'' என்னும் சிறப்புப்பெயர் இட்டு வழங்கப்பெறுவதாயிற்று. எனின், இராமாநுசரின் அருமை பெருமைகளை யாவரும் கருதி இனிதுணரலாம்.

இராமாநுசரைத் திருவனந்தாழ்வான் (ஆதிசேடன்) அவதாரம் என்றும், விடுவச்சேனர் அவதாரம் என்றும், பெரியோர்கள்சிறப்பித்துக் கூறுவர்.

''அடையார் கமலத் தலர்மகள்,
கேள்வன்கை ஆழிஎன்னும்
படையோடு நாந்தக மும்படர்
தண்டும்ஓர் சார்ங்கவில்லும்
புடையார் புரிசங் கமும்இந்தப்
பூதலம் காப்பதற்கென்
றிடையே இராமா நுசமுனி
ஆயின இந்நிலத்தே''

எனவரும் பாடலால், திருவரங்கத்தமுதனார் இவரைத் திருமாலின் திருக்கைகளில் உள்ள ஐம்படைகளின் அவதாரமாகச் சிறப்பித்துப் பாடிப் போற்றியுள்ளார். இத்தகைய இராமாநுசரின் அருமை பெருமைகளுக்கு ஓர் அளவேயில்லை. ''எம்பெருமான் பிரபாவத்தை ஒருவாறு பேசித் தலைக்காட்டலாம், ஆனால் எம்பெருமானார் பிரபாவமோ பேசித் தலைக்காட்டலாகாதது'' என்று பெரியோர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

''ஏரார் எதிராச ரேற்றத்தைச் செப்புதற்குப்
பேரார் பெரியபெரு மாள்முதலாச்-சீரார்ந்த
அப்பிள்ளை யீறா வருநாற்பத் தைவர்போற்
செப்புபவர் உண்டோநீ செப்பு''

என்றபடி, பெரியபெருமாள் தொடக்கமாகப் பெரியஜீயர் ஈறாக ஒரு நாற்பத்து நால்வரொடு, அப்பிள்ளையும் சேர, நாற்பத்தைவர் எம்பெருமானாரின் பலவகைப் பிரபாவங்களை வெளியிட்டருளிப் புகழ்ந்து போற்றியுள்ளனர். அவர்கள் அனைவரும் புகழ்ந்து போற்றி வெளியிட்டருளியபடி, எம்பெருமானாரின் பிரபாவங்களை, இங்கு ஒருங்கே சுருங்கத் தொகுத்துணர்ந்து மகிழ்வோம்.

பெரிய பெருமாள்:

எம்பெருமானாரைக் கடாட்சித்துப் பெரிய பெருமாள் தமது தாமரைக் கண்களால் நோக்கிச் சோதிவாய் திறந்து, ''இராமாநுசரே 'பொங்கு ஓதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும்' என்கிற நம்முடைய உபய விபூதி ஐசுவர்யங்களையும் உமக்கும் உம்முடையார்க்கும் தந்திருக்கிறோம்; ஆகையால் இன்றுமுதல் நீர் இவற்றுக்கு உடையவர் என்னும் பட்டத்தை வகித்து நம் காரியத்தையெல்லாம்ஆராய்ந்து நடத்தும்'' என்று திருவுள்ளமாய் அருளினார்.

திருவேங்கடமுடையான்:

திருவேங்கடமுடையான் உடையவரைப் பார்த்து ''எம்பெருமானாரே! உமக்கும் உம்முடையார்க்கும் உபய விபூதி ஐசுவர்யங்களையும் தந்தோம் என்று நம்முடைய தெற்கு வீட்டிலிருந்து சொல்லியிருக்கிறோம் அன்றே? அதை இங்கும் சொன்னோம்; கொள்ளும்'' என்று திருப்பவளச் சோதிவாய் திறந்து அருளிச்செய்தார்.

உடையவர் திருமலைக்கு எழுந்தருளும் போது, தயிர் விற்பவளாகிய தும்பையூர்க் கொண்டி என்னும் ஆயர்குல மாது, தயிர்விலை கேட்க வந்த உடையவரைச் சேவித்து நிற்க, அவர் அவளுக்குத் தளிகைப் பிரசாதம் சாதிக்கச் சொல்லிக் கிடாம்பியாச்சானை நியமிக்க, அவரும் அப்படியே தீர்த்தமும், பிரசாதமும்சாதிக்க அத் தீர்த்தப் பிரசாத மகிமையினால் அவளுக்கு ஞானோதயம் உண்டாகி, அவளும், ''அடியேனுக்குத் தயிர் விலை வேண்டா, மோட்சம் தரவேண்டும்'' என்று பிரார்த்திக்க, உடையவரும், ''அது திருவேங்கடமுடையான் தரக்கடவர்'' என்ன, அவள், ''தேவரீர் அவருக்கு ஒரு சிறு முறிச்சீட்டுத் தரவேண்டும்'' என்ன, உடையவரும் போர உகந்து தந்தருளினார். அவளும் அதைப் பெற்றுக்கொண்டு திருமலை ஏறி விரைந்து வரக்கண்டு, திருவேங்கடமுடையான் எதிரே வந்து சிறுமுறியை வாசித்துக் கொண்டு சிரசா வகித்து, அவளுக்குத் திருநாடு பிரசாதித்தார். பிரசாதிக்காமல் எப்படியிருக்க முடியும்? தனக்கே ஆபத்து வந்தபோது சங்கு ஆழி பிரசாதித்து அளித்தருளிக் காத்தவர் இட்ட முறியாயிற்றே!

பேரருளாளர் :

உடையவர் யக்ஞமூர்த்தியுடன்(அருளாளப் பெருமாள் எம்பெருமானாருடன்) தர்க்கித்த போது, உத்தரஞ் சொல்ல மாட்டாமல் பேரருளாளர்க்கு விண்ணப்பஞ் செய்ய, அப்போது பேரருளாளர் கனவில் எழுந்தருளி, ''உடையவரே? நீர் திகைப்பது ஏதுக்கு? சமர்த்தனாயிருப்பவனான இவனை உமக்குச் சீடனாகத் தந்தோம்; நீர் உம்முடைய பரமாசாரியரான ஆளவந்தார் அருளிச் செய்திருக்கிற அகண்ட மாயாவாத கண்டனத்தைச் சொல்லி வெற்றி கொள்ளப் பாரும்'' என்று அருளிச் செய்தார்.

மற்றும் யாதவப் பிரகாசனுக்கு (கோவிந்த ஜீயருக்கு) க்கனவின் மூலமாக ''நம் இராமானுசனை ஒரு பிரதட்சணம் பண்ணி, திரிதண்ட சந்நியாசி ஆவீர்'' என்று அருளிச் செய்தார்.

**திருநாராயணப் பெருமாள்:**

இப்பெருமாள், எதிராசருக்குத் தொண்டனூரிலே கனவிலே எழுந்தருளி அழைத்துக் கொண்டுபோய், இவருக்குப் பிரசன்னராய்ப் பிரகாசிக்கையால், ''என்னுடைய செல்வப் பிள்ளையோ!'' என்று எடுத்து அணைத்துக் கொண்டு உபலாளிக்கலாம்படி எதிராச குமாரரான சௌசீல்யம் காட்டியருளினர்.

**திருமாலிருஞ்சோலை மலை அழகர்:**

ஒருநாள் திருவோலக்கத்திலே அழகர், இராமானுசனடியார்க்கு அருளப்பாடு என்று திருவுள்ளமாய் அருள, 'நாயன்தே!' என்று ஆசார்யர் எல்லாரும் எழுந்திருந்து திருவடிகளிலே சேவிக்க, பெரியநம்பி வழியில் சிலர் வாராதிருக்க, அழகரும் 'அதுவென்! நாம் அழைக்க நீங்கள் வாராதிருப்பது?' என்றுகேட்டருள, அவர்களும் ''இராமானுசனடியார்க்கு அருளப்பாடென்று தேவரீர் திருவுள்ளமாய் அருளுகையாலே, அவர் எங்கள் பெரிய நம்பி சீடனன்றோ? என்று நாங்கள் வராமலிருந்தோம்'' என்று விண்ணபஞ்செய்ய அழகரும், ''தசரத வசுதேவாதிகள் நம்மைப் புத்திர பிரதிபத்தி பண்ணினது போல இருந்தது, நீங்கள் இராமானுசனைச் சிஷ்யப் பிரபத்தி பண்ணினது'' என்றார்.

மற்றும் ஒருநாள் அழகர், கிடாம்பியாச்சானை அருளப்பாடிட்டு, ''ஒன்று சொல்லாய்'' என்று திருவுள்ளமாயருள, அவரும், ''அபராத ஸ்ஹஸ்ர பாஜனம்'' என்று தொடங்கி,''அகதிம்'' என்று சொல்ல, அழகரும் ''நம் இராமானுசனை உடையனாயிருந்து அகதிம் என்று சொல்லப் பெறாய்'' என்று திருவுள்ளமாய் அருளினார்.

**திருக்குறுங்குடி நம்பி:**

உடையவரும் முதலிகளும் திருக்குறுங்குடி நம்பியைச் சேவிக்க எழுந்தருளின அளவிலே, நம்பியும் திருவோலக்கமாக எழுந்தருளியிருந்து உடையவரைஅருளப்பாடிட்டு, 'இத்தனைபிறவிகள் பிறந்தோம் என்று தெரியாது; அந்த பிறவிகள் தோறும் மூடராய் நம்மை வந்து கிட்டாதே அதமமான கதியை யடைந்தார்கள்; இவ்வாத்மாக்கள் எல்லாரும் உமக்கு அகப்பட்ட விரகை நமக்குச் சொல்லவேணும்' என்று திருவுள்ளமாக, உடையவரும் ''தேவரீர் கேட்கும் கிரமத்திலே கேட்கில் சொல்லுகிறேன்'' என்ன, நம்பியும் இவருக்கு ஒரு இரத்தின கம்பளத்தை ஆசனமாக இட்டு, ''இனிச் சொல்லும்'' என்ன, உடையவரும் அவ்வாசனத்திலே பெரியநம்பி எழுந்தருளியிருக்கிறதாகப் பாவித்துக்கொண்டு, திருக்குறுங்குடி நம்பியின் திருச்செவியிலே இதத்தை விண்ணபஞ் செய்தார். அன்றுமுதல் நம்பியும், ''நம் இராமானுசனை யுடையோம்'' என்று அருளிச் செய்து அவரால் வைஷ்ணவநம்பி என்ற திருப்பெயரும் கொண்டார்.

**நம்மாழ்வார்:**

இவர் உலகத்தைத் திருத்துவதாக எம்பெருமானோடு மார்புதட்டி, ''நின்கண் வேட்கை எழுவிப்பனே'' என்றவர்தாமே, ''ஏ பாவம் பரமே!'' என்று கவலையுற்று, ''அகலிடத்தை ஆராய்ந்து அது திருத்தலாவதே!'' என்று,''ஈசுவரன் அவதரித்துத் திருத்தவொண்ணாத உலகத்தை நாமோ திருத்தக்கடவோம்'' என்று தாமும் தம் திருவுள்ளமுமேயாய், திரிகால ஞானத்தராகையாலே, 'கலியுங்கெடும் கண்டு கொண்மின்! ''என்று உடையவர் திருவவதாரத்தைக் குறித்து அருளிச் செய்தார்.

**திருமாலையாண்டான்:**

தம்பக்கல் உடையவர் திருவாய்மொழிக்கு அர்த்தம்கேளாநிற்க,''அறியாக் காலத்துள்ளே'' என்கிற பாசுரத்துக்கு இவர் உபகார நினைவு பரமாக அர்த்தம் அருளிச் செய்ய,ஆண்டானும் 'இது விசுவாமித்திர சிருட்டி' என்று சொல்லி அர்த்தம் அருளிச் செய்கை தவிர்ந்திருக்க, பின்பு இந்த விஷயம் அறிந்து திருக்கோட்டியூர் நம்பி எழுந்தருளி ஆண்டானை அழைத்து, ''சாந்தீபன் பக்கலிலே கிருஷ்ணன் அத்யயனம் பண்ணினதுபோல காணும்,இவர் உம்முடைய பக்கல் திருவாய்மொழி கேட்கிறது; இவ்விரண்டர்த்தமும் ஆளவந்தார் அருளிச் செய்தது காணும்'' என்றார்.

மற்றொரு சந்தர்ப்பத்தில் உடையவரும் பிள்ளையும் ஓர் அர்த்தப் பிரஸ்தாவத்திலே, ''ஆளவந்தார் இப்படி அருளிச் செய்யார்'' என்ன, ஆண்டானும், ''நீர் ஆளவந்தாரைக் கண்ணாலும் காணாதிருக்க, இப்படி அருளிச் செய்யார் என்றதற்கு ஏதுவென்?''என்ன,இவரும் ''நான் ஆளவந்தார்க்கு ஏகலவ்யன் அன்றோ?'' என்ன, மேலும் தம் குமாரர் சுந்தரத்தோளுடையாரை உடையவர் திருவடிகளிலே ஆச்ரயிக்கச் செய்தார்.

**திருவரங்கப்பெருமாளரையர்:**

தம் பக்கல் உடையவர் ஆறுமாசம் சேவித்திருந்து பாங்காக மஞ்சட் காப்பு அரைத்துச் சாத்திநீராடப் பண்ணுவித்தருளத் திருவரங்கப் பெருமாளரை யரும், பிரீதராய், ''என்னுடைய சர்வ சொத்தையும் கொள்ளை கொள்ளவோ நீர் இப்படிச் செய்தது?'' என்று உரைத்தருளி, பஞ்சமோபாய நிஷ்டையை அருளிச் செய்தார். மேலும் தம் குமாரர் திருவாய்மொழியரையரையும் உடையவர் திருவடிகளிலே ஆச்ரயிக்கச் செய்தார்.

**சரசுவதி தேவி:**

உடையவர் காசுமீர் பட்டி மண்டபத்தைக் கிட்டிச் சரசுவதி பண்டாரத்தேற எழுந்தருள அங்கே சரசுவதிதேவி தானே தன்கோவில் வாசலைத் திறந்துகொண்டு எதிரே வந்து இவரைப் பார்த்து, ''தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகமேவ மட்சனி'' என்கிற சுருதிக்குப்பொருள் சொல்லிக் காணீர்'' என்று கேட்க, இவர் யதார்த்தமான பொருளைச் சொன்னதும்,இவ்வர்த்தத்தைச் சரசுவதிதேவி கேட்டுச் சந்துஷ்டையாய், இவர் இட்டருளின பாஷ்யத்தையும்

சிரஸா வகித்து, திருக்கையைப் பிடித்துக் கொண்டு, இது சுத்தமாயிருந்தது என்று அங்கீகரித்து இவருக்கு பாஷ்யகாரர் என்று திருநாமம் சாத்தி, தன்னிடமிருந்த அயக்கீரீவரையும் எழுந்தருள்வித்துக் கொண்டுவந்து கொடுத்து, அபரிமிதமாகச் சன்மானித்தருளினாள்.

**நாதமுனிகள்:**

குளம்பின் அடியிலே நீர்தேங்கினால்குருவி குடித்துப்போம்;வீரநாராயண புரத்து ஏரியிலே நீர் தேங்கினால் நாடு விளையும் என்று நாதமுனிகள் அருளிச் செய்தார். ''பெரியபெருமாள் ஆகிய பெருங்கடலிலே ஆழ்வாராகிய காளமேகம் படிந்து, அவரது கல்யாண குணமாகிய அமிர்த நீரைப் பகுதி வந்துது, நாதமுனிகள் ஆகிற மகாமேருவிலே பெய்து, உய்யக்கொண்டார், மணக்கால்நம்பி ஆகிய அருவிகளாலே இறங்கி, ஆளவந்தாராகிய பேராற்றிலே கூடி, பெரியநம்பி ஆகிய வாய்க்காலாலே புறப்பட்டு, எம்பெருமானாராகிய பெரிய ஏரியிலே வந்து தேங்கி, நம் ஆசாரியர்கள் ஆகிய மதகுகளாலே புறப்பட்டு, இந்த உலகியல் வாழ்க்கையாகிய கழனிக்கு ஏறிப் பாய்கிறது'' என்று, எம்பார் இக்கருத்தையே விரித்துரைத்து விளக்கியிருக்கின்றார்.

**ஆளவந்தார்:**

உடையவர் ஆகிய இம்மகானுபாவன் நமது தரிசனத்திலே புகுந்தானாகில் இவன் முதல்வனாம் என்று அருளிச் செய்தார்.

**பெரியநம்பி:**

பெரியநம்பியும், தம் குமாரத்தி அத்துழாய் அம்மாளும் எழுந்தருளியிருக்கிற சமயம், உடையவரும் தம் முதலிகளுமாக எழுந்தருள, பெரிய நம்பி எழுந்திருந்து தெண்டனிட, ''இதுவென்? உடையவர் உமக்குச் சீட்ரன்றோ? இப்படிச் செய்யலாமோ?'' என்று அத்துழாய் அம்மாள் விண்ணப்பஞ் செய்ய, அதற்குப் பெரிய நம்பியும், ''அத் தாளுக்குத் தக்க தலைகாண் இது'' என்று அருளிச் செய்தார்.

மற்றொரு சமயம் உடையவரும் முதலிகளுமாக நீராடி எழுந்தருளும்போது, பெரிய நம்பி எதிரே கண்டு, தாளும் தடக்கையும் கூப்பித் தெண்டனிட, உடையவரும் அஞ்சலித்துக் கிருபை செய்தருள, இத்தை முதலிகள் கண்டு, ''இதுவென்?'' ஜீயரே! என்ன, உடையவரும் ''இப்போது அவர் இஷ்டம் அநுவர்த்திக்கையன்றோ நமக்குள்ளது'' என்ன, பிறகு அம் முதலிகளும் பெரிய நம்பி சந்நிதியிற் சென்று, ''உடையவரை நீர் சாஷ்டாங்கப் பிரணாமம் பண்ணுகைக்கு அடி என்?''என்று கேட்க,பெரிய நம்பியும், ''ஆள்வந்தாரும் முதலிகளும் என்றிருந்தேன்'' என்ன, அவர்களும், ''அதற்கு நிதானம் என்?'' என்ன, பெரிய நம்பி, ''ஆளவந்தார்க்குப் பின் அகிலார்த்த ஸ்திதி பூர்த்தியுள்ளது இவர்க்கே யாகையாலே, சதாசார்ய சந்நிதியோடு ஸச்சிஷ்ய சந்நிதியோடு வாசியில்லாமையாலே சேவித்தேன்'' என்று அருளிச் செய்தார். மேலும் தமது குமாரர் புண்டரீகாட்சரையும் உடையவர் திருவடிகளிலே ஆச்ரயிக்கச் செய்தார்.

**திருக்கோட்டியூர் நம்பி:**

இவர் உடையவர்க்குத் திருமந்திரார்த்தம் சாதிக்கும்போது, ''ஒருவர்க்கும் சொல்லாதே கொள்ளும்'' என்று ஆஞ்ஞாபித்து அருளிச் செய்ய, உடையவரும் அவர் ஆக்ஞையினை மீறி, அத்தைத் தெற்காழ்வார் திருவோலக்கத்திலே தூளிதானமாக சர்வர்க்கும் அருளிச் செய்ய, நம்பியும் இத்தை அறிந்து கோபித்தவராய், உடையவரை அழைத்து, ''ஆசாரிய ஆக்ஞையாதிலங்கநத்துக்குப் பலன் எது''என்ன உடையவரும், ''நரகமே பலன்'' என்ன,நம்பியும், ''அப்படி அறிந்திருந்தும் செய்வானென்? என்ன, இவரும், ''அடியேன் ஒருவன்மாத்திரம் நரகம் அடைந்தாலும்,தேவரீர் சம்பந்தந்தானே இவ்வாத்மாக்களை எல்லாம் உய்விக்குமென்று சொன்னேன்''என்று விண்ணப்பஞ் செய்ய, நம்பியும் போரப் பிரீதராய் ''எம்பெருமானாரே! வாரும் என்று எடுத்தணைத்துக் கொண்டு, இந்த பரஸம்ருத்தி நமக்கில்லையாய் விட்டதே! அவரோ நீர்!'' என்று அருளிச் செய்தார். மேலும் தம் குமாரர் தெற்காழ்வாரையும் அவர் திருவடிகளிலே ஆச்ரயிக்கச் செய்தார்.

**தேவகிப் பிராட்டியார்:**

திருக்கோட்டியூர் நம்பி தம்முடைய அந்திம தசையிலே குமாரத்தி தேவகிப் பிராட்டியாரை அழைத்தருளி, ''பெண்ணே! நம் பிரயாணத்தில் நீ நினைத்திருப்பது என்? என்ன, ''அய்யரே! எங்கள் ஆசார்யரான எம்பெருமானாரோடு உண்டான சம்பந்தத்தாலே தேவரீருக்குப் பேறு முற்படப் பெற்றதேஎன்று நினைத்திருக்கின்றேன்'' என்ன, அவரும் ''வளர்த்ததனால் பயன் பெற்றேன்'' என்று அப் பெண்பிள்ளையை அபிமானித்தருளி, ஆளுவந்தார் பிரசாத லப்தமான விக்கிரகத்தைச் சாதித்து, உள்ளிற் கருத்தும் வெளியாம்படி, 'எம்பெருமானார் திருவடிகளே சரணம்' என்று திருநாட்டுக்கு எழுந்தருளினார். இத்தால் எம்பெருமானாரிடத்திலே ஐயப்பாடின்றி உத்தாரகத்தை அறுதியிட்டார்.

**பெரியதிருமலை நம்பி:**

உடையவர் திருமலைக்கு எழுந்தருளும்போது திருப்பரியட்டப் பாறை அளவில் திருமலைநம்பி எதிரே வந்து தீர்த்தப் பிரசாதம் பிரசாதிக்க, உடையவரும் சுவீகரித்தருளி, நம்பியைப் பார்த்து, தேவரீரே எழுந்தருளவேண்டுமோ? வேறே சிறியவர்கள் ஒருவருமில்லையோ?'' என்ன, நம்பியும், ''நாலு திருவீதிகளிலும் ஆராய்ந்தவிடத்தில் என்னிலுஞ் சிறியாரைக் கண்டிலேன்'' என்று சொல்லி, எம்பாரை உடையவருக்கு உதக பூர்வமாகக் கொடுத்தார். மேலும் தம் குமாரர் இராமாநுசனையும் அவர் திருவடிகளிலே ஆச்ரயிக்கச் செய்தார்.

—தொடரும்

பதிவு எண். எம். 7039



அண்மையில் சென்னையில் நடைபெற்ற அகில இந்தியச் சுற்றுலா வர்த்தகப் பொருட் காட்சி (1980)யில், இந்து சமய அறநிலையத்துறையின் காட்சிக்கூடம் சிறந்து விளங்கியதற்காக வழங்கப் பெற்ற இரண்டாவது பரிசினை, தமிழக ஆளுநரின் ஆலோசகர் திரு டி. என். லட்சுமிநாராயணன், ஐ.ஏ.எஸ்., அவர்கள், நமது அறநிலையத்துறையின் ஆணையர் திரு யு. சுப்ரமணியன், ஐ.ஏ.எஸ்., அவர்களுக்கு வழங்குதல்.

வெளியிடுபவர் : ஆணையர், தமிழ்நாடு அரசு இந்து சமய அறநிலைய ஆட்சித் துறை, சென்னை-600 034.
ஆசிரியர் : ந. ரா. முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.
அச்சிட்டோர் : தமிழரசு அச்சகம், அரசினர் தோட்டம், சென்னை-600 002.